# இலக்கியப் புதையல் - 1

# நற்றிணை விருந்து

புலவர். கா. கோவிந்தன்.

# பதிப்புரை

"இலக்கியப் புதையல்" என்ற தலைப்பின் கீழ், முதல் வெளியீடாக 'நற்றிணை' என்னும் இந்நூல் இன்று உங்களை மகிழ்விக்க வருகின்றது. சங்க நூற்களில் காணப்படும் அரிய பொருள்களை எல்லாம் எளிதில் யாவரும் கற்றுணருமாறு வெளிப்படுத்துதல் தமிழிற்குச் செய்யும் சீரிய தொண்டுகள் பலவற்றுள் ஒன்றாகும். சங்க நூற்கள் கடினமானவை என்ற அச்சத்தை அகற்றி, யாவரும் சங்க நூற்களைக் கற்குமாறு உணர்ச்சியையும் ஆர்வத்தையும் உண்டாக்கும் முறையில் இந்நூல் எழுதப்பட்டுள்ளது. மற்றும், இந்நூல் வரிசைகள் சங்க நூற் செல்வப் பேழையின் திறவுகோல்களாகவும் இலங்கும் தகையன.

முன்னோர் நமக்குத் தேடிவைத்துள்ள செல்வக் களஞ்சியங்களை நாம் உணராதிருப்பின் நம் தமிழ் மொழியின் அருமை பெருமைகளை நன்குணரமாட்டாதவர்களாவோம். உயர்ந்த கருத்துக்களை விழுமிய நடையில் கொண்டு திகழ்வன சங்க நூற்கள். அவைகளைக் காலத்திற்கு ஏற்ப மக்களுக்குப் பயன்படச் செய்தலே தாய்மொழிக்குச் செய்யும் சீரிய தொண்டு எனப்படும்.

தமிழகத்தில் பண்டு வாழ்ந்த மக்களின் வாழ்க்கை நிலையை உள்ளவாறு தெளிவாக விளக்குவன சங்க நூற்களே. ஆதலின் அவற்றைத் தமிழராவார் நன்கு உணர்தல் இன்றியமையாததே. 'தமிழ் மொழியில் நல்ல உரைநடை நூல்கள் இல்லையே' என்ற குறையைப் போக்கவும், 'சங்க நூல்கள் எல்லாம் செய்யுட்களாக

உள்ளனவே, அவற்றை யாங்ஙனம் எவ்வாறு உணர்வோம்' என்று இரங்குவார் ஏக்கத்தைப் போக்கவும், தமிழகத்தின் தனிப் பெருமாண்பை விளக்கவும், தமிழ் மொழியிற் காணும் சீரிய கருத்துக்களை யாவரும் உணர்ந்து களிக்கவும் 'இலக்கியப் புதையல்' என்னும் இந்நூல் வரிசை வெளிவருகின்றது. அவற்றுள் இது முதலாவதாக வருவது.

இதனை அடுத்து, எட்டுத் தொகை நூல்களுள் பிறவும் இம்முறையில் வெளிவரும்.

இந்நூல் எளிய இனிய நடைகொண்டு திகழ்கின்றது. ஐந்திணை வகையால் இந்நூல் ஆராயப்பட்டு, மக்களின் வாழ்க்கை, சமயம், கலை, தொழில், நாகரிகம், பண்பு முதலியன விளக்கப்படுகின்றன. இந்நூல் நற்றிணையைக் கற்கப் புகுவார்க்குப் பெரும் பயன் தருவ தொன்றும். சுருக்கமாகவும் விளக்கமாகவும், தெளிவாகவும் இனிமையாகவும் இடை இடையே ஏற்ற விடங்களில் சுவைபட அமைந்த மேற்கோள்களுடன் நன்முறை பற்றி எழுதப்பட்டுள்ள இந்நூல் எவ்வகையாலும் யாவர்க்கும் நற்பயன் அளிக்கவல்லதாகும். இதனையும் இதனைப்போல் பிற நூல்களுக்குரிய இனி வெளிவரவுள்ள நூல்களையும் எழுதித் தர முன் வந்த புலவர், கா. கோவிந்தன் அவர்கட்கு எம் மனமார்ந்த நன்றி.

இத்தகைய அரிய தொண்டில் ஈடுபட்டுள்ள எம்மை ஊக்கி ஆக்கம் அளித்து, இந்நூல் போன்ற நூல்களை வெளியிடற்கு வேண்டும் துணை புரியுமாறு தமிழ்ப் பெருமக்களைக் கேட்டுக் கொள்கிறோம்.

நா. பழநியப்பன்.

# முன்னுரை

தமிழ்நாட்டில் புத்துணர்ச்சி பெருகி வளருங் காலம் இது.
மிழ்நாட்டு அரசியலில் தோன்றியுள்ள விழிப்புணர்ச்சியின்
பனாய், இயல் இசை நாடகங்களிலும் புதுமையும்-புதுப்
பாலிவும் இடம் பெறும் காலம் இக்காலம்; தமிழ்நாடு இருண்டு,
மிழர் தம்மை மறந்திருந்த காலம் மறைந்துபோக, தமிழர்
ம்மை உணரத் தொடங்கிய காலம். தமிழ்நாட்டில் ஒளி
ரவத் தொடங்கியுள்ளது. தம்மையும், தம் நாட்டையும், உலக
ரங்கின் உயர்ந்த இடத்தே வைத்தல் வேண்டும் என்ற தமிழ்
க்களின் வேட்கையின் விளைவு அது. வாழ்க அவர் வேட்கை!
ளர்க அவர் ஆர்வம்!

இரு பொருளை ஒருங்குவைத்து நோக்கிய வழியே, ஒரு
பாருளின் உயர்வு தோன்றும்; ஆகவே, தம்மை உயர்நிலைக்
க் கொண்டு செல்ல விரும்புவார், தம்மைச் சுற்றி வாழ்வார்
ம் நிலையோடு, தம் நிலையை ஒருங்குவைத்து ஒப்பு நோக்குதல்
வண்டும்; ஆனால், ஓரினத்தின் உயர்விற்கு அவ்வொப்பீடு
ன்றுமட்டும் போதாது. தம் நாட்டில், தமக்குப் பல ஆயிரம்
ண்டுகளுக்கு முன்னே வாழ்ந்த தம் முன்னோர் வாழ்க்கை
லையினைத் தம் வாழ்க்கை நிலையோடு வைத்து ஒப்பு
நாக்குதலும் வேண்டும்; ஒப்புநோக்கி, தம் வாழ்க்கை நிலை
லும், தம் முன்னோர் வாழ்க்கைநிலை இழிவுடைத்தாயின்
தைக் கைவிடுதல் வேண்டும்; அத்தாழ்நிலையிலிருந்து இவ்
யர்நிலை அடையத் தாம் மேற்கொண்ட வழி முறைகளை
மலும் விடாது மேற்கொள்ள வேண்டும்; அதற்கு மாறாக,
வ் வாழ்க்கைநிலை, தம்முடைய வாழ்க்கை நிலையிலும் சீரும்,
றப்பும் பொருந்திச் செம்மை உடைத்தாயின், அந்நிலையை
மற்கொள்ளுதல் வேண்டும்; அவ்வுயர்நிலையில் வாழ்ந்த தாம்
வ்விழிநிலை அடையத் தாம் செய்த தவறுகள் யாவை எனக்
ண்டு, தவறிய அவ்வாழ்க்கை முறைகளை மறந்து கைவிடுதல்
வண்டும்.

உலகில் தோன்றி, உயர்நிலைபெற்றுத் தம் புகழ் நாட்டிச்
சென்ற சான்றோர் பலருடைய உருவ ஓவியங்களையும், உருவச்
லைகளையும் ஆங்காங்கே திறந்தும் நாட்டியும் சிறப்புச் செய்யும்

விழாக்கள் பல நடைபெறுகின்றன; அவ் விழாக்கள், அவர்க்குச் சிறப்பும், பூசனையும் செய்தற்பொருட்டு நடைபெறவில்லை. அன்னார், புலவர் பாடும் புகழ்நிலை எய்த ஆற்றிய அருஞ் செயல் யாவை? அவர் தம் வாழ்க்கை சென்ற நன்னெறி யாது? என்பனவற்றைக் கண்டு, நாமும் அச்செயல் புரிந்தும், அந் நெறி சென்றும், அவர்போல் உயர்நிலை எய்துவதற்காம் எண்ணத்தைத் தூண்டுவதற்கே அவ் விழாக்கள் நடைபெறு கின்றன. ஆங்கிலப் புலவர் ஒருவர், "இறந்தும் இறவாப்புகழ் பெற்ற பெரியாரின் வாழ்க்கைநிலை, நாமும், நம்முடைய வாழ்க்கை நிலையை நனிமிக உயர்ந்ததாக ஆக்கிக் கொள்ளுதல் கூடும் என்பதை நினைவூட்டுகிறது; வாழ்க்கைப் பெருங்கடலில் வாழ வழியற்றுக் கலங்கும் மக்களை வளமார் வாழ்வுக்கரையில் கொண்டு சேர்க்கும் வங்கமாய்த் துணைபுரிகிறது" என்று கூறி யுள்ளார்.

பழம் பெரும் மக்களின் வாழ்க்கை நிலையினை விளங்க உணர விரும்புவார்க்குப் பெருந்துணை புரியவல்லன பழந் தமிழ் இலக்கியங்களாம். பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகக் காட்சிகளைப் படக் காட்சிபோல், தெளிவாக எடுத்துக் காட்டுவன அவ்விலக்கியச் செல்வங்கள். பழந்தமிழ் இலக்கியங்கள், தமிழர்க்குக் கிடைத்த, கிடைத்தற்கரிய புதையல்; பாடுபட்டுத் தேடிப் பயன் துய்க்காது புதைத்து வைக் கும் பணப் புதையல் போன்றதன்று இவ்விலக்கியப் புதையல். எவரோ தேடிப் புதைக்க, எவரோ தோண்டிப் பயன்கொள் ளும் பழியும் இலக்கியப் புதையலுக்கு இல்லை. பழந்தமிழ்ப் பெரியார்கள், வாழ்வாங்கு வாழ்ந்து, வாழ்வில் இன்பம் கண்டு, தாம் கண்ட அவ்வளமார் இன்பத்தைத் தம் பின் வருவாரும் நுகர்ந்து இன்புற எண்ணி விட்டுச் சென்ற விழுச் சிறப்புடையது இலக்கியப் புதையல்; முன்னோர்விட்டுச் சென் றதை, அவர் பின்வந்தோர் பெற்றுப் பேரின்பம் நுகர்கின்றனர் என்ற விழுமிய சிறப்புடையது இலக்கியப் புதையல்.

தமிழ் இலக்கியம் ஒரு பெருங்கடல்; எட்டுத் தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க் கணக்கு, ஐம்பெரும் காப்பியம், ஐஞ்சிறு காப்பியம் என விரிந்தும், பரந்தும் செல்லும் அக் கடற் பரப்பில் முதற்கண் சென்று சேர்ந்த ஆற்றுவெள்ளம் நற்றிணை நானூறு. நானூற்று அறுபதின்மர்க்கும் மேற்பட்ட புலவர்கள் பாடிய, இரண்டாயிரத்து முந்நூற்று அறுபதுக்கும் மேற்பட்ட பாடல்களைப், பின்வந்த பெரியார்கள் சிலர், எட்டுத் தொகை, பத்துப் பாட்டு எனும் இரு பெரும் பிரிவாகத்

தா(ெ)த்துப் ரித்து வகை செய்தனர்; அப்பாக்களை ஆராய்ந்த
புவர்கள், சுறும் பொருளால் ஒற்றுமையுடையனவற்றை ஒரு
நூலாகவும், பாடிய பாவினத்தால் ஒற்றுமை உடையவற்றை
ஒரு நூலாகவும், பாட்டின் அடி அளவால் ஒற்றுமை உடைய
வற்றை ஒரு நூலாகவும் வகை செய்தனர்; புறநானூறு பொரு
ளால் பெயர் பெற்றது.

கலித்தொகையும், பரிபாடலும் பாவினத்தால் பெயர்
பெற்றன; ஏனைய பாட்டின் அளவால் பெயர் பெற்றன. நீண்ட
அடிகளால் ஆன பாக்களை ஒன்று தொகுத்து நெடுந்தொகை
எனப் பெயர் இட்டனர்; குறுகிய அடிகளால் ஆன பாக்களை
ஒன்று தொகுத்துக் குறுந்தொகை எனப் பெயரிட்டனர்; மனிமிகக்
குறுகிய அடிகளால் ஆன பாக்களை ஒன்றுதொகுத்து ஐங்குறு
நூறு எனப் பெயரிட்டனர்; நீண்டும், குறுகியும் தோன்றாது
நடு நிகரவாய அடிகளால் ஆன பாக்களை ஒன்று தொகுத்து
நற்றிணை எனப் பெயரிட்டனர். அவ்வாறு வகுத்துத் தொகுத்
துப் பெயரிட்ட நூல்களை வரிசை செய்யுங்கால், "நற்றிணை
நல்ல குறுந்தொகை" என நற்றிணையை முதற்கண் வைத்துப்
பாராட்டினர். அதனால், தமிழ் இலக்கியங்களை எண்ணுவார்
உள்ளத்தில், முதலில் இடம்பெறும் விழுச்சிறப்பு நற்றிணைக்கு
உரித்தாயிற்று.

தமிழ் இலக்கியங்கள், அகப்பொருள் நூல்கள், புறப்
பொருள் நூல்கள் என இருவகைப்படும்; புறப்பொருள்,
மக்களின் ஆண்மை, ஆற்றல், அரசியல், பொருள், புகழ்
முதலாயின குறித்துப் பாராட்டுவது. அகப்பொருள், உரு
வாலும், நலத்தாலும் ஒற்றுமை உடைய ஒருவனும் ஒருத்தியும்
அன்பால் கூடித், தம் பெற்றோர் அறியாமல் தம் காதலை
வளர்த்துப், பின்னர் பலர் அறிய மணந்து, இல்லற வாழ்வு
மேற்கொண்டு இன்புற்றுவாழும் வாழ்க்கை வகைகளை விளங்க
உரைப்பது.

நாட்டின் நல்வாழ்விற்கு, வீட்டின் நல்வாழ்வே வழிகாட்டி
யாம். வீடே நாடு ஆதலின் அக்காலப் பெரியோர்கள், நாட்
டினும், வீட்டிலேயே தம் நாட்டத்தை மிகுதியும் செலுத்தினர்.
அதனால், புறப்பொருள் கூறும் நூலினும், அகப்பொருள்கூறும்
நூல்கள் அதிகமாயின; அத்தகைய அகப்பொருள் கூறும்
நூல்களுள் முதற்கண் வைத்துச் சிறப்பிக்கப் பெறுவது
நற்றிணை.

நற்றிணை கணவன், மனைவியர்க்குரிய காதல் கடமைகளைக் கவினுறக் கூறுகிறது; மக்கள் குலம் மாண்புறத்தக்க வழி வகைகளை விளங்கக் கூறுகிறது; அத்தகைய பழமையோர் வாழ்ந்த நாட்டின் அரசியல் அமைதியை எடுத்து அறிவுறுத்துகிறது; அவர் வாழ்ந்த நாட்டின் வளத்தை வாயாரப் புகழ்கிறது; அம்மக்களோடு வாழ்ந்த, உயிரினங்களின் வாழ்க்கை முறைகளை, அவை மக்களுக்கு எடுத்துக்காட்டும் அறிவுரைகளைத் தெளிவாக எடுத்துக் கூறுகிறது.

பொருள் விளங்கும் எளிய, இனிய சொற்கள்; செவியின்பம் ஊட்டும் தொடர்கள்; கருத்திற்கு இன்பம் ஊட்டும் பொருட்செறிவு; அறிவிற்கு விருந்தூட்டும் அறவுரைகள். இவற்றின் கருவூலம் நற்றிணை; தமிழ் இலக்கியப் புதையலுள் நற்றிணைச் செல்வம், நாம் பெறவேண்டிய பெரும்பேறு; அப்பேற்றினைப் பெற்றுப் பெருவாழ்வு வாழ்வோமாக.

**கா. கோவிந்தன்.**

# நற்றிணை

## 1. நாடு

### வானம் பொய்ப்பினும் வளம் தரும் மலை :

உயிர்களுக்கு உணவு இன்றியமையாதது ; அவ்வுணவினும் இன்றியமையாதது நீர் ; உயிர்கள், உணவின்றி ஒருசில நாள் வாழினும் வாழும் ; ஆனால் உண்டற்குரிய நீரின்றி ஒருபொழுதும் வாழா. அத்துணைச் சிறப்புடையது நீர். அம்மட்டோ ! அவ்வுயிர்கள் உண்ணும் உணவை ஆக்கிஅளிப்பதும் அந்நீரே. உணவுப் பொருள்களை விளைத்துத் தருவது நிலமேயாயினும், அந்நிலம், நீரின் துணைபெற்ற வழியே விளையும் ; அதனால், " உணவெனப்படுவது நிலத்தொடு நீரே " என்று அறிந்து கூறினர் ஆன்றோர் ஒருவர். வேட்கை தீர்க்கும் உணவாகியும், பசி தீர்க்கும் உணவை ஆக்கியும் உயிர்களை

வாழ்விக்கும் உயர்வுடையது நீராதலின், அந் நீரின்றேல் உலகியல் நடவாது; "நீர் இன்றி அமையாது உலகு" என்றார் வள்ளுவர்.

உலகை உய்விக்கும் உயர்வுடையது நீர் என்றால், அந்நீர், உலகில் இடையற்றுப் போகாமல் இருந்து வளந்தர வழி செய்வது மழை; மழை பெய்யாது பொய்த்துவிடின், கிணறும் குளமும் வற்றிப்போகும்; ஆற்றில் நீர் சுரவாது; கரைகாணாப் பெருநீர்நிலையாய கடலும் வற்றிப்போகும். "நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும், தடிந்து எழிலிதான் நல்காதாகி விடின்" என்றார் வள்ளுவர். மழை, என்றும் மாறாது பெய்யும் என எதிர் நோக்குவதற்கில்லை; தொடர்ந்து பல ஆண்டுகள், அது தன் தொழிலை மறந்துவிடுவதும் உண்டு; மழை ஓராண்டு தவறினும், மாநிலத்தில் உயிர்கள் மடிந்துவிடும் என்றால், அம்மழை பல ஆண்டு தவறிவிடின், அதனால் உலகிற்கு உண்டாம் கேட்டினை, அம்மம்ம! உரைப்பதற் கியலாது; நிலம், விளைவாற்றலை இழந்துவிடின், வேண்டும் உரம் இட்டு, அதற்கு அவ்வாற்றலை மீண்டும் உண்டாக்கிவிடலாம்; நீர் வற்றிப்போயின், ஆறுகளில் ஊற்றுக்கால்களை உண்டாக்கியும், கிணறு குளங்களை ஆழப்படுத்தியும் அந்நீரைப் பெற்றுவிடலாம்; ஆனால், மழைமறைந்துவிடின், மறைந்த மழையைப் பிடித்துக் கொணர்ந்து பயன் கொள்ளுதல் இயலாது; அது மக்க ளாற்றலுக்கு அப்பாற்பட்டது; அதனால் மழைபெரு நாடுகள் வளமிழந்து வறுமையுற்றழிதல் உறுதி.

அத்தகைய தாழ்நிலை அடையாது, மழை குறித் துக் கவலை கொள்ளாது வாழ்ந்த நாடும் உலகில் ஒன்று இருந்தது; அந்த நாடு வேறு எந்த நாடும் அன்று; நம் செந்தமிழ் நாடே; ஆனால், அந்தச் சிறப்பு, அந்

...ற்கு இன்று இருப்பதன்று; இரண்டாயிரம் ...ாடுகட்கு முன்பு இருந்தது.

அன்று நம் தமிழ்நாடு மலைவளத்தால் மாண்புற்...ந்தது. வானுற உயர்ந்த மலைத்தொடர்களைக் கொண்...ந்தது. அம்மலைத்தொடர்கள், தம்மகத்தே எண்ணற்ற ...சுனைகளைக் கொண்டிருந்தன. அந்நீர் நிலைகளில் ...ாலத்தே நிறையும் நீர், பல்லாண்டாயினும் வற்றாது ...ங்கிப் பாய்ந்துகொண்டிருக்கும்; அதனால் அம்மலை...த் தன் எல்லைக்கண் கொண்டிருந்த தமிழகம், மழை ...ஆண்டு பெய்யாது பொய்த்த காலத்திலும், அம்மலை...னின்றும் பெருகி ஓடிவரும் அருவிகளால் நீரின் பயன் ...ற்று நிலைகுலையாது நின்று விளங்கிற்று; அன்று ...த அரிய அருவிக் காட்சியைக் கண்டும், அம்மலை...த்தால் வாழ்வுபெற்றும் மகிழ்ந்த பெரியார் ஒருவர், ...ரத இன்று வாழும் நாம் கண்டு மகிழுமாறு, அழகிய ...ட்சியாக்கிக் காட்டியுள்ளார்.

பன்னள்
கருவி வானம் பெய்யாதாயினும்
அருவி ஆர்க்கும் அயம் திகழ் சிலம்பின்
வான்தோய் மாமலைநாடு. 1

**...ளாவிளையுள் :**

ஒருவர் ஒரு பொருளைக் கேளா முன்பே, அவர்க்கு ...ப்பொருள்வேண்டும் என்பதை உணர்ந்து கொடுப்...பார் உயர்ந்தோர். அவ்வுயர்வு நம் தமிழகத்தின் ...ண்ணிற்கும் உண்டு. மக்கள் உழைப்பின் பயனை

1 நற்றிணை: 365. கிள்ளிமங்கலங் கிழார் மகனார்–சோகோவ...ர். கருவிவானம்–இடி மின்னல்களோடு பெய்யும் மழை. ஆர்க்குர்–...லிக்கும். அயம்–சுனைகள். திகழ்–விளங்கிய. சிலம்பின்–பக்க மலைகளை...டைய.

உணராத காலம் பழந்தமிழ்க் காலம்; உழைக்கும் கருத்தின்றி ஓய்ந்து கிடப்பார்க்கு உழைத்தால் பெறலாம் பயன் இது என்பதை உரையால் உணர்த்துவதினும், அவ்வாறு உழைப்பதால் பெறும் பயனை அவர் உழைக்கா முன்பே அளித்து, உழைத்தால் இப்பயனைப் பெருமளவில் பெறலாம் என உணர்த்துவது நிறைந்த பயனைத் தரும்; அந்நிலையில் உழைக்கத் தெரியாது, உழவுத் தொழிலின் திறம் அறியாது வாழ்ந்த அக்கால மக்களுக்கு, நிலங்கள் அவர் உழைப்பினை எதிர்பாராதே, தாமே விளைந்து உணவுப் பொருள்களைத் தந்து உதவின. அவ்வாறு அவை தந்த இயற்கைச் செல்வங்களைப் பெற்றுப் பயன் நுகர்ந்த மக்கள், உழைத்தால் அந்நிலம் இவற்றினும் மிகுதியாகப் பயன் தரும் என உணர்ந்தனர்; உணர்ந்து உழைத்தனர்; காடுகளை அழித்து நாடுகளாக்கினர்; வரப்பு அமைத்து நிலம் வகுத்தனர்; அந்நிலத்தை உழுது தினைமுதலாம் பொருள்களை விளைத்தனர்; இதுகாறும் உழைக்காது வாழ்ந்த மக்கள் உழைக்க முன்வந்தமை கண்ட நிலங்கள், அவர்கள் எதிர் நோக்கியதைவிட மிகுதியாக விளைந்து அவர்களை மகிழ்வித்தன. உழைப்பின் பயனை உணர்ந்த மக்கள் தம் உழைப்பின் பயனாய் உண்டாகும் உணவுப் பொருள்களைப் பிறர் கவர்ந்துபோகாவாறு காத்தனர். தமிழகம், நிலத்திற்கடியில் நீண்டு பருத்த வள்ளிக்கிழங்குகளை ஈன்றது; மரக்கிளைகளில் நிறைந்த தேன் கூடுகளைக் கட்டித் தந்தது. தமிழர் சிறிதே தொழிலாற்றினாராயினும் நிறைய விளைந்து பெரும்பயன் தந்தது. அவ்வாறு பயன் பெற்ற தமிழர், அவ் விளை பொருள்களைக் கிளிமுதலாம் பறவைகள் கவர்ந்து போகாவாறு காவல் மேற்கொண்டனர். தமிழ் மக்கள் உழைப்பின் திறம் அறிந்து உழுது உழைத்துப் பயன் கொண்ட பழைய தமிழகக் காட்சியைப்

படமாக்கிக் காட்டியுள்ளார் ஒரு புலவர். அக்காட்சியை நீவிரும் கண்டு களியுங்கள் !

*கிழங்கு கீழ் வீழ்ந்து, தேன்மேல் தூங்கிச்*
*சிற்சில வித்திப் பற்பல விளைந்து*
*தினைகிளி கடியும் பெருங்கல் நாடு.*[1]

**பொன் பூக்கும் நாடு :**

பொன் பொருள்களுள் சிறந்தது ; பொருள், பொன் எனும் பெயராலும் வழங்கப்பெறும் ; மண்ணாசை, பொன்னாசை என வழங்குவது அறிக. பொருள்களுள் மிக்க மதிப்புடையது பொன் ; பொன், வெள்ளி, இரும்பு, செம்பு முதலாம் மண்தரு செல்வங்களில், பொன் ஒளியும் உறுதிப்பாடும் உடையது ஆதலின், அது, மக்களால் பெரிதும் விரும்பப் பெறுகிறது. பொன்னை விரும்பாத ஆடவரையோ, மகளிரையோ காணல் அரிதினும் அரிதாம்; பொன்னால் ஆகாதது எதுவுமில்லை. மக்களை அழகுடையராக்கும் அணிவகைகளை ஆக்கப் பயன்படுவது பொன். அதனால், பொன்னிற்குத் தேவை மிகுதியாயிற்று. அப்பொன்னை எப்பொருள் தந்தேனும் பெறுதல் வேண்டும் என்பதில் நாடுகள் பேரார்வம் காட்டின. தம் நாட்டில் உண்டாம் உணவு உடை முதலாம் பொருள்களைத் தந்து, பொன்னைப் பெற்றன. அவ்வாறு பொருள் தந்து பொன்னைப் பெற்ற நாடுகள் சிறந்து விளங்கின. அகில், மிளகு, ஆரம் முதலாம் பொருள்களோடு தமிழகத்தினின்றும் சென்று, பொன்னோடு திரும்பிய கப்பல்கள் கணக்கில. “ யவனர் தந்த

1. நற்றிணை : 328. தொல்கபிலர்.

கீழ்வீழ்ந்து-கீழ் இறங்கி மண்ணுக்கடியில் விளைந்து. மேல்தூங்கி-மலையிலும் மரத்திலும் மேலே தொங்கி. வித்தி-விதைத்து. கடியும்-ஓட்டும். பெருங்கல்-பெரியமலை.

வினைமாண் நன்கலம் பொன்னொடு வந்து கறியொடு பெயரும் வளங்கெழு முசிறி"1 எனத் தமிழகத்தின் பொன் வளத்தைப் பாராட்டியுள்ளார் ஒரு புலவர்.

பொருளைத் தந்து பொன்னைப் பெறும் நாடே, நாடுகளில் சிறந்து விளங்கும் என்றால், பொன்னைப் பிறநாடுகளில் பெறுவது வேண்டாவாறு, அப்பொன்னைத் தன்னகத்திலேயே கொண்டிருக்கும் நாடு, உலக நாடுகள் அனைத்திலும் தலை சிறந்த, உலக நாடுகளுக்கெல்லாம் உதவும் உயர்வுடைய நாடாய் விளங்கும்; அத்தகைய வளம் விளங்கும் நாடுகளுள் தமிழகமும் ஒன்று; பழந்தமிழ் நாட்டில் பொன் மல்கிக் கிடந்தது; அதுவும், மக்கள் அரிதின் முயன்று தேட வேண்டியதின்றி எளிதிலேயே கிடைத்தது. பொன்னைப் பெற அம்மக்கள் நிலத்தை ஆழ வெட்டவுமில்லை; மலைப் பாறைகளைக் குடைந்து உட்புகவுமில்லை. அது, எங்கும் எவர்க்கும் எளிதிற் கிடைத்தது. கோழிகள்கிளறும் பழங்குப்பைகளிலும் அது கிடைத்தது; பொன், கோழிகளின் காலிற் சிக்கிப் புறம்போந்து மின்னிற்று. பொன்னை அவ்வளவு நிறையப் பெற்றிருந்தது நம் பழந்தமிழ் நாடு.

" வாரணம்
முதைச் சுவல் கிளைத்த பூழி, மிகப்பல
நன்பொன் இமைக்கும் நாடு." 2

---

1 அகநானூறு : 149. எருக்காட்டூர்த்தாயங் கண்ணனார். யவனர்-வாணிகம் கருதித் தமிழகம் வந்து வாழும் வெளிநாட்டு மக்கள் தந்த-செலுத்திவந்த. கலம்-கப்பல். கறி-மிளகு. முசிறி-மேலைக்கடல் துறைமுக நகரம்.

2 நற்றிணை : 389. காவிரிப்பூம் பட்டினத்துச் செங்கண்ணனார். வாரணம்-கோழி. முதைச்சுவல்-பழங்கொல்லை. கிளைத்த-கிளறிய. பூழி குப்பை.

நிலம், எங்கும் ஒரு தன்மையாய் இருப்பதில்லை. சில இடங்களில் கண்ணொளி நுழையாக் காடாக இருக்கும்; வேறு சில இடங்களில் விண்ணையிடிக்கும் உயர்ந்த வெற்பாக இருக்கும்; நீர் நிறைந்த பள்ளமாகவும், மர நிழல் காணா மணல் வெளியாகவும் இருக்கும். மற்றும் சில இடங்களில், மலையும், காடும், மணலும், கடலுமாக அமைந்த நிலப்பகுதி ஒவ்வொன்றும், ஒவ்வொரு வகையால் பயனுடையவாகும். தமக்கு வேண்டும் பொருளையெல்லாம் அளித்துதவும் அந்நிலப் பகுதிகள், தாம் வாழ்தற்கேற்ற வாறு அமையாமை கண்ட மக்கள், அவற்றாலாம் பயனைக் கொள்வதோடு அமையாது, அவற்றைத் தாம் வாழ்தற்கேற்றவாய் மாற்றியும் அமைத்தனர்; காட்டை அழித்தும் மலையை உடைத்தும், கடல் நீருக்கு அரண் அமைத்தும், மணலை மாற்றியும் நாடு கண்டனர்; அவ்வாறு காட்டையும், கடலையும், மணலையும், மலையையும் பயன்கொள்ளும் வகையினை அறிந்து கொண்டமையால், மக்கள், காடுகளையும், கடல்களையும் கண்டு கலங்கவில்லை; மணல் வெளியையும், மலைகளையும் கண்டு மருளவில்லை, " நிலமே! நீ காடே ஆகுக! அல்லது கடலே ஆகுக! மலையே ஆகுக! மணல் வெளியே ஆகுக! நின் கண் வாழும் யாம் நல்லராயின், நின் தொன்மை இயல்பு யாதேயாயினும், நீயும் நல்லவை ஆகுவை" எனக் கூறும் நல்லறிவுடையராய் நற்பயன் எய்தினர்.

நாடு ஆக ஒன்றோ; காடு ஆக ஒன்றோ;
அவல் ஆக ஒன்றோ; மிசை ஆக ஒன்றோ;
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை, வாழிய நிலனே!" 1

1 புறநானூறு: 187. ஔவையார். ஒன்றோ-எண்ணுப் பொருள் குறிக்கும் ஓர் இடைச் சொல். அவல்-பள்ளம். ஈண்டு-கடல். மிசை-மேடு. ஈண்டு-மலை.

ஒரு நாடு, இந்நிலப் பகுதிகள் நான்கையும் ஒருங்கே பெற்றிருப்பதில்லை ; சில நாடுகள் முற்றிலும் மலைகளையே பெற்றிருக்கும் ; காட்டுச் செல்வம் ஒன்றையே பெற்றிருக்கும் சில நாடுகள் ; ஆற்றுவளம் தவிர, வேற்று வளம் அறியா நாடுகள் பல ; நாற்புறமும் கடலே சூழ, அக்கடற்படு பொருளல்லது பிறபொருள் அறியா நாடுகளும் உள. நால்வகைச் செல்வமும் ஒருங்கே, ஓரிடத்தே நிலைபெற விளங்கும் நாடுகள் ஒரு சிலவே. அவற்றுள் நம் தமிழ் நாடு தலை சிறந்தது.

# 2. மலை நிலம்

நிலங்கள் நான்கனுள் முதற் கண் தோன்றிய நிலம், மலைநிலம் ; மக்கள், உழைத்து வாழும் வகை அறியாது வாழ்ந்த காலத்தில், அவர்களுக்கு இடம் அளித்துப் பேணிய பெருமையுடையது மலை நிலம் ; இயற்கை அளித்த காய்கனி கிழங்குகளால் அவர்கள் உயிரை ஓம்பிய உயர்வுடையது அம்மலை நிலம். மழையையும் வெயிலையும் மறைக்கும் மாளிகைகளென மலைக்குகைகளைக் கொடுத்துக் குடியோம்பியது அக்குன்று கெழு நாடு. பளிங்கெனத் தெளிந்த சுனைநீரும், அச்சுனைகளின்றும் பெருகி ஓடும் அருவி நீரும் அளித்து, அம்மக்களின் தண்ணீர் வேட்கையைத் தணித்ததும் அம்மலை நிலமே. இவ்வாறு, அக்கால மக்கள், கண்விழித்து நோக்கும் இடங்களிலெல்லாம், அவர்க்கு வேண்டும் உணவுப் பொருள்களையும், உண்ணும் நீர் நிலைகளையும், உறங்கும் இடங்களையும் வைத்துப் பெருமையுற்றது அம்மலை நிலம். அம்மலை வளத்தை, அன்று தாம் கண்டு மகிழ்ந்த அம் மலைக் காட்சிகளை, அழகிய உயிரோவியமாகத் தீட்டி

அளித்துள்ளனர் புலவர். தாம் கண்ட மரம் செடி கொடிகள், அவற்றின் பன்னிற மலர்கள், அம்மலர்களின் பல்வேறு மணங்கள், அம்மலர்களில் நிறைந்துவழியும் தேன், நிறத்தாலும் மணத்தாலும் மலர்களை அறிந்து சென்று அத்தேனைக் குடிக்கும் வண்டு, அவ்வண்டு எழுப்பும் இன்னிசை, புலி, யானை முதலாம் பொல்லா விலங்குகள், அவ்விலங்குகளின், வீரமும் காதலும் விளங்கும் வாழ்க்கை முறைகள், கிளியின் மழலை, மயிலின் சாயல், மரம் முதலாம் அந்நிலப் பொருள்களைப் பயன் கொண்டு வாழ்ந்த மலைநில மக்கள், அம்மக்களின் மாண்புமிகு நல்வாழ்வு, அவர்கள் அறிவு நலம், அழகின் திருவுருவம், ஆண்மையின் ஆற்றல், அன்புத்தளை ஆகிய நலங்களெல்லாம் ஒருங்கே தோன்ற, உள்ளதை உள்ள வாறே காட்டும் காலத்தொலைநோக்கி போல் காட்டிச் சென்றுள்ளனர் புலவர். அக்காட்சியைக் காணும் அறி வுடையார்க்கு, அப்புலவர் தீட்டிய ஓவியத்தை உணரும் உள்ளுணர்வுடையார்க்கு, அக்காட்சி இன்றும் என்றும் கண்டு களிக்கத்தக்க கவின்மிகு காட்சியாகும். அக்காட்சிச் சாலைக்குள் புகுந்து, சில பல காட்சிகளைக் கண்டு களி கூருவோமாக.

**பிரிந்தோர் இரங்கும் பெருமலை :**

வான் அளாவிய வரைகள் ; அவ்வரைகள் மீதும், அவ்வரைகளை அடுத்தும் வளர்ந்துள பெருமரங்கள் ; எங்கு நோக்கினும் தேனடைகள் ; அத்தேனடைகளி னின்றும் இடையறாது ஒழுகும் தேன், குலைகுலையாய்க் காய்த்துத் தொங்கும் மா, பலா வாழை முதலாம் கனி வகைகள் ; மலைக்குச் சூட்டிய மாலையோ எனக் கண்டவர் மருளுமாறு, வெண்ணிற நுரை தெறிக்கக் கீழ்நோக்கிப் பாய்ந்தோடும் அருவிகள் ; மலையின் அடிவாரத்தில், அந்

நிலத்து வாழ்குறவர் விளைத்த வரகு, சாமை முதலாம் உணவுப் பொருள்களின் குவியல் ; இத்தகைய வளமிக்கது அம்மலை நாடாதலின், அந்நாட்டு மக்கள் வேற்று நாட்டுச் செல்வத்தை வேண்டாது வாழ்வர் ; அந்நாட்டைவிட்டு வெளியேற வேண்டிய தீவினை, யாதேனும் காரணத்தால், யாருக்கேனும் வந்து வாய்க்குமாயின், அம்மலை நாடு, தம் கண்ணுக்குத் தோன்றும் வரை, வழியில் நின்று நின்று, விழிநீர் சோர வருந்தி நோக்கி "வளமிக்க இந் நாட்டின் வாழ்விழந்து போமாறு எம்மைத் துரத்தும் தீவினையே ! நீ வாழ்விழந்து போகாயோ ?" என வாய் விட்டுப் புலம்பிப் போவர். அவ்வாறு, பிரிந்தார் இரங்கும் பெருவளம் பெற்றது அம்மலை நிலம்:

'பிரசம் தூங்கப், பெரும் பழம் துணர,
வரை வெள் அருவி, மாலையின் இழிதரக்
கூலம் எல்லாம் புலம் புக, நாளும்
மல்லற்று அம்ம ! இம்மலைகெழு வெற்பு எனப்
பிரிந்தோர் இரங்கும் பெருங்கல் நாடு' 1

**வேங்கை தந்த வெற்பு :**

கருத்துத் திரண்டுவந்த கார்மேகம், தான் தாங்கி வந்த நீரையெல்லாம் வாரி இறைத்து வறண்டுவிட்டது ; கருமைமாறி வெண்ணிறம் பெற்ற அம்மேகம், அருகிருக்கும் மலையுச்சியைச் சூழ்ந்து படர்ந்தது ; மரங்கள் செறிந்துள்ளமையால், இடையும் அடியும் கருநிறம் காட்ட

---

1 நற்றிணை : 93 மலையனார்

பிரசம் – தேனடைகள். தூங்க – தொங்க. துணர – கொத்துக் கொத்தாகக் காய்க்க. வரை – மலை. மாலையின் – மாலை போல். இழிதரும் – கீழ் நோக்கிப் பாயும். கூலம் – உணவுப் பொருள் வகைகள். புலம்புக – விளைந்து பெருக. மல்லற்று – வளம் உடைத்து. மலைகெழு – குன்றுகளை உடைய.

மழையறு மேகத்தால் உச்சி, வெண்ணிறம் காட்ட, பேரழகோடு விளங்குகிறது அப்பெருமலை ; வரைகளில் தேனடைகள் ; இடையிடையே, வெண்ணிற அருவிகள் வீழும் பேரொலி ; மலையைத் தன் செந்நிற மலர்களாலும் பொன்னிற மகரந்தப் பொடிகளாலும் போர்த்தி அழகு செய்கிறது வேங்கை மரம் ; இந்த இன்பச் சூழ்நிலையால் மனம் மகிழ்ந்த மயிற் கூட்டங்கள் ஒன்றுகூடி ஓடி, உதிர்ந்து கிடக்கும் மலர்த்தாதுக்களில் படிந்து ஆடின ; தாது படிந்த தோகை, இயல்பாகவே அழகுடைய அம் மயில்களை மேலும் அழகுடைய வாக்கிற்று ; அதனால், அகத்தே ஆர்வம் எழ, இன்பக் கிளர்ச்சி மிக்கு உச்சி மலையை அடைந்தன ; ஆங்கு, மலைகளுக்கிடையே எழும் இளஞாயிற்றின் ஒளிவிழக்கண்டு, உள்ளத்தே இன்பம் ஊற்றெடுக்கத் தம் தோகை விரித்து ஆடி மகிழ்ந்தன. இளஞாயிற்றின் இனிய ஒளியால், உடல் உரமும், உள்ள ஊக்கமும் பெற்ற மயில்கள் ஓடி ஆடும், அழகும் பயனும் நிறைந்தது அம்மலை :

பெய்து போகு எழிலி வைகு மலை சேரத்
தேன் தூங்கு உயர்வரை அருவி ஆர்ப்ப
வேங்கை தந்த வெற்பு அணி நன்னாள்
பொன்னின் அன்ன பூஞ்சினை துழைஇக்
கமழ் தாது ஆடிய கவின்பெறு தோகை
பாசறை மீமிசைக் கணங்கொள்பு, ஞாயிற்று
உறுகதிர் இளவெயில் உண்ணும் நாடு. 1

---

1 நற்றிணை : 396.

எழிலி - மேகம். வைகு மலை - முன்பு தான் தங்கியிருந்த மலை. வேங்கை-வேங்கை மரம். தந்த-மலர்ந்த. பொன்னின் அன்ன-நிறத்தால் பொன்போன்ற பூஞ்சினை-பூக்கிளை. துழைஇ-படிந்து கமழ்தாது-மணம் வீசும் மகரந்தம், ஆடிய-பூசிக்கொண்ட. பாசறை-பசிய கற்பாறை கணம்கொள்பு-கூட்டமாகக் கூடி. உறுகதிர்-பயன்தரு கதிரொளி.

**விலங்கு வாழ்க்கை :**

மக்களின் வாழ்விற்கு வழிகாட்டிகள் மாவினங்களே; பண்டு, விலங்குகளின் வாழ்க்கை முறைகளைக்கொண்டே, மக்கள், தங்கள் வாழ்க்கை முறைகளை வகுத்துக் கொண்டனர்; மக்களுக்குக் காதலைக் கற்றுக் கொடுத்தன அவ்விலங்குகளே; பெற்ற மகவைப் பிரிந்து வாழா அன்பு வாழ்க்கையை, இனம் காத்து வாழும் இல்லறப் பயனை, மானம் இழந்த பின் உயிர் வாழா மாண்புடைமையினை மக்களுக்கு அறிவுறுத்தியன அவ்விலங்குகளே. அறிவூட்டும் ஆசிரியன் ஒருவன், தான் கூறும் அந்நன்னெறியில், என்றும் பிறழாது நிற்றல்போல், தாயன்பு, கனிந்த காதல், இனங்காத்தல், மானம்உடைமை ஆகிய அப்பண்புகளை இழக்காமல் பெற்று, மக்கள் உணர்ந்து மனம் தெளியுமாறு இன்றும் வாழ்ந்து காட்டுவன அவ்விலங்குகள். காதலை மறந்து, தன் காதலியைக் கைவிட்டுக் காட்டு வழியைக் கடந்து செல்லும் ஒருவனுக்குக் காதலை நினைவூட்டி, விரைந்து வீடு செல்லுமாறு தூண்டுவன, அவ்விடை வழியில் அவன் காணும் விலங்குகளின் காதற்காட்சிகளேயாகும்.

காட்டு விலங்குகள் அனைத்துமே காதலால் கட்டுண்டு கிடப்பவை, அன்பால் பிணைக்கப் படுபவை யென்றாலும், களிறும் பிடியும் காட்டும் காதல் போல் சிறப்புடைய காதல் வேறு இல்லை. களிறு, காதலித்த பிடியைப் பிரியாது; அப்பிடி துயர் உறல்காணப் பொறாது; பிடிக்குத் துயர் செய்யும் புலி, ஆற்றலால் பெரியதேனும், அதை அழிக்க அஞ்சாது; அதைப் போன்றே பிடியும், தன் காதற்களிற்றினைக் கணப்பொழுதும் பிரிய விரும்பாது; பிரிய நேரின் உயிர்வாழாது. அத்தகு களிறு பிடிகளின் காதல் வாழ்வினைக் கண்டு செல்வோமாக.

**பிடியைக் காணாது பிளிறும் களிறு :**

மேகம் தவழும் உயர்ந்த மலைக்காடொன்றில் காதல் வாழ்வு மேற்கொண்டிருந்தன களிறும் பிடியுமாய இரு யானைகள்; மலைவாழையும் சுரபுன்னையும் வளர்ந்து வளம் கொழிக்கும் அம்மலை, அவ்யானைகளுக்கு வேண்டும் உணவுக் குறைபாடுடையதன்று; ஒரு நாள், அம்மலையின் ஒருபால், பிடியை உறங்க வைத்து, அதற்கு வேண்டும் கனிகளைக் கொணர்வான் வேண்டி, வாழைத் தோட்டத்துள் புகுந்தது களிறு. ஆங்கு அப்பிடி விரும்பும் வாழைத் தாறுகளை வேண்டுமளவு கவர்ந்து மீண்ட களிறு, ஆண்டுத் தன் பிடியைக் கண்டிலது; அப்பிடியானை எங்கும் பேர்ய்விடவில்லை. அஃது இன்னமும் உறக்கம் கலைந்து எழுந்திருக்கவுமில்லை. களிறு விட்டுச் சென்ற இடத்திலேயே, அது உறங்க வைத்துச் 'சென்றவாறே, உறக்க நிலையிலேயே கிடந்தது; ஆனால், அம்மலையுச்சியில் வந்து படிந்த கருமேகத்தின் ஒரு பகுதி, அப்பிடியைப் பிறர் காணாவாறு, அதன்மீதும் படிந்துவிட்டது. அதனால் அது களிற்று யானையின் கண்களுக்குப் புலப்பட்டிலது; விட்டுச் சென்ற காதற் பிடியைக் காணாது போகவே பெரிதும் கலங்கிற்று களிறு. கலக்க மிகுதியால் பெருங் குரல் எடுத்துப் பிளிறிற்று. களிற்றின், பிளிற்றொலி அம் மலையகமெல்லாம் எதிரொலித்தது; குரல் கேட்டு ஓடி வாராதாபிடி எனும் அதன் ஆர்வத்தையும், பிடியைக் காணாது கலங்கும் அதன் பெருந்துயரையும் ஒருங்கே புலப்படுத்திற்று.

வாழை ஓங்கிய வழைஅமை சிலம்பில்
துஞ்சுபிடி மருங்கின் மஞ்சுபடக் காணாது
பெருங்களிறு பிளிறும் சோலை.1

1 நற்றிணை : 222. கபிலர்
வழை—சுரபுன்னை. அமை—பொருந்திய. சிலம்பு—மலை. துஞ்சுபிடி—உறங்கும் பெண்யானை. மருங்கின்—பக்கத்தில். மஞ்சு—மேகம். பட—மறைக்க. சோலை—காடு.

**உணவும் நீரும் ஊட்டும் களிறு :**

மலையும் வளம் குன்றும் கொடிய கோடைக் காலம் அது; உணவும், உண்ணு நீரும் அற்றுப்போன கொடுமை மிக்கது அம்மலை; அம்மலையை வாழ்விடமாக்கொண்டு வாழ்ந்தன ஒரு களிறும் ஒரு பிடியும். கோடை ஞாயிற்றின் கொடிய வெப்பத்தால், மலையகத்து மரங்களெல்லாம் வெந்து கரியாயின; சுனைகள் நீர் சுருங்கி உலர்ந்தன; தாம் வாழும் மலை, வளமற்றுப் போகவே, உணவும், உண்ணு நீரும் பெருது, தளர்ந்து வாடின அவ்யானைகள்; தன் ஆண்மைத் திறத்தால், அத்தளர்ச்சியை ஒருவாறு தாங்கிக்கொண்ட களிறு, பிடியின் பசித்துயரைக் காணக் காணத், துயர் தாங்கும் அவ் ஆற்றலை அறவே இழந்து வருந்திற்று. பின்னர், வருந்தி வாளாயிருப்பதிற் பய னில்லை என உணர்ந்தது. பிடியின்பால் கொண்ட காதல், தளர்ச்சியை மறக்கச் செய்தது; ஊக்கமும் உரமும் கொண்டு ஓடிற்று. அம்மலையை அடுத்துச் சென்ற சுரத்து வழியில் வளர்ந்திருந்தது ஒரு ஓமை மரம்; மரத் தைக் கண்ட களிறு, அதை முறித்துத் தள்ளிற்று; ஓடிச் சென்று, பிடியை அழைத்து வந்து, ஆர்வம் பெருக அம் மரத்தழை அளித்து அதன் பெரும் பசியைப் போக்கிற்று.

உணவு உட்புகவே, உண்ணுநீர் வேட்கை எழப் பெருந்துயர் உற்றது பிடி. அதன் துயர் காணமாட்டாது வருந்திய களிறு, நீர்நிலையைத் தேடி, அவ்வழியில் நெடுந் தொலைவு ஓடிற்று; ஆனல், நீண்ட அவ்வழியில் நீர் நிலை எதையும் கண்டிலது. பிடியின் நீர் வேட்கையைப் போக்கு வது எவ்வாறு எனும் எண்ணம் எழக் கலங்கிநின்ற களிற்றின் கண்களில், கல் நிலத்தே தோண்டிய சிறிய கிணறு ஒன்று பட்டது. அதன் அருகில் ஓடிச்சென்று கண்டது; ஊற்று அற்றுப்போன அக்கிணற்றில், நீர்

ஒரு சிறிதே கசிந்து ஒழுகிக்கொண்டிருந்தது. அச் சிறு நீரையேனும் அளித்துத் தன் பிடியின் நீர் வேட்கையை நீக்க விரும்பிற்று களிறு ; ஆனால், தண்ணீர் பெறாது தளர்ந்திருக்கும் தன் பிடியை, அத்துணை நெடுந்தொலைவு அழைத்து வரல் இயலாது என்பதை அறிந்தது; உடனே அவ்வூற்றுக் குழியில் சிறிது நீரும் தங்காவாறு, அத் தண்ணீர் முழுவதையும் தன் துதிக்கையால் உறிஞ்சிக் கொண்டு, பிடியின்பால் ஓடிச் சென்று, ஊட்டி, அதன் உறுதுயர் போக்கி உள்ளம் மகிழ்ந்தது.

"நீர்இல் நீள் இடைக்
கயந்தலை மடப்பிடி உயங்குபசி களைஇயர்
பெருங்களிறு தொலைத்த முடத்தாள் ஓமை."

'கல்ஊற்று ஈண்டல, கயன்அற வாங்கி
இரும்பிணர்த் தடக்கை நீட்டி நீர்நொண்டு
பெருங்கை யானை பிடிஎதிர் ஓடும்.''2

**கன்று ஈன்ற பிடியைக் காத்துப் புரக்கும் களிறு :**

தம் காம வேட்கை தீர்ந்ததும், அக்காம வேட்கைக்குத் துணைநின்ற தம் பெண்ணினத்தைக் கைவிட்டுச் செல்லும் பிற விலங்கினங்களைப் போன்றதன்று யானை இனம். அது மட்டுமன்று ; ஈன்ற தன் கன்றுகளை அவற்றிற்கு வேண்டும் உணவுகளை அவைகளே தேடிப் பெற்றுக்கொள்ளுமாறு விடுத்துப் பிரிந்து போகும்

---

1. நற்றிணை : 137. பெருங்கண்ணனார்.

நீள் இடை–நீண்ட வழியில். கயந்தலை–மெல்லிய தலை. உயங்கு பசி–வருத்தும் பசி. களைஇயர்–களைதற் பொருட்டு. முடந்தாள்–வளைந்த அடிமரம்.

2. நற்றிணை. 186.

கல்ஊற்று – கல்லில் தோண்டிய கிணறு. ஈண்டல – ஊறும் நீர். கயன்–ஊற்று அளவு. இரும்–பெரிய. பிணர்–சுரடு முரடான. நொண்டு–முகந்துகொண்டு.

பழியும் அவ் யானை இனத்திற்கு இல்லை. தான் விரும்பும் பிடியானையைத் தன் உயிர் போமளவும் உடன் கொண்டு மகிழும் உயர்ந்த ஒழுக்க நெறியுடையது களிறு. தாம் ஈன்ற கன்றுகள், தம் பகையை வென்று தனித்து வாழும் வன்மை பெறும்வரை, அவற்றைத் தமக்கிடையே வைத்துக் காக்கும் அன்புடையன யானைகள்.

காதல் வாழ்வு மேற்கொண்டிருந்தன இரு யானைகள். அவற்றுள் பிடியானை கருவுற்றது; அஃதறிந்து மகிழ்ந்தது களிறு ; பிடி விரும்பி உண்ணும் உணவுப் பொருள்களைத் தேடிக் கொணர்ந்து தந்தது. பிடியுற்ற கருவு முதற் கருவாதலின், அது கேடின்றிக் கருவுயிர்த்தல் வேண்டுமே எனும் கவலை எழவே, களிறு உள்ளூர வருந்திற்று. கருவுயிர்த்தற்கு ஏற்ற இடத்தைத் தேடிக்காணும் கவலை, அக்களிற்றிற்கு மிக்கது ; அந்த இடம் நீரும் நிழலும் வாய்ந்த இடமாதல் வேண்டும் ; அவை இருந்தால் மட்டும் போதாது, கன்றீன்று கிடக்கும் பிடிக்குப், பகை விலங்குகளால் கேடு நேராவண்ணம் அப்பிடியையும், அது ஈனும் கன்றையும் தன் கண்ணெதிரில் வைத்துக் காத்தல் வேண்டும் ; அதற்கு அவ்விடம் ஒளி மிக்கிருத்தல் இன்றியமையாததாம் என்றெல்லாம் எண்ணிற்று ; அம்மலைச் சாரலில் ஓர் இடம் ; அருகே, நீர் இடையறுது ஒலித்து ஓடும் அருவி ; நீண்டு வளர்ந்த மூங்கில்களால் நிழல் பொருந்திய அவ்வருவிக்கரை ; மண்ணுக்கடியில் கிடந்த மாணிக்கக் கற்கள், புழுதியைக் கிளறும் பன்றிகளின் செயலால், வெளிப்போந்து வீசும் ஒளி; இத்தகைய இடத்தைத் தேடிக்கண்டது களிறு ; உடனே சூலுற்ற தன் பிடியை ஆங்கு அழைத்துச் சென்றது. ஆங்கே, பிடி கன்றை ஈன்றது. முதற் சூலாதலின் கலங்காத பிடியும் கலங்கிற்று; பெற்றநோய் பெரிதாய் வருத்திற்று. பிடியின் உடல் நோயையும் போக்குதல் வேண்டும் ; கன்றின் பசி

போக்கும் பால் பெருக வழிச் செய்தலும் வேண்டும் என விரும்பிற்று களிறு. இவ்விருவகைப் பயனையும் ஒருங்கே தரவல்லது தினையுணவே என உணர்ந்தது; உடனே விரைந்தோடிச் சென்று, மலையை அடுத்துள்ள புனத்தில் புகுந்து, ஆங்கு விளைந்து முற்றித் தலை சாய்த்துக் கிடக்கும் தினைக்கதிர்களைக் கவர்ந்து கொணர்ந்தது; பிடியின் வாயில் தந்து பேரன்பு காட்டி உண்பித்தது; என்னே அக்களிற்றின் அன்பு!

'நெடுங்கழை நிவந்த நிழல்படு சிலம்பில்
கடுஞ்சூல் வயப்பிடி கன்று ஈன்று உயங்கப்
பால்ஆர் பசும்புனிறு தீரிய, களிசிறந்து
வாலாவேழம் வணர்குரல் கவர்தலின்'' 1

'அருவி ஆர்க்கும் பெருவரை அடுக்கத்து
நிலவரை நிவந்த பலவுறு திருமணி
ஒளிதிகழ் விளக்கத்து ஈன்ற மடப்பிடி
களிறு புறங்காப்பக் கன்றொடு வதியும்.'' 2

**பகை வென்று இனங் காக்கும் களிறு :**

எண்ணியது எய்திவிட்டது; கன்று ஈன்ற பிடியும், அது ஈன்ற கன்றும் வெல்லுதற் கெளியவாம் என அறிந்தபுலி, அவற்றைக் களிறு காத்து நிற்கிறது என்பதை அறியாமையால், மறைந்து வந்து தாக்கிற்று.

---

1 நற்றிணை : 393. கோவூர் கிழார்.

கழை - மூங்கில். நிவந்த - உயர்ந்து வளர்ந்த. சிலம்பில் - மலையில். கடுஞ்சூல் - முதல்சூல். வயப்பிடி - வன்மைபொருந்திய பிடி. உயங்க - வருந்த. ஆர் - மடிகளில்நிறைதற்பொருட்டு. பசும்புனிறு - கருவுயிர்த்தமையால் உண்டான நோயும்; பசியும். தீரிய - தீர்தற்பொருட்டு. வாலா வேழம் - கரிய யானை. வணர்குரல் - வளைந்த தினைக்கதிர்.

2. நற்றிணை : 399. தொல்கபிலர்.

நிலவரை நிவந்த - நிலத்திற்கிடந்து வெளிப்பட்ட. பலவுறு - பல வாய. திகழ் - பொருந்திய. புறங்காப்ப - அண்மையில் காத்து நிற்க.

புலியின் செயலால் சினம் மிக்கது களிறு. தன் காதல் மடப்பிடியை, தன் அன்புநிறை இளங்கன்றைத் தாக்கிய புலிமீது பாய்ந்தது. கோடுகளால் குத்திக்கொன்றது. அதன் இரத்தக்கறை படிந்தமையால் சிவந்தன கோடுகள்; புலியைக் கொன்று உயிர் போக்கியதேனும், அவ்விடம் பகை விலங்குகள் உலவும் இடமாதல் அறிந்த கன்று, தன் பிடியையும் கன்றையும், அவ்விடத்தின் நீக்கி அழைத்துச் சென்று, வேறே அரண்மிக்க இடத்தில் சேர்த்தல் வேண்டும் எனத் துணிந்தது. இடைவழியில் அவற்றிற்கு ஏதம் எதுவும் உண்டாகி விடாவாறு, அவற்றை விடுத்துச் சிறிதும் அகலாது, அணைத்தவாறே அழைத்துச் சென்றது; செல்லும் வழியில், வேங்கைமரம் ஒன்று, பொன்னிற மலர்கள் பூத்துப் புது மணம் வீசி நின்றது. புலியொடுசெய்த போர் நினைவு, நெஞ்சைவிட்டு நீங்காதே இருந்ததாதலின், பூத்துப் புலிபோல் தோன்ற நின்ற அவ்வேங்கை மரத்தைப் புலி எனவே பிறழக் கொண்டது அக்களிறு. அதனால் கண்டவுடனே கடுஞ் சினம் கொண்டு அதன்மீது பாய்ந்தது; பருத்த அதன் அடியைத் தன் கோடுகளால் குத்தி அழித்தது. வேர் அற்று வீழ்ந்தது அம்மரம்; அந்நிலையில், தான் அழித்தது தன் பகையாய புலியன்று, தன் இனம் விரும்பும் இனிய உணவாகிப் பயன்படும் வேங்கையாம் என அறிந்து வெட்கம் கொண்டது. பின்னர் அவ் வேங்கையின் பொன்னிறப் பூக்களை, அப்பூக்களிற் படிந்து தேன் உண்ணும் ஈக்கள் அஞ்சி அகலுமாறு பறித்துச் சிறு சிறு கவளமாகத் தன் பிடிக்கும் கன்றிற்கும் மாறி மாறி ஊட்டி மகிழ்ந்தது.

புலிபொரச் சிவந்த புலாவஞ் செங்கோட்டு
ஒலிபல் முத்தம் ஆர்ப்ப வலிசிறந்து
வன்சுவல் பராரை முருக்கிக் கன்றொடு

மடப்பிடி தழீஇய தடக்கை வேழம்
தேன்செய் பெருங்கிளை இரிய வேங்கைப்
பொன் புரைகவழம் புறந்தருபு ஊட்டும்
மாமலை. '' 1

**வில் நீக்கி நீரூட்டும் வேழம் :**

வேங்கை மலரையும் தளிரையும் உண்ட பிடியும் கன்றும் பின்னர், நீர் வேட்கையால் வருந்தின. வருந்தும் அவற்றைக் கண்டு வருந்திற்று களிறும் ; வருந்தி என் ? செல்லும் வழியோ நீர் நிலையில்லா நெடுவழி ; மேலும், காலமோ கடல் நீரையும் வற்றச் செய்யும் கோடைகாலம் ; அதனால், அவற்றின் தண்ணீர் வேட்கையைத் தணிக்கும் வகையறியாது கலங்கி நின்றது களிறு ; எங்கெங்கோ சென்று இளைத்தது ; இறுதியில் மலைச்சாரலை யடுத்து, வேட்டுவர் வாழும் சேரி இருக்கக் கண்டு, ஆங்கு, அவ் வேட்டுவர் நீர் உண்ணும் நீர் நிலையாதேனும் இருத்தல் வேண்டும் என உய்த்துணர்ந்து அச்சேரியை அடைந்தது. எதிர்பார்த்தவாறே, நீர் நிலையொன்று அவண் இருந்தது. ஆனால் அது ஒரு கிணறு ; யானைகள் இறங்கி நீர் உண்டல் இயலாது ; அதனால் நீர் நிலையைத் தேடி அடைந்தும், நீர் உண்டற்கியலாமை உணர்ந்து ஏமாற்றம் உற்றது. அவ்வேமாற்றத்தால் சிந்தைநொந்து செயலற்று நின்ற களிறு, கிணற்றையடுத்து, வேட்டுவர், தம் முடைய ஆனிரைகள் உண்ணுவதற்காக என்று அமைத்த தொட்டியில், நீர் நிறைந்திருத்தல் கண்டு மகிழ்ந்தது ;

---

1 நற்றிணை : 202. பாலைபாடிய பெருங்கடுங்கோ.

பொர - போர்செய்ய புலாவஞ் செங்கோட்டு - புலால்நாறும் சிவந்த தந்தம் ; யானைக்கோட்டில் முத்துக்கள் உண்டாகும் என்ப. வன்சுவல் - வலிய மேட்டு நிலத்தில் வளர்ந்த. பராரை - பருத்த அடி மரம். தேன்செய் பெருங்கிளை - தேனீக்கூட்டம். இரிய - அஞ்சி அகல. புரை - ஒத்த. கவழம் : ஒரு வாயளவு உணவு கவளம். புறந்தருபு - கேடுவராது காத்து.

ஆனால் அம்மகிழ்ச்சியும் நெடிது நிற்கவில்லை; தொட்டியை அணுகி நோக்கியக்கால், பிறவிலங்குகள் உண்டு விடா வாறு, அத்தொட்டியின் மேற்புறத்தை, வலிய கொம்புகள் பலவற்றை வில்போல் வளைத்துக் குறுக்கும் நெடுக்கு மாகப் பொருத்தி மூடியிருந்தனர் வேட்டுவர்; அதனால், அதன் கண் உள்ள நீரை முகந்து உண்ணல் அரிதாதல் அறிந்து வருந்திற்று. அவ்வாறு வருந்தியது சிறிது நாழிகையே; பிடியும் கன்றும் தண்ணீர் வேட்கையால்படும் தடுமாற்றம் அக் களிற்றிற்குத் துணிவைத் தந்தது. அதனால் வில்லை வலிந்து அகற்றின், விசைமிகுதியால், மேலெதெறித்துத் துன்புறுத்தும் என்பதை எண்ணிப் பாராதே அவற்றை அகற்றிற்று; தடையற்ற நிலையில் தொட்டியில் நிறைந்திருந்த நீரைப், பிடியும் கன்றும் தம் உளமாரப் பருகிப் பசித்துயர் தீர்ந்தன; உண்டு களை தீர்ந்த அவற்றின் நிலைகண்டு அகம் மகிழ்ந்தது களிறு :

'வறன் பொருந்து குன்றத்து உச்சிக் கவாஅன்
வேட்டச் சீறூர் அகன்கண் கேணிப்
பயநிரைக்கு எடுத்த மணிநீர்ப் பத்தர்
புன்தலை மடப்பிடி கன்றோடு ஆர
வில்கடிந்து ஊட்டின பெயரும்
கொல் களிற்று ஒருத்தல்.''1

**பிடியின் காதல் :**

களிற்றின் காதற் சிறப்பு இது. இனி பிடியின் பேரன்பையும் சிறிது காண்பாம்; காதலால் கட்டுண்டு

1. நற்றிணை : 92.

வறன் பொருந்து—மழை பெரு வறுமை நிறைந்த கவான்—மலைச் சாரல். வேட்டச் சீறூர்—வேட்டுவர் சேரி. கேணி—கிணறு. பயநிரை—வேட்டுவர்க்குப் பால் அளித்துப் பயன் தரும் ஆனிரை. எடுத்த—அமைத்த. பத்தர்—தண்ணீர்த் தொட்டி. புன்தலை—சிறிய தலை. ஆர—உண்ண. கடிந்து—அகற்றி. ஒருத்தல்—யானைத் தலைவன்.

கருத்திழந்து வாழும் கவினுடையது பிடி. விலங்குகளில் வன்மைமிக்க யானை இனத்தைச் சேர்ந்ததே யாயினும், பொதுவாகப் பெண்ணினத்திற்குரியதாய, துன்பம் கண்டு தளரும் அச்சம், அவ்வினத்துப் பிடியின்பாலும் பொருந்தியிருக்கக் காண்கிறோம். மேலும், யானை இனத்திற்குப் பகைவிலங்குகள் பலவாம். இடியேறுகளால் எளிதில் தாக்கப்படுபவை அவை; புலிகளின் தொல்லை பொறுக்கும் தரத்ததன்று ; மலைப்பாம்புகளும் அவற்றை மறப்பதில்லை. இறுதியாக, போர்ப்பயன் குறித்தும், பொருட்பயன் குறித்தும் அவற்றைக் கைப்பற்றக் கருதுவர் மக்கள். இவர்களால், அவற்றிற்கு எந்த நாழிகையிலும் இடர் வந்துறும். பொதுவாக,யானைகள் அனைத்திற்குமே இது பொருந்தும் என்றாலும், அவற்றுள் ஆண் யானைகளுக்கு அவ்விடர்ப்பாடு அதிகமாம். அதனால், தான் காதலிக்கும் களிற்றினுக்கு எந்த நாழிகையிலும் இடர் வந்துறுதல் உறுதி ; இடியேற்றால் இன்னலுறும் ; உணவாதல் குறித்துப் புலியால் கொல்லப்படும் ; மலைப்பாம்புகளால் பற்றப்படும் ; பற்றக் கருதிய மக்கள் பறித்த குழியில் வீழ்ந்து வருந்தல் நேரும் என்பதை அறிந்தது பிடி. அவ்வகையால், தன் காதல் களிற்றினுக்கு இன்னல் நேரின், தான் உயிர் வாழ்தல் இயலாது; தனக்கு உணவளித்தும், உண்ணுநீர் காட்டியும் பகை விலங்குகளால் பாழுறாவண்ணம் பக்கத்திலிருந்து பாதுகாத்தும் தன் உயிரை ஓம்பும் களிறு இறந்துவிடின், அதற்கு இன்னல் நேர்ந்துவிடின், பெரிதும் வருந்தும் பிடி.

ஒரு நாள், ஒரு களிறு, தன் பிடியைத் தனியே விடுத்து, வழக்கமாகச் செல்லும் இடத்திற்குச் சென்றது; ஆங்குத் தான் விரும்பும் ஓமைமரத்தளிர்களை உண்ணத் தொடங்கிற்று; அந்நிலையில், அம்மரத்தடியில் காதலனும்

காதலியுமாய் இருவர் அமர்ந்திருக்கக் கண்டது ; கண்ட வுடனே, தன் துதிக்கையை வளைத்து, உயரத்தூக்கி, உரத்த குரலெடுத்துப் பிளிறிற்று. அது பிளிறிய காரணம் தெரியவில்லை ; காதலிற் சிறந்த அது, தான் காணும் அக்காதற் காட்சியைத் தன் பிடிக்கும் காட்டுதல் வேண்டி அதை அழைத்தல் கருதியோ, அல்லது, ஆங்குத் தமக்கு வேண்டும் தழையுணவு வேண்டுமளவு இருத்தல் கண்டு, அவற்றை உண்ணத் தன் பிடியையும் பிற இனங்களையும் அழைத்தல் கருதியோ அது பிளிறி யிருத்தல் வேண்டும். ஆனால், அப்பிளிற்றொலியைக் கேட்ட அதன்பிடி, அதன் காரணத்தை வேறாகக் கொண் டது. களிற்றிற்கு எந்த நாழிகையில், எந்த இடத்தில் இன்னல்நேர்ந்துவிடுமோ எனும்எண்ணத்தால் இடையறா அச்சம் கொண்டு வாழும் பிடி, அப்பிளிற்றொலியை, இடையூறு உண்டானமையால் வருந்தியகளிறு, தனக்குத் துணைவேண்டி எழுப்பியதாகப் பிறழக் கொண்டது. அவ் வெண்ணம் எழுந்த அந்நிலையே, அதன்துயர் பெரிதா யிற்று ; துயர் பொறுக்கமாட்டாது துடித்தது ; உள்ளத் துயர் உரத்த புலம்பலாய்ப் புறம் போந்தது. வருந்திய அப்பிடி எழுப்பிய பிளிற்றொலி, அம்மலையையே நடுங்கப் பண்ணி எதிரொலித்தது. பிடியின் பேரன்பால் எழுந்த அப்பிளிற்றொலி கேட்டு, யானை இனத்தின் காதற் சிறப்புணர்ந்த காதலி, அந்நிகழ்ச்சியைத் தன் காதல னுக்குப் பிறிதொருகாலத்தே நினைப்பூட்டி மகிழ்ந்தாள்.

நினைத்தலும் நினைதிரோ ஐய ! அன்று நாம்
பணைத்தாள் ஓமைப் படுசினை பயந்த
பொருந்தாப் புகர்நிழல் இருந்தனமாக,
நடுக்கம் செய்யாது, நண்ணுவழித் தோன்றி
ஒடித்து மிசைகொண்ட ஓங்கு மருப்பு யானை
பொறிபடு தடக்கை சுருக்கிப் பிறிதோர்

அறியிடை இட்ட அளவைக்கு, வேறுணர்ந்து
என்றூழ் விடரகம் சிலம்பப்
புன்தலை மடப்பிடி புலம்பிய குரலே.''1

காதலால் தன் உள்ளத்தைப் பிணிகொண்டகளிறு கேடின்றி இனிது வாழவும், அதை அறியமாட்டாமையால் அதற்கு ஏதேனும் கேடுண்டாயிருக்குமோ என்ற எண்ணம் எழுந்துவிட்ட காரணத்தால் பெருந்துன்புற்ற பிடி இது. அப்படி இனத்தைச் சேர்ந்த மற்றொரு பிடி யானை, தன் களிற்றிற்கு உண்டான கடுந்துயரைத் தன் கண்ணாலேயே கண்டுவிட்டது. தன்பால் பேரன்பு காட்டும், தான் விரும்பும் பொருளை எல்லாம் தந்துதவும் களிறு மலைப்பாம்பால் பற்றப் பட்டுவிட்டது. அதன் வாயிடையே சிக்குண்ட அக்களிறு, அதை அழித்து உயிர் தப்புவது இயலாது என்பதை அறிந்து, இன்னும் சில நாழிகையில், தன் காதலியை, தன் இனத்தை, தான் வாழும் காட்டை விடுத்து, இறக்கப் போவது உறுதி என்பதை அறிந்த வருத்தம் ஒருபாலும், பற்றிய பாம்பு, தன் உயிரைப் போக்குவான் வேண்டி இறுகப் பிணிக்கும் பிணிப்பு மிகுவதால் உண்டாம் வருத்தம் மற்றொருபாலும் நின்று வருத்தப் பெரிதும் வருந்தித் துடித்தது. அக்கொடுங் காட்சியைக் கண்டு விட்டது அதன் காதற்பிடி; கலங்கிற்று அதன் உள்ளம்; தணியாத, தாங்க மாட்டாத துயர் மிகுந்தது. தன்

1. நற்றிணை : 318. பாலைபாடிய பெருங்கடுங்கோ.

பணைத்தாள் – பருத்த அடிமரம். படுசினை – தாழ்ந்த கிளைகள். பொருந்தா – போதாத. புகர்நிழல் – புள்ளி புள்ளியாகத் தோன்றும் நிழல். நடுக்கம் – துன்பம். நண்ணும்வழி – தாம் செல்லும் இடம். மிசைகொண்ட – உண்ணத் தொடங்கிய. மருப்பு – யானை. பொறிபடு – புள்ளிகள் பொருந்திய. பிறிதோர் அறியிடையிட்ட அளவை – பிறிதோர் காரணத்தால் எழுப்பிய பிளிற்றொலி. என்றூழ் – வெய்யில் பரந்த. விடரகம் – மலைப் பிளவுகள். சிலம்ப – எதிர் ஒலிக்க.

உயிரை ஓம்பி வளர்த்த தன் காதலன், தன் கண் முன்னரே வருந்துவதைக் கண்டும், அதன் இறுதி உறுதியாகிவிட்டது என்பதை உணர்ந்தும் ஓடிச்சென்று உதவி, அதன் உயிரைக் காப்பாற்றமாட்டாத் தன் செயலறுநிலை கண்டு சிந்தை நொந்தது. அந்நிலையில் அழுவதல்லாது அதனால் செய்யக் கூடியது வேறு எதுவுமில்லை. அம் மலையும், அம்மலைக் குகைகளும் எதிரொலித்து நடுங்குமாறு பெருங்குரல் எடுத்துப் பிளிறிப் பெருந்துயர் உற்று உள்ளம் அழிந்தது அப்பிடி :

" ஞால்வாய்க் களிறு பாந்தள் பட்டெனத்
துஞ்சாத் துயரத்து அஞ்சு பிடிப்பூசல்
நெடுவரை விடரகத்து இயம்பும் "1

காதல் உணர்ச்சியல்லது பிற எதையும் அறியாப் பிடிகள் இவை. அக்காதலுணர்வோடு கடமையுணர்ச்சியும் ஒருங்கே வாய்க்கப் பெற்ற ஒரு பிடி யானை, ஆற்றலால், ஆண்மையால் பெருமை மிக்க களிறு ஒன்றைக் காதலனைப் பெற்று வாழ்ந்திருந்தது. சின்னாட் கழித்து, அவற்றின் காதற் பயனாய் வந்துதித்தது ஓர் இளங்கன்று. தன் காதலனோடும், கன்றோடும் களித்து வாழ்ந்திருந்தது அப்பிடி. நெய்தல் இலைகளை நிகர்க்கும் எழில் மிக்க நீண்ட காதுகளைப் பெற்றுக் கவின் மிக்க தன் கன்றின் அழகைக் கண்டு அகம் மகிழ்ந்து வாழ்ந்திருந்தது ; அந்தோ ! அம் மகிழ்ச்சிக்கு அழிவு வந்துற்றது. தன்னையும் தன் கன்றையும் காத்து நிற்கும் கடமை யுணர்ச்சியால், தனக்கு வரும் கேட்டினை மறந்

1 நற்றிணை : 14, மாமூலனார்.

ஞால்வாய்-தொங்குகின்ற வாய். பாந்தள்-மலைப்பாம்பு. பட்டென-வாயில் அகப்பட்டுக் கொண்டதாக. துஞ்சாத் துயரம்-கெடாத துயரம் ; பெருந்துயரம். பூசல்-பிளிற்றொலி. நெடுவரை-நீண்ட மலை. விடரகம்-குகைகள்.

இருந்த களிற்றினை, அது அயர்ந்து நிற்கும் நிலை நோக்கித் தாக்கிக்கொன்று விட்டது ஒரு புலி. களிறு உயிர் இழந்து வீழ்ந்தது. வீழ்ந்து கிடக்கும் தன் காதலன் உடலைக் கண்டது பிடி; கண்ணீர் சொரிந்து கலங்கிற்று; அக்கலக்க மிகுதியால் தானும் உயிரிழந்திருக்கும்; ஆனால், அவ்வெண்ணம் எழுந்த அந்நிலையில், துயர் மிகுதியால், அதுகாறும் மறந்திருந்த தன் கன்று, தன் அருகிருப்பக் கண்டது; தந்தையை இழந்து தளர்ந்து, துன்புற்றிருக்கும் அதனைக் கண்டது; நாமும் இறந்து விட்டால், துன்பம் மிக்க இவ்வுலகில், இதைப் புரப்பார் யாவர்? புரப்பாரைப் பெறமாட்டாதும், பகை விலங்குகளால் தாக்குண்டும் அழிவுறுமே என எண்ணியது. அவ்வெண்ணம் எழுந்த அந்நிலையே, இறக்கும் எண்ணம் எங்கோ சென்றது. கன்றை அன்பொழுகத் தழுவிக் கொண்டது; அஞ்சற்க; உணவூட்டி வளர்ப்பேன்; ஊறின்றிக் காப்பேன் எனக் கூறுவதுபோல் இருந்தது அதன் அணைப்பு; அவ்வாறு அணைத்துக்கொண்டே, அவண் வீழ்ந்து கிடக்கும் தன் காதற் களிற்றின் உடலை விட்டுப் பிரியமாட்டாது, அவ்வுடலின் அண்மையிலேயே இருந்து, விழிநீர் சோர வருந்தி நின்றது.

'பெருங்களிறு உழுவை அட்டென, இரும்பிடி
உயங்கு பிணி வருத்தமொடு இயங்கல் செல்லாது
நெய்தல் பாசடை புரையும் அஞ்செவிப்
பைதலம் குழவி தழீஇ ஒய்யென
அரும்புண் உறுநரின் வருந்தி வைகும்.'' 1

---

1. நற்றிணை : 47. நல்வெள்ளியார்.

உழுவை-புலி. அட்டென-கொன்றுவிட்டதாக. இரும்பிடி-கரிய பிடி. உயங்குபிணி-வாடிய துன்பம். இயங்கல் செல்லாது-நடக்க மாட்டாது. பாசடை-பசிய இலை. புரையும்-ஒக்கும். பைதலம் குழவி-வருந்தும் கன்று. ஒய்யென-விரைவாக.

தன் கன்றிற்கு உணவளித்தும், அதன் ஊறு நீக்கியும் காக்கும் கடமை உண்டாகி விடுவதால், களிற்றினை இழந்த பிடிக்குப் பொறுப்பு அதிகமாம். யானைக் கன்று, இளமையால், தன் தாய் போல் விரைந்து செல்லும் நடையாற்றல் அற்றது ; புலி முதலாம் விலங்குகளினின்றும் தன்னைக் காத்துக்கொள்ளும் மெய்வலியற்றது. மேலும் அக்காட்டில் பழகி அறியாமையால், தனக்கு அரணாகும் இடம் எது, தனக்குக் கேடாய் முடியும் இடம் எது என்பதை அறிந்துகொள்ளும் அறிவற்றது.; அதனால், பிடியானை, தன் கன்றைச் சிறிது பொழுதும் பிரியாது உடனிருந்து பாதுகாக்கும் ; ஓர் இடம் விட்டு ஓரிடம் செல்லும் பொழுது, நடை மெலிந்து பின் தங்குந்தோறும், தனித்து நிற்கும் அதைப் புலி தாக்கி அழித்து விடுமோ என அஞ்சியும், பின் தங்கும் அக் கன்று வழி தவறி விடுமோ என ஐயுற்றும் நின்று நின்று, உடனழைத்துச் செல்லும் அன்புடையது அப்பிடி.

"குறிவரி இரும்புலி அஞ்சிக் குறுநடைக்
கன்றுடை வேழம் நின்று காத்து அல்கும்"1

இவ்வாறு விழிப்பாய் இருந்து காத்து நிற்கும் பொழுதே பிடி, தன் கன்றை இழந்து விடுவதும் உண்டு ; பிடியானை ஒன்று, தான் பெற்ற கன்றோடு வாழ்ந்திருந்தது; வேனிற் காலம் வந்துவிட்டது ; வாழும் மலைநாடு வெப்பத்தால் வறண்டு விட்டது ; சுனைகள் நீரற்று விட்டன ; தண்ணீர் பெறுத் தடுமாற்றம் பெரிதாயிற்று ; நீரின்றி நெடிது நாள் வாழ்தல் இயலாது ; தண்ணீர் வேட்கையுற்றுத் தான் படும் துயரினும், தன் கன்று படும் துயரம் தாங்கற்கு அரிதாதல் உணர்ந்து வருந்திற்று

1 நற்றிணை : 85. நல்விளக்கனார்.
குறிவரி-சிறிய வளைந்த வரிகள். இரும்புலி-பெரிய புலி. குறுநடை-மையச் செல்லும் நடை. அல்கும்—தங்கிச் செல்லும்.

அப்பிடி; அதனால், நீர் பெறும் இடத்தை எவ்வாறேனும் தேடிச் சென்றடைதல் வேண்டும் எனத் துணிந்தது. அம்மலைகளை அடுத்துளது ஒரு சிற்றூர்; குன்றுகள் சூழ இருக்கும் ஆங்கு, நீர் நிலைகள் நிறைந்திருத்தலும் கூடும் எனக்கருதிற்று: அதனால், தன் கன்றையும் உடனழைத்துக் கொண்டு அச்சிற்றூர் நோக்கிச் செல்லத் தொடங்கிற்று; நீர் வேட்கை மிகுதியால், நீர் நிலைகண்டு தன் கன்றிற்கு ஊட்டவேண்டும் எனும் ஆர்வம் மிகுதியால், விரைந்து சென்றது; தன்னோடு விரைந்து நடத்தல் தன் கன்றிற்கு இயலாதே என்பதை மறந்தது; அதனால் விரைந்து சென்ற தன் தாயைத் தொடர்ந்து செல்லமாட்டாது பின் தங்கிவிட்டது அக் கன்று. பிடி, சேணெடுந்தூரம் சென்றுவிட்டது; கன்றின் கண்ணிற்கும் புலப்படாதாயிற்று; அது சென்ற வழியை அறிந்து, அதைப் பின்பற்றிச் செல்லுதல் இயலாது போயிற்று. எவ்வழிச் செல்வது என்பதை அறிய மாட்டாது செயலற்று நின்று திகைத்தது. அந்நிலையில், மேய்தல் தொழில் முடித்து, தம் ஊர் நோக்கித் திரும்பும் அச்சிற்றூரைச் சேர்ந்த ஆனிரைகள், அவ்வழியே சென்றன. அவற்றைக் கண்ட அக்களிற்றுக் கன்று, ஆங்கே தனித்துக் கிடந்து துயர் உறுவதினும், அவ் வானிரையோடு சென்று அவற்றின் ஊரடைதல் நன்றும் என உணர்ந்தது. அவ்வாறே, அவற்றைப் பின் தொடர்ந்து சென்று அவற்றின் ஊர் அடைந்தது. தம் ஆனிரையின் வருகையை எதிர்நோக்கி ஊர்ப்புறத்தே நிற்கும் அச்சிற்றூர் மகளிர், தம் ஆன் கன்றுகளின் பின், யானைக் கன்று வரக் கண்டு கலங்கினர். இவ்வாறு, ஓரிடத்தே தம்மைக் கண்டு ஊர்ப்பெண்டிர் கலங்க, ஓரிடத்தே தம்மைக் காணாது தன் தாய்ப்பிடி கலங்க, வழி தவறி விழிக்கும் இயல்பிற்று யானைக்கன்று:

" நீர் நசைக்கு ஊக்கிய உயவல் யானை
வேனிற்குன்றத்து வெவ்வரைக் கவாஅன்
நிலம் செலச் செல்லாக் கயந்தலைக் குழவி
சேரியம் பெண்டிர் நெஞ்சத்து எறிய
ஊர் ஆன் கன்றொடு புகுதும்.''1

## புலியின் இரத்த வெறி :

ஆற்றல், அஞ்சாமை, ஊக்கம், உரன் எனும் இவற்றின் உருவம் புலி ; உருவத்தால் சிறியதேயாயினும்; உடல் வன்மையில் ஏனைய உயிர்களினும் சிறந்தது. உயிர்களுள் மிகப்பருத்த உடலமைந்த யானையை எளிதில் வீழ்த்திவிடும் வன்மை வாய்ந்தது. காட்டில் பிற விலங்குகள் உளவேனும், புலி, யானையைப் பகைக்குமளவு பிற விலங்குகளைப் பகைப்பதில்லை. அதைப் போலவே. யானையும புலியைக் கண்டு அஞ்சுவதுபோல், பிற விலங்குகளைக் கண்டு அஞ்சுவதில்லை. அவ்விரு உயிர்களுக்குமிடையேயுள்ள பகை அத்துணைக் கொடியதாம் ; புலி இரத்த வெறிகொண்டது என்ப. அவ் வெறி மிகுதியினாலேயே, அது இரத்தத்தைப் பெரும் அளவில் கொண்ட யானையைத் தேடித் தாக்குகிறது போலும்.

மலையின் இருண்ட குகையொன்றில் வாழ்ந்திருந்தது ஒரு புலி ; கோபத்தில் மிகுந்தது அப்புலி ; ஒரு நாள், தான் வாழும் குகைக்கு அருகே வேழம் ஒன்று வருவதைக் கண்டது ; உடனே, தன் குகையை விட்டு வெளியேறி, அவ்யானையின் புள்ளி பொருந்திய முகத்தின்மீது பாய்ந்து, தாக்குற்ற துன்பத்தைத் தாங்க மாட்டாது

---

1. நற்றிணை ; 171.

நீர்நசை—நீர்வேட்கை. ஊக்கிய—மேற்கொண்ட. உயவல்-வருத்தம். வெவ்வரை—வெப்பம் மிக்க மலைப்பக்கம். கவாஅன்—மலைச்சாரல். செல்லா—உடன்செல்லமாட்டாத. கயந்தலை—சிறிய தலை. குழவி—யானைக்கன்று. நெஞ்சத்து எறிய—உள்ளம் நடுஙக புகுதும-நுழையும்.

தளர்ந்து வருந்த, அதைக் கொன்று வீழ்த்தியது. வீழ்ந்த அதன் உடலைக் கொழு கொழுவெனப் பருத்த கவுள்களைக் கொண்ட தன் பெரிய வாயால் கடித்து, அதன் குருதியைத் தன் வயிறாரக் குடித்தது. பின்னர் குருதி குடித்ததால் கறைப்பட்ட தன் வாயை, வேங்கையின் அடிமரத்தில் துடைத்துவிட்டு அப்பாற் சென்றது; என்னே அதன் ஆற்றலும் கொடுமையும்!

'விடர்முகைச் செறிந்த வெஞ்சின இரும்புலி
புகர்முக வேழம் புலம்பத் தாக்கிக்
குருதி பருகிய கொழுங்கவுள் கயவாய்
வேங்கை முதலொடு துடைக்கும்''1.

பிற உயிர்களுக்குக் கேடு சூழ்வதே தொழிலாகக் கொண்ட புலியின் உள்ளமும் அன்பால் நெகிழ்வது உண்டு; தான் விரும்பும் பெண்புலியின்பாலும், அப்பிணவு ஈன்ற தன் குட்டியின்பாலும் பேரன்புடையது புலி; அவை வருந்த அது பார்த்திருக்காது; அவற்றின் துயர் போக்க, அது எதைச் செய்யவும் துணியும்; அவற்றின் துயர் துடைக்கும் வினையைத் துணிந்து மேற்கொண்டக்கால், எவ்வித இன்னல் வரினும், அவ்வின்னல் கண்டு அஞ்சாது; அத்துணை ஆற்றல் மிக்கது புலியின் அன்பு.

பெண்புலியொன்று குட்டியீன்று கிடந்தது. வேங்கையின் பொன்னிற மலர்களால் தொடுத்த மாலைபோலும் வரிகள் விளங்க வீழ்ந்து கிடக்கும் அக்குட்டிகளின் அழகைக் கண்ட அப்புலிக்கு, அக்குட்டிகளை ஈன்ற அப்பிணவின்மீது பேரன்பு பிறந்தது. அன்போடு அதை அணுகிற்று; ஆனல் அப்பிணவோ, குட்டிகளை ஈன்ற

1. நற்றிணை : 158. வெள்ளைக்குடி நாகனார்.

விடர்முகை–மலைக்குகை. செறிந்த–பதுங்கியிருந்த வெஞ்சினம்-கொடிய கோபம். புகர்–புள்ளிகள். புலம்ப-வருந்த. கவுள்-தாடைகள். கயவாய்-பெரிய வாய். வேங்கைமுதல்-வேங்கையின் அடிமரம்.

துன்பத்தோடு பசித்துன்பமும் வருத்தச் செயலற்றுக் கிடந்தது. பிணையின் அத்துயர் நிலையைக் கண்டது அப்புலி ; அதைக் காணப் பொறுத்திலது அதன் உள்ளம் ; விரைந்து புறப்பட்டது ; காட்டில் நெடுக அலைந்தது ஏற்ற உணவைத் தேடி ; இறுதியில் அதன் கண்ணெதிர்ப்பட்டது ஒரு களிறு; புலி, யானை நிணத்தை விரும்பி யுண்ணுமேனும், அவ்யானையின் ஆற்றல் காண, ஓரளவு அச்சமும் கொள்ளும் ; அதிலும் களிற்றின் கூரிய கோடுகள் புலிக்குப் பேரச்சம் தரும் ; அதனால் யானைகளைத் தாக்கும் புலி, பொதுவாகக் களிறுகளைத் தாக்குவதில்லை. ஆனால் அன்று, தன் காதற் பிணையின் பசித்துன்பம் காணமாட்டா அதன் கனிந்த உள்ளம், அவ் வச்சத்தையும் மறக்கச்செய்து எதிர்ப்பட்ட களிற்றின் மீது துணிந்து பாய்ந்தது. காதல் வெறியால், ஆற்றல் மிக்கு எதிர்த்த புலியின் தாக்குதலைத் தாங்கமாட்டாது தளர்ந்து வீழ்ந்தது வேழம். வெற்றி கண்ட புலி, அவ் வெற்றிப் பெருமிதம் தோன்ற, அக்காடே அதிருமாறு, இடியென முழங்கி மகிழ்ந்தது. காதல் மிகுதியால் களிற்று யானையையும் கொன்றுவீழ்த்தும் புலியின் வன்மை போற்றற் குரியதன்றோ ?

‘ கல் அயல் கலித்த கருங்கால் வேங்கை
அலங்கலம் தொடலை அன்ன குருளை
வயப்புனிற்று இரும்பிணப் பசித்தென, வயப்புலி
புகர்முகம் சிதையத் தாக்கிக் களிறு அட்டு
உருமிசை உரறும்.'' 1

---

1. நற்றிணை : 383. கோளியூர் கிழார் மகனார் செழியனார்

கல்-மலை. கலித்த-தழைத்து வளர்ந்த. அலங்கலம் தொடலை-மலரால் தொடுக்கப்பெற்ற ஆடும் மாலை. குருளை-புலிக்குட்டி. வயப்புனிறு-கரு வுயிர்த்தமையால் உண்டாம் உடல் நோய். வயப்புலி-வலியபுலி. உருமிசை-இடியைக்காட்டிலும். உரறும்-முழங்கும்.

அஞ்சாமைக்கும் ஆண்மைக்கும் எடுத்துக்காட்டாய் விளங்குவது பிறிதொரு புலி ; அதன் பிணவும் குட்டி ஈன்று கிடந்தது ; மலைமறைவில் மகவீன்று கிடக்கும் அதுவும் தன்கூரிய நகங்களால் உயிர்களைக் கொல்ல வல்லதே எனினும், கருவுயிர்த்த தளர்ச்சி மிகுதியால் செயலற்றுக் கிடந்தது ; அக் காட்சியைக் கண்டுவிட்டது அவ்வாண்புலி ; எதிர்ப்பட்ட உயிர்களைக் கொன்றல்லது போகா ஆற்றல் உடையது அப்புலி; அது, பசி நோயால் வருந்தும் தன் பிணவைக் காணவே சினம் மிகுந்தது ; சினத்தால் கண்கள் சிவப்பேறின. அத்தோற்றத்தோடு புறம் போந்தது. இனிய உணவாகப் பயன்படும் உயிரைத் தேடி உழன்றது. ஆனால், நெடிது சுற்றி, நான்கு திசைகளிலும் திரிந்தும் எவ்வுயிரும் எதிர்ப்பட்டிலது; அதனால், மேலும் மேலும் சினம் மிகச் சென்றுகொண்டேயிருந்தது. செல்லுங்கால் வழியில் மராமரம் ஒன்றின் கீழ் வீரர் பலர், தன்னை வேட்டையாடிக் கைப்பற்றும் கருத்தோடு, வில்லை வளைத்தவாறே, வழிமேல் விழியுடையவராய் மறைந்திருப்பதைக் கண்டுவிட்டது ; கண்டும், அவரால் தனக்கு நேரும் கேட்டை எண்ணிக் கலங்கவில்லை ; வந்த வழியே திரும்பி மீண்டு ஓடிவந்து விடவில்லை ; மாறாக, அவர்களைக் கண்டதால், அது மேலும் சினமே கொண்டது ; அவ்வீரர்களைப் பொருட்படுத்தாமலே சென்றது ; இறுதியில் எதிர்ப்பட்டது ஒரு களிறு ; எதிர்ப்பட்ட அக்களிறு எளிதிற் கொல்லத் தக்க இளமை வாய்ந்தது அன்று ; யானைகளுக்கெல்லாம் தலைவனும் தகுதிவாய்ந்தது ; அக்களிற்றின் பேராற்றலை, அதன் வெண்கோடுகளின் பெருமையே புலப்படுத்திற்று ; ஆயினும், அதன் தோற்றம் கண்டு தளர்ந்துவிடவில்லை அப்புலி ; தன் பிணவின் பசி தீர்க்க அகப்பட்டது ஓர் உயிர் எனும் ஆர்வ மிகுதியால், அஞ்சாது அதன்மீது பாய்ந்து அழித்தது. வீரர்

வில்லையும், வேழத்தின் கோட்டையும் அஞ்சாது, ஆற்றல் கொண்டு தாக்கப் பண்ணும் புலியின் காதற் பெருமையோ பெருமை!

"செங்கால் மராஅத்து அம்புடைப் பொருந்தி
வாங்குசிலை மறவர் வீங்குநிலை அஞ்சாது
கல்லளைச் செறிந்த வள்உகிர்ப் பிணவின்
இன்புனிற்று இடும்பை தீரச் சினம் சிறந்து
செங்கண் இரும்புலிக் கோள்வல் ஏற்றை
உயர் மருப்பு ஒருத்தல் புகர்முகம் பாயும்."1

**குறும்புக் குரங்குகள்:**

விலங்கினங்களுள், விளையாட்டியல்பு வாய்ந்தது குரங்கு; குரங்குகளின் குறும்புச் செயல்களைக் குறிக்கும் கதைகள் நாட்டில் பல வழங்கக் கேட்டிருக்கிறோம்; அதன் விளையாட்டிற்கு வரம்பு அமைத்தல் இயலாது அது மக்களோடும் விளையாடும். தன்னை யொத்த ஏனைய விலங்குகளோடும் விளையாடும்; மக்களையும், மாவினங்களையும் தங்கள் விளையாட்டுக் கருவியாக்கிக் கொள்ளும் அக்குரங்கினம், அவர்களை முதற் கண் அழவைத்து, அவர் அழுகை கண்டு அகம்மகிழ்ந்து, பின்னர் அவரை மகிழ்விக்கும் ஆடல் வல்லது.

**பாற்கிண்ணம் கவர்ந்தோடிய பறழ்:**

மலைச்சாரலையடுத்திருந்தது ஒரு குறவர் சேரி; அச் சேரியில் சிறந்து விளங்கிற்று ஒரு குடில்; அக் குடில் முற்றத்தே வளர்ந்திருந்தது ஒரு வேங்கை மரம்; அவ்

---

1. நற்றிணை: 148. கள்ளம்பாளனார்.

செங்கால்-சிவந்த அடிமரம். அம்புடை-அழகிய இடம். வாங்கு சிலை-வளைந்தவில். மறவர்-வீரர். வீங்கு நிலை-பலர் கூடி இருக்கும் நிலை. கல் அளை-மலைக்குகை. வள் உகிர்-கூரியநகம். இன்புனிற்று இடும்பை-இனிய குட்டிகளை ஈன்ற நோய். கோள்வல்-கொலைத் தொழில் வல்ல. ஏற்றை-ஆண்புலி. ஒருத்தல்-யானைத் தலைவன்.

வேங்கை, கப்புவிட்டெரியும் செந்நெருப்புப் போலும் செந்நிற மலர்களால் நிறைந்து மணம் நாறும் காலம்; ஒரு நாள் ஆங்கு வந்தது ஒரு குரங்குக் குட்டி; நனிமிக இளமை வாய்ந்தது அது; தன் இனத்திற்குரிய தொழிலை முற்றக் கல்லாத பருவம் அதன் பருவம்; அம் மனை நோக்கி வந்த அக்குட்டி, அம் மனை முன்றிலிடத்தே, அம் மனையின் செல்வச் சிறுமி, பொற் கிண்ணத்தில் உள்ள பாலுணவை உண்டு கொண்டிருந்ததைக் கண்டுவிட்டது. அவ்விடத்தை விட்டு அகலாது ஆங்கணே உழலத் தொடங்கிற்று; சிறுமியின் தாய் பலமுறை விரட்டினள் அதை; அவளை ஏமாற்ற எண்ணிய அக்குட்டி, அவ் விடத்தைவிட்டு அகன்றதுபோல் காட்டி, அவள் அறியா வாறு, அவ் வேங்கை மரத்தில், அடர்ந்து தழைத்துள்ள ஒரு கிளையில் ஏறி ஒளித்துக்கொண்டது. குரங்கு ஓடி விட்டது என்ற எண்ணத்தால் சிறிது அயர்ந்தாள் தாய்; அவள் அயர்ந்த நிலை நோக்கி, மரத்தினின்றும் திடு மெனக் குதித்து ஓடி, சிறுமியின் கைக் கிண்ணத்தை வலிதிற் கைப்பற்றிக்கொண்டு, மரத்தின் உயர்ந்த கிளையில் ஏறி அமர்ந்து உண்ணத் தொடங்கிவிட்டது; கைக் கிண்ணத்தைப் பறி கொடுத்த அப்பெண், தீட்டிய மையும் கரைந்து அழுகிழக்குமாறு கண்ணீர் சொரிந்து அழுதாள். அழுகை மிகுதியால் செங்காந்தள் மலர் போல் சிவந்துவிட்டன அவள் கண்கள். அவள் அவ் வாறு அழக் கண்டும், குரங்குக் குட்டி, அவள் பொருட்டு இரங்கி, அக் கிண்ணத்தை அவள் பால்தர எண்ணாது, அவள் அழ அழப் பாற் சோற்றை வாரிவாரி வாயில் திணித்து உண்ணத் தொடங்கிற்று.

> 'புன்தலை மந்திக் கல்லா வன்பறழ்
> குன்றுழை நண்ணிய முன்றிற் போகாது,
> எரி அகைந்தன்ன வீததை இணர

வேங்கையம் படுசினைப் பொருந்திக் கைய
தேம்பெய் தீம்பால் வெளவலின் கொடிச்சி
எழுது எழில் சிதைய அழுத கண்ணே
காந்தள் அம்கொழுமுகை போன்றன சிவந்தே.''1

**கூத்தாடிய குரங்கு :**

குறவர்பாடியில் ஒரு நாள் கழைக் கூத்து நடைபெற்றது. வலிய மூங்கில்கள் இரண்டை இருபாலும் நாட்டி, அவற்றினிடையே, முறுக்குண்ட வலிய கயிற்றைப் பிணித்திருந்தனர்; ஒருபால் குழல் ஒலித்தது; இன்னொருபால், அக்குழலொலிக் கேற்பப் பல்வேறு இசைக் கருவிகளின் இன்னிசை எழுந்தது. ஆடுந் தொழில் வல்ல இளைய மகள் ஒருத்தி, அழகாக அணி கொண்டு அவண் வந்தாள்; பிணித்திருந்த கயிற்றின் மீது ஏறி, அவ்விசைகளுக்கேற்ப அடியிட்டு ஆடிக் காட்டினாள்; அவள் ஆடல் அழகைக் கண்டு அகம் மகிழ்ந்தனர் அச்சிற்றூர்க் குறவர்கள்; ஆட்டம் முடிவுற்றது; ஆடிய அவளும், அவள் ஆடலைக் கண்டு மகிழ்ந்த குறவரும் போய்விட்டனர்; ஆனால், அக்கழையும், கயிறும் மட்டும் அவ்வாறே இருந்தன.

ஆடல் மகள் ஆடிக்கொண்டிருக்குங்கால் ஆங்கு வந்தது ஒரு குரங்குக் குட்டி; அத்திப் பழம் போல் சிவந்திருந்தது அதன் முகம்; பஞ்சுபோல் மெத்தென்றிருந்தது அதன் தலை. கழைக் கூத்தைக் கண்ட அக்குட்டிக்குத்

1. நற்றிணை : 379. குடவாயில் கீரத்தனார்.

புன்தலை-சிறிய தலை. மந்தி-பெண் குரங்கு. பறழ்-குரங்குக்குட்டி குன்றுழை நண்ணிய-குன்றை அடுத்துள்ள. அசைந்தன்ன-கப்புவிட்டு எரிந்தாற்போல். வீ-மலர். ததை-நெருங்கிய. இணர்-கொத்துக்களை உடைய. படுசினை-தாழ்ந்த கிளை. தேம்பெய்-தேன்கலந்த. தீம்பால்-இனியபால். கொடிச்சி-குறப்பெண். எழில்-அழகு. கொழுமுகை-பெரிய அரும்பு.

தானும் ஆடவேண்டும் எனும் ஆர்வம் எழுந்தது; உடனே ஓடி, அக்கயிற்றின் மேல் ஏறி நின்று ஆடத் தொடங்கிவிட்டது; அதைப் பார்த்துவிட்டனர், அச் சேரிவாழ் சிறுவர்கள்; அவர்கள் மகிழ்ச்சி அளவிறந்து விட்டது; அவ் வாட்டம் நடைபெற்ற இடத்திற்கு அண்மையில் ஒரு மலை; அம் மலையில் வளர்ந்திருந்தது மூங்கில்; மகிழ்ச்சி மிகுதியால், மலைமீது ஏறி, வானுற வளர்ந்து கிடக்கும் அம் மூங்கிலை வலிதிற் பற்றி வளைத்து, அதன் மீது ஏறி அமர்ந்தனர்; தரையைக் காலால் உந்தி மேலே ஏறியும், கீழே இழிந்தும் ஆடத் தொடங்கினர்; குரங்கு, கழைக் கயிற்றின்மேல் ஏறி ஆட, மலைவளர் மூங்கில்மீது அமர்ந்து தாம் ஆட, அகமகிழ்ந்த அவர்கள், அம்மகிழ்ச்சி மிகுதியால், கையால் தாளம் கொட்டிக் களித்தனர்; குறச் சிறுவர்க்கு ஆடல் விருப்பத்தை ஊட்டி ஆடப்பண்ணிற்று, கழைக்கயிற்றின் மீது ஏறி ஆடிய அக்குட்டி.

"கழை பாடு இரங்கப், பல் இயம் கறங்க
ஆடுமகள் நடந்த கொடும்புரி நோன் கயிற்று
அதவத் தீங்கனி அன்ன செம்முகத்
துய்த்தலை மந்தி வன்பறழ்தூங்கக்,
கழைக்கண் இரும்பொறை ஏறி விசைத்து எழுந்து
குறக்குறு மாக்கள் தாளம் கொட்டும்.''1

**கள்ளுண்ட குரங்கு:**

விலங்கினத்திற் பிறந்ததேனும் மக்களோடு பழகி வாழும் பண்புடையது குரங்கு. அதனால் அம்மக்களின்

1. நற்றிணை: 95. கொட்டம்பலவனார்.
பாடு-பக்கத்தில். கழை-மூங்கிலால் செய்த குழல். இரங்க, கறங்க-ஒலிக்க. இயம்-இசைக் கருவிகள். கொடும்புரி-முறுக்குண்டபுரி. நோன் கயிறு-வலிய கயிறு. அதவத்தீங்கனி-அத்திப்பழம். துய்த்தலை-பஞ்சு போன்ற மெத்தென்ற தலை. தூங்க-ஏறி ஆட. இரும்பொறை-பெரியமலை. கழை-மூங்கில். பொறைக்கண் கழை என மாற்றுக.

பழக்கவழக்கங்களில் பெரும்பாலனவற்றை மந்திகளும் பெற்றிருந்தன. குரங்குக்குட்டி யொன்று, குறவர் குடியில் வந்த இளஞ் சிறுவர்களின் இனிய தோழனாய், அவர்கள் போகும் இடந்தோறும், அவர்களைவிடாது பின்பற்றிச் சென்றது. ஒரு நாள் அக்குறச் சிறுவர், தம் குன்றை அடுத்த சாரலுக்குச் சென்றனர்; ஆங்கு மலைப்பாறைகளுக்கிடையே வளர்ந்திருந்தது ஒரு வேங்கை; அவர்கள் ஆங்குச் சென்ற காலத்தில், அம்மரம் மலர்களால் நிறைந்திருந்தது; அவ் வேங்கை மலர்த்தேனை உண்ணவந்து மொய்க்கும் வண்டுகளின் இசை காதுக்கு இன்பம் ஊட்ட, அம் மரத்தை அண்ணாந்து நோக்கினர்; அம் மரக்கிளைகளில் பெரிய பெரிய தேனடைகள் தொங்கின; வண்டுகள் பெருங் கூட்டமாய்க் கூடி, அத் தேனடைகளை மொய்த்துக் கிடந்தன; அதனால், அத் தேனடைகளின் அகத்தே உள்ள தேன், தெறித்துத் துளித்துளியாகச் சிதறி வீழ்ந்தது. இக் காட்சியைக் கண்ட அக் குறச் சிறுவர் மரத்தடிக்கு ஓடிச் சென்று உற்று நோக்கினர். சிதறிய தேன், மலைப் பாறைகளில், ஆங்காங்கே உள்ள சிறு சிறு பள்ளங்களில் நிறைந்து வழிந்து கொண்டிருந்தது; தேனைக் கண்ட சிறுவர் வாயில் நீர் சுரந்தது; அத்தேனை வாரி வாரி வயிறாரக் குடித்துக் களித்தனர். இவற்றையெல்லாம் கண்டுகொண்டே இருந்தது அக்குட்டி; குறச் சிறுவர் அவ்விடம் விட்டு அகலக்கண்டு, அம்மரத்தடிக்கு விரைந்து ஓடிற்று; ஓடித் தேன் தேங்கிய குழிகளை நோக்கிற்று; அவற்றிலிருந்த தேன் முழுவதும், அச் சிறுவர்களால் உண்ணப்பட்டுப் போயினமை கண்டு, அக் குழிகளுள் தலையிட்டு, நாக்கை நீட்டி, நக்கி நக்கிச் சுவைத்து மகிழ்ந்து சென்றது.

சுரும்பு உண விரிந்த கருங்கால் வேங்கைப்
பெருஞ்சினைத் தொடுத்த கொழுங்கண் இறாஅல்,

புள் உற்றுக் கசிந்த தீந்தேன், கல்லளைக்
குறக்குறு மாக்கள் உண்ட மிச்சிலைப்
புன்தலைமந்தி வன்பறழ் நக்கும்.''1

**விருந்துண்ட மந்தி :**

அவளொரு மலைநாட்டு மகள்; மழை மேகம் தங்கும் உயர்வுடையது அவள் மலை; மலைச் சாரலை அடுத்துள்ள நிலங்களை, அவற்றில் உள்ள கற்களைப் போக்கி உழுது பயன்கொள்ளும் தொழில்வளம் அறிந்த குறவர் அவள் பெற்றோர்; அவர்களின் அன்பிற்குரிய செல்வ மகள் அவள். அவள் மனையின் மன்றத்தில் ஒரு பலாமரம் உளது; அஃது ஒரு வேர்ப்பலா; அடி பருத்த பெரு மரம்; கோயில் முரசுபோலும் பெரும் பெரும் பழங்களைப் பழுத்துப் பயனளிக்கும் அப்பலா. ஒரு நாள், அவள் தன் மனையின் மன்றத்தே தங்கி, அப்பலாவினைக் காவல் மேற்கொண்டிருந்தாள். அப்பொழுது ஆங்கு வந்தது ஒரு மந்தி; அதன் கைகளை நோக்கினள் அப்பெண்; அக் கைகளில், காய்களையும், கனிகளையும் கவர்ந்து, தின்று தின்று கருநிறம் பெற்ற விரல்களைக் கண்டாள்; தான் தராது போயினும், அது அப் பலாக்கனியைப் பறித் தோடிப் போவது உறுதி என்பதை அறிந்தாள்; அதனால் அது பறித்துப் போவதற்கு முன்பே, அதை வலிய அழைத்து, அதுவேண்டும் பழம் அளித்து அனுப்புவதே நலமாம்; வீடு நோக்கி வரும் மக்களுக்கே யன்றி, மந்தி களுக்கும் விருந்தளிக்கும் விழுமிய உள்ளம் உடையவர் குறவர் என்ற பெருமையாவது வாய்க்கட்டும் என

---

1. நற்றிணை : 168.

சுரும்பு-வண்டு. உண விரிந்த-உண்ணுமாறு மலர்ந்த. சினை-கிளை. தொடுத்த-கட்டப்பெற்றுள்ள. இரு அல்-தேன் அடை. புள்-தேனீக்கள். உற்று-மொய்த்தலால். கல் அளை-கல்லிடத்துக் குழிகள். குறக்குறு மாக்கள்-குறச் சிறுவர்கள்

எண்ணினாள் ; உடனே பருத்த பழம் ஒன்றைப் பறித்துப் பிளந்து அச் சுளைகளை, அம் மந்திக்கு வேண்டுமட்டும் அளித்தாள் ; அதுவும் விருந்துண்ட மகிழ்ச்சியோடு தன் மலைவீட்டிற்கு மீண்டது.

ஆடுமழை தவழும் கோடு உயர் நெடுவரை
முடம் முதிர் பலவின் குடம் மருள் பெரும் பழம்
கல்உழு குறவர் காதல் மடமகள்
கருவிரல் மந்திக்கு வருவிருந்து அயரும்
வான் தோய் வெற்பு.''1

**பலாக்கனியைப் பாழாக்கும் குரங்கு :**

முன்னாள் விருந்துண்டு மகிழ்ந்த மந்தி, மறுநாளும் அவ்விருந்தில் ஆர்வம் மிகவே, அக்குறவர் குடிலுக்குச் சென்றது ; ஆனால் அன்று, குரங்கின் வரவினை அறிந் திலள் அக்குறப் பெண் ; அது வந்தபொழுது, அவள் நெல் குற்றிக் கொண்டிருந்தாள் ; நெல் குற்றும் தொழில் வருத்தம் தோன்றாவாறு, தங்கள் வளத்திற்கெல்லாம் விழுமிய துணையாம் மழையினைத் தரவல்ல மேகங்களைத் தடுத்துத் தன்பால் நிறுத்திப் பயன் தரும் தங்கள் மலையை வாழ்த்தும் வாழ்த்துப் பாடல்களைப் பாடிக் கொண்டே நெல் குற்றினாள். தொழில் மேற் சென்ற கருத்துடையளாகவே, மந்தி வந்ததை அவள் அறிந் திலள் ; அதனால் சினங் கொண்டது மந்தி ; உடனே பழுத்து நிற்கும் பலாமரத்தின் மீது தானே ஏறிற்று ; பலாக்கனிகளைப் பிளந்தது ; அவற்றில் நிறைந்துள்ள

1. நற்றிணை : 353, கபிலர்

ஆடு மழை-காற்றில் அசைந்து திரியும் மேகம். கோடு-மலை உச்சி. நெடுவரை-நெடியமலை. முடம் முதிர்-முடப்பட்டு முதிர்ந்த. குடம் மருள்-குடம்போன்ற. கல்-மலைச்சாரல் நிலத்தை, விருந்து அயரும்-விருந் தளித்து ஓம்பும்.

சுளைகளை வேண்டுமட்டும் தின்றது ; தான் விரும்பாத பலாக் கொட்டைகளைக் கீழே உதிர்த்தது ; கொட்டைகளால் மறைப்புண்டது அம்முன்றில் ; அவ்வளவு பேரழிவினை விளைத்துவிட்டு, அவளோ, அல்லது அம்மலை வாழ் குறவரோ அறிந்துகொள்ளா முன்பே, வாழும் இடத்திற்கு வந்துவிட்டது.

முன்றில் பலவின் படுசுளை மரீஇப்
புன்தலை மந்தி தூர்ப்பத் தந்தை
மைபடு மால்வரை பாடினள் கொடிச்சி,
ஐவன வெண்ணெல் குறூஉம்.'' 1

## குட்டிக்கு ஆவின் பாலூட்டும் குரங்கு :

ஒரு மந்தி, ஈன்றெடுத்த மகவோடும் தன் இனத்துப் பிற குரங்குகளோடும், எவரும் அஞ்சிக் கண்விழித்துக் கொள்ளுமாறு, பேரொலி எழுப்பிக் கொண்டே மலைச் சாரலை அடுத்த காட்டுவழியே போய்க்கொண்டிருந்தது. தன் கூட்டத்திற்குத் தலைமை தாங்கி முன்னே சென்று கொண்டிருந்த மந்தி, திடுமென நின்றது ; பின்புறம் திரும்பித் தன் கூட்டத்தைக் கூச்சல் இடாவாறும், மேற் கொண்டு நகராவாறும் கையால் சைகை செய்து, வாயடைத்து நிற்கச் செய்தது ; மந்தியின் செயலுக்குக் காரணம் அறியாது கலங்கிற்று அக்குரங்குக் கூட்டம்; மலைமேல், வேங்கை மரத்தின் நிழலில், காட்டுக் கொடு விலங்குகளுக்கு அஞ்சாது, அயர்ந்து உறங்கிக்கொண்டிருக்கும் வளைந்த வலிய கொம்புகளைக் கொண்ட ஒரு காட்டுப் பசுவைக் கண்டது ; அது கன்றீன்ற பசு ;

---

1. நற்றிணை : 373. கபிலர்.

படுசுளை-மிக்க சுளை. மரீஇ-உண்டு. தூர்ப்ப-கொட்டைகளால் தூர்ப்ப. மைபடு – மேகம் தங்கும். • பாடினள் – பாடிக்கொண்டே. கொடிச்சி – குறப்பெண். குறூஉம்-குற்றும்.

தழைகளை மேய்ந்து உறங்குவதால், பாலால் நிறைந்து கனத்திருந்தது அதன் மடி; அதைப் பார்த்துவிட்டது அம் மந்தி; உடனே மெல்ல மெல்ல அடியெடுத்துவைத்து அப்பசுவை அணுகிற்று; அதன் மடியைக் கையால் பற்றி, அழுத்திப், பாலைக் கறந்து கறந்து, தன் இனத் தொழிலையும் கல்லாத இளமை வாய்ந்த தன் குட்டியின் கைந்நிறையப் பிழிந்து உண்பித்தது; பசுவும், உறக்க மிகுதியாலும், தன் கன்று பால் உண்ணுகிறது போலும் எனும் நினைவாலும் அசைவற்றுக் கிடந்தது; மந்தியும் தன் குட்டிக்கு வேண்டுமட்டும் கறந்தளித்தது. மந்தியின் மதி நலம் என்னே! அது தன் குழவி மாட்டுக் காட்டும் அன்புதான் என்னே!

" தடங்கோட்டு ஆமான் மடங்கல் மாநிரைக்
குன்ற வேங்கைக் கன்றொடு வதிந்தெனத்
துஞ்சுபதம் பெற்ற துய்த்தலை மந்தி
கல்லென் சுற்றம் கைகவியாக் குறுகி
வீங்குசுரை ஞெமுங்க வாங்கித் தீம்பால்
கல்லா வன்பறழ்க் கைந்நிறை பிழியும்." 1

### கறிர் திருடிக் கடுவனைக் காக்கும் மந்தி :

மலை நாடொன்றில் காதலனும் காதலியுமாக வாழ்ந்திருந்தன இரு குரங்குகள்; கடுவன் என அழைக்கப் பெறும் ஆண் குரங்கு, தாவும் தன் தொழில் தவிர்த்து வேறு தொழில் அறியாது; உழைத்து உணவு தேடி

1. நற்றிணை : 57. பொதும்பில் கிழார்.

தடங்கோடு - வளைந்த பெரிய கொம்பு. ஆமான் - காட்டுப் பசு. மடங்கல்-சிங்கம். துஞ்சுபதம் பெற்ற - உறக்க நிலை அறிந்த. துய்த்தலை - பஞ்சு போல் மெத்தென்ற தலை. கல்லென் சுற்றம் - கல் எனும் பேரொலி எழத் திரியும் குரங்குக் கூட்டம். வீங்கு சுரை - பால்நிறைந்து பருத்தமடி. ஞெமுங்க - அழுந்துமாறு. வாங்கி - இழுந்து.

உண்ணும் உணர்வு அதற்கு இல்லை. ஆனால் அதன் காதலியாகிய மந்தியோ சூழ்ச்சித்திறன் மிக்கது ; பசித் துயர் வருத்த வாடி நிற்கும் தன் காதலனைக் கூட்டிக் கொண்டு மலைச்சாரலுக்குச் சென்றது. ஆங்கு ஓர் தினைப் புனம் நன்கு விளைந்து, கதிர் முற்றித் தலைசாய்ந்து கிடந்தது. அதைக் காத்திருந்தாள் ஒரு பெண் ; அவள் அறியாவாறு புனத்துள் புகுந்தது; தலைக் கதிர்களாகப் பார்த்துப் பறித்துக்கொண்டது ; கடுவனையும் அழைத் துக் கொண்டு, அப்பெண் ஏறித்துரத்திவருதற்கியலாத வாறு மலையுச்சியை அடைந்தது ; ஓரிடத்தே எதிரெதிராக அமர்ந்தன இரண்டும் ; கதிர்களைக் கைகளால் நிமிண்டி, பதர் போக ஊதி, வாயிலிட்டு உண்ணத் தொடங்கின ; உண்ணத் தொடங்கியதும் வானத்தில் மேகம் கருத்துத் திரண்டது ; மழை வந்து விடுமோ எனும் அச்ச மிகுதியால் தினையை மென்று தின்ன மாட்டாது, அனைத் தையும் வாயிலிட்டுத் திணித்தன. உணவு, வாய்நிறைந்து விட்டமையால், இரு தாடைகளும் வீங்கின. அதற் குள்ளாகவே மழையும் வந்து விட்டது ; பறித்துக் கொணர்ந்த கதிர்களைப் பாழாக்கி விடுதல் கூடாதே என்ற எண்ண மிகுதியால், மழை நீர், மேனியை நனைப் பவும், இடம் விட்டுப் பெயராமல், உண்டற்றொழிலைத் தொடர்ந்து மேற்கொண்டிருந்தன. மழை மேனியை நனைப்ப உண்டிருக்கும் அக்குரங்குகளின் தோற்றம், தைந்நோன்பு நோற்கும் பெரியோர், நீராடி, நீராடிய ஈரம் புலரா முன்பே, உணவுண்ணும் காட்சியை நினைவூட்டு வதாய் இருந்தது.

கொடிச்சி காக்கும் அடுக்கல் பைந்தினை
முந்துவிளை பெருங் குரல் கொண்ட மந்தி
கல்லாக் கடுவனொடு நல்வரை ஏறி
அங்கை நிறைய ஞெமிடிக்கொண்டு தன்

திரை அணல் கொடுங் கவுள் நிறைய முக்கி
வான்பெயல் நனைந்த புறத்த நோன்பியர்
தையூண் இருக்கையில் தோன்றும்.'' 1

**மீன் முடை வெறுக்கும் மந்தி :**

பலா மரங்கள் நிறைந்த ஒரு மலைச் சாரலை வாழிடமாகக் கொண்டு வாழ்ந்திருந்தது ஒரு மந்தி; பலாக் கனிகளின் பருத்த சுளைகளைத் தின்றும், அவற்றின் இனிய மணத்தை நுகர்ந்தும் மகிழ்ந்திருந்தது. ஒரு நாள் அம்மலைச்சாரலுக்கு எங்கிருந்தோ வந்து சேர்ந்தது ஒரு கொக்கு. வந்து, அம் மந்திவாழும் பலா மரத்தின் பழங்களின் நிறை மிகுதியால் வளைந்து தாழ்ந்த ஒரு கிளையில் அமர்ந்தது. மலைநாட்டையடுத்த மருத நாட்டினின்றும் வந்த அக்கொக்கு தனியே வாராது, அது விரும்பியுண்ணும் மீன் ஒன்றையும் உடன் கொண்டு வந்தது; கொண்டு வந்த அம்மீனை, அம்மரத்தின் மீது வைத்துக் கொத்திக் கொத்தி உண்ணத் தொடங்கிற்று; இயல்பாகவே புலால் நாறும் இயல்புடையது மீன்; அது இறந்து போய்விடின், அந்நிலையில் அதனினின்றும் வீசும் முடை நாற்றம் தாங்க முடியாமல் பெரு நாற்றமாம்; காய் கனி கிழங்கு போன்றவை யல்லது, மீன் போலும் புலால் உணவுகளை உண்டறியா உயர்ந்த ஒழுக்கமுடையது மந்தி; அதனால் அந்நாற்றத்தைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை; அந்நாற்றம் கலந்து வந்த காற்று அதன் மூக்கினுள் நுழைந்தவுடனே, அந்நாற்றத்தைப்

நற்றிணை : 22.

கொடிச்சி - குறப்பெண். அடுக்கல் - மலைப்பக்கம். குரல் - கதிர். வரை-மலை. அங்கை - உள்ளங்கை. ஞெமிடி - நிமிண்டி. திரை அணல் - தோல் சுருக்கம் வாய்ந்த மோவாய். கொடுங்கவுள் - வளைந்த தவடை. முக்கி - மெல்ல மெல்ல மென்று. நோன்பியர் - உண்ணு நோன்பு உடையவர். தையூண் - தைமாதத்தில் முடியும் ஒருவகை நோன்பின் ஈற்றில் உணவு உண்டிருத்தல்.

பழகி அறியாத அம்மூக்கினின்றும் தும்மல்கள் தோன்ற லாயின; தும்மல் மிகுதியால் துயர் உற்றது மந்தி. புலால் உணவின் மணத்தையும் வெறுக்கும் மந்தியின் ஒழுக்க மாண்பினைப் போற்றுவோமாக.

> கொழுஞ்சுளைப் பலவின் பயங்கெழு கவா அன்
> செழுங்கோள் வாங்கிய மாச்சினைக் கொக்கின்
> மீன்குடை நாற்றம் தாங்கல் செல்லாது
> துய்த்தலை மந்தி தும்மும் நாடு.'' 1

**காதல் நெறி உணர்ந்த மந்தி :**

கரிய விரல்களையும் சிவந்த முகத்தையும் உடைய குரங்களின் பெரிய கூட்டத்தைத் தன் சுற்றமாகக் கொண்டு வாழ்கிறது ஒரு பெண் குரங்கு. பெரிய சுற்றத்தைப் பேணிப்புரக்கும் பொறுப்பின் மிகுதியால் அது, தன் காதலனோடு ஆடிப்பாடி மகிழும் காதல் வாழ்வைக் கைவிட விரும்புவதில்லை. தன்னைப் பின் தொடர்ந்து வாழும் அப்பெருங் கூட்டத்திற்குத் தேவையான உணவுகளைத் தேடி அளித்த பின்னர், அது, தன் காதலனோடு தனியிடம் நாடிச் செல்லும்; சென்று, மலையை அடுத்துள்ள சாரலில் பாய்ந்தோடும் அருவி நீரில் புகுந்து ஆடும்: பின்னர்க்கரை ஏறி, ஆங்கு வளர்ந்திருக்கும் வளைந்த மூங்கில்மீது, கடுவனோடிருந்து ஊசலாடி மகிழும்; ஆடல்பாடல்களால், மனம் மகிழ்ச்சியால் நிறைந்திருக்கும் அந்நிலையில், அம்மலையில், பிற உயிரினங்கள் ஏதுவும் புகுதலறியாத மறைவிடத்தே உள்ள சுனைக்கரையில் வளர்ந்திருக்கும் வேங்கை மரத்தின்மீது ஏறித், தம்

1. நற்றிணை : 326. மருதன் இளநாகனார்.

கொழுஞ்சுளை-பருத்த சுளை. கவான்-மலைச்சாரல். செழுங்கோள்-பழங்கள் நிறையப் பழுத்தமையால். வாங்கிய-வளைந்த. மாச்சினை-பெரிய கிளை. துய்த்தலை-பஞ்சுபோன்ற மெத்தென்ற தலை.

புணர்ச்சி நிகழ்ச்சியால், அம்மரத்து மலர்கள், காம்பற்றுக் கீழுள்ள சுனைநீரில் உதிருமாறு புணர்ந்து மகிழும். உண்மைக் காதலர் மெய்யுறு புணர்ச்சியினும், உள்ளுறு புணர்ச்சியையே பெரிதும் விரும்புவர்! உள்ளுறு புணர்ச்சியால் உள்ளம் மகிழ்ந்த பின்னரே, மெய்யுறு புணர்ச்சிக் கண், அவர் நாட்டம் செல்லும்; உள்ளம் உவந்த பின்னர் உண்டாம் புணர்ச்சியே பேரின்பம் தரும். காதற் புணர்வின் இக்கருத்தினை அறிந்து அருவி ஆடியும், ஊசல் ஊக்கியும் மகிழ்ந்த பின்னரே, புணர்ச்சியை விரும்பும் அம்மந்தியின் மனவுணர்வினைப் பாராட்டுவோமாக.

“ கருவிரல் மந்திச் செம்முகப் பெருங்கிளை
பெருவரை அடுக்கத்து அருவி ஆடி,
ஓங்கு கழை ஊசல் தூங்கி, வேங்கை
வெற்பு அணி நறுவீ, கற்சுனை உறைப்பக்
கலையொடு திளைக்கும் ” 1

## மானம் காக்கும் மந்தி

மானவுணர்வு பெற்று வாழ்ந்தது ஒரு மந்தி; தாயினும் சிறந்தது எனப்படும் நாண் நன்கு வாய்க்கப் பெற்றது அம்மந்தி; காதல் விளையாட்டைக் கண்ட இடங்களிலெல்லாம் மேற் கொள்ளும் இக்காலக் கயவர்க்கு நல்லறிவூட்டும் நிறை குணம் உடையது அம்மந்தி. அது தன் காதலனுய கடுவனோடு கலந்து வாழும் வாழ்வை, அக்கடுவனை மகிழ்ந்து புணரும் புணர்ச்சியைத் தன் பின் திரியும் இனக்குரங்குகள் அறிந்து கொள்ளுமே என அஞ்சிற்று. அதனல், மிளகுக் கொடிகள் படர்ந்து,

1. நற்றிணை : 334. ஐயூர்முடவனர்.
கிளை-இனக்குரங்குகள். ஓங்குகழை-உயர்ந்த மூங்கில். தூங்கி-ஆடி. வெற்பு அணி-மலைக்கு அழகு செய்யும். நறுவீ-மணம் நிறைமலர். உறைப்ப-உதிருமாறு. கலை-ஆண் குரங்கு. திளைக்கும்-புணர்ந்து மகிழும்.

பிறர் எவரும் எளிதிற் புகமாட்டா மறைவிடத்தே சென்று புணர்ந்தது. புணர்ந்த பின்னர், தாம் புணர்ந்ததை, அவ்வினக் குரங்குகள் கண்டில வேனும் புணர்ச்சியால், தன் உடல்பெற்றிருக்கும் வேறு பாட்டினைக் காணநேரின், தாம் புணர்ந்ததை அவை உணர்ந்துவிடும்; அவ்வுணர்ச்சி யாலும் தன் நாண்கெடும் என உணர்ந்தது ; அதனால், அப்புணர்ச்சியால், தன் மெய்யில் யாதேனும் வேறுபாடு உண்டாயிருப்பின், அதையும் போக்கி விடுதல் வேண்டும் என விரும்பிற்று. உடனே, சுனையருகே நிற்கும் வேங்கைமீது ஏறிற்று ; சுனைநீரிற் படுமாறு மிகத் தாழ்ந் திருக்கும் அதன் கிளைமீது மெல்லச் சென்றது. சென்று, ஆடாது அசைவற்றுத் தெளிந்து நிற்கும் சுனைநீரில் தலை சாய்த்துத் தன் உருவைக் கண்டது ; புணர்ச்சியால் தன் தலைமயிர் சிறிதே கலைந்து கிடப்பதைக் கண்டது. உடனே தன் இரு கைகளாலும் தலைமயிரைக் கோதி, பண்டே போல் படிய வைத்துக்கொண்டு வெளிப் போந்து தன் இனத்தோடு கலந்துகொண்டது. மந்திக் காதலின் மாண்புதான் என்னே ! இந்நிலையில், அது மக்களினும் மாண்புடைய தாமன்றோ ?

"கடுவன்,
முறிஆர் பெருங்கிளை அறிதல் அஞ்சிக்
கறிவளர் அடுக்கத்துக் களவினிற் புணர்ந்த
செம்முக மந்தி செல்குறி, கருங்கால்
பொன்னிணர் வேங்கைப் பூஞ்சினைச் செலீஇயர்
குண்டுநீர் நெடுஞ்சினை நோக்கிக் கவிழ்ந்து தன்
புன்தலைப் பாறுமயிர் திருத்தும்." 1

1. நற்றிணை : 151. இளநாகனார்.

முறிஆர்-தளிர்களைத் தின்னும். கறி-மிளகுக்கொடிகள். செல்குறி-புணர்ச்சியால் நிகழ்ந்த மெய்வேறுபாடு. இணர்-பூங்கொத்து. பூஞ்சினை-அழகியகிளை. செலீ இயர்-சென்று. குண்டு நீர்-ஆழமான நீர். புன்தலை-மெல்லியதலை. பாறுமயிர்-கலைந்த மயிர்.

**மேகத்துள் மறையும் மந்தி :**

பழகப் பழகப் பாலும் புளிக்கும் ; அதைப்போலவே காதலனைக் கணப்பொழுதும் பிரியாது வாழின், அக்காதலும் கசந்துவிடும்; காதலனுக்குத் தன்பால் வெறுப்புண்டாதலும் கூடும் ; அதனால் இடையிடையே, ஒருவரையொருவர் பிரிந்து வாழ்தல் காதல் வளர்ச்சிக்கு இன்றியமையாதது. அப்பிரிவு அவர் காதலை வளர்க்கும்; அதை உறுதி வாய்ந்ததாக்க உறுதுணை புரியும் ; காதலின் இவ்வுண்மையினை அறிந்திருந்தது ஒரு மந்தி. அது சில காலம் கடுவனோடு காதல் விளையாட்டு மேற்கொண்டு வாழ்ந்தது. ஒரு குட்டியும் பிறந்தது. அதனால், கடுவனுக்குத் தன்மீது காதல் குறைந்துவிடுமோ என அஞ்சிற்று மந்தி. காதற் சிறப்பினை அறியும் அறிவு கடுவனுக்கில்லை ; அதனாலேயே, மந்தி அவ்வாறு அஞ்சிற்று ; அஞ்சிய மந்தி, அவ்வாறு நேர்ந்து விடாவாறு, தன் காதலை நின்று வளர்க்கத் துணிந்தது. உடனே, குட்டியை மார்போடு அணைத்துக் கொண்டே, கடுவன் அறியாவாறு மலையுச்சியை அடைந்தது. மலையில் படிந்து கிடக்கும் மேகத்திடையே புகுந்து மறைந்து கொண்டது. நாழிகை சில கழிந்தன; தன்னோடிருந்த தன் காதலியையும், குட்டியையும் காணாத கடுவன் கலங்கிற்று ; அவற்றைக் காண வேண்டும் ; அவற்றை எவ்வாறேனும் அடைய வேண்டும்; மந்தியோடு மகிழ்ந்து ஆடியும், குட்டியின் குறும்புச் செயல்களைக் கண்டும் களிகூர வேண்டும் எனும் வேட்கை அளவிறந்தது; அவ்வார்வ மிகுதியால், அங்கும் இங்கும் தேடி அலைந்தது; அலையும் கடுவனின் அன்பினைக் கண்டுகொண்டமந்தி, மேலும் மறைந்து வாழ்தல் முறையாகாது என உணர்ந்து, மேகத்தின் நீங்கி, மெல்ல மெல்ல வெளிப் போந்து, கடுவன் மகிழுமாறு கலந்து கொண்டது; “ஊடுதல் காமத்திற்கின்பம்” எனும்

ஊடற்சிறப்புணர்ந்த மந்தியின் மதியினை மகிழ்ந்து பாராட்டுவோமாக.

" கல்லாக் கடுவன் நடுங்க, முள் எயிற்று
மடமா மந்தி, மாஅ வன்பறழ்
கோடு உயர் அடுக்கத்து ஆடு மழை ஒளிக்கும்." 1

**புலிக்கு அஞ்சாப் பன்றி :**

மலைநாட்டு மக்களுக்குக் கேடு தருவனவற்றுள் தலையாயது பன்றி. அந்நாட்டு விலங்குகளில், கொடுமை மிக்கன யானையும் புலியுமே என்றாலும், அவற்றால் கேடுறுவன அந்நிலத்துப் பிற விலங்குகளே யல்லது, அம் மலைநாட்டு மக்கள் அல்லர் ; சிறிய கண்களையும், பருத்த உடலையும் உடைய காட்டுப் பன்றிக்குக் கோபம் பிறந்துவிடுமேல், அதனை அடக்குதல் - அதனால் ஆம் அழிவினைத் தடுத்தல் - எவர்க்கும் ஆகாது. காட்டு மக்கள் அரும்பாடுபட்டு உழுது விளைத்த அவர் தினைப் புனத்திற்கு அப்பன்றியால் உண்டாகும் கேடு, அம்மம்ம ! சொல்லும் திறத்ததன்று ; தினைக்கதிர்களைத் தின்னும் கருத்தோடு வரும் அது, வழியில் புலி வாழும் குகையினைக் காணினும் அஞ்சாது ; தினைக்கதிர் தின்ற செருக்கின் மிகுதியால், அது அப் புலியையே காணினும் கலங்குவதில்லை ; மூங்கில்கள் மிக்க மலைச்சாரற்கண் வாழும் இயல்பினவாய அப்பன்றிகள், புலிக்கு அஞ்சி, அப்புலி வந்து அணுகலாகா அரண்மிக்க இடந்தேடிச் சென்று உறங்க வேண்டும் என்று எண்ணுவதில்லை. எங்கு விரும்புகிறதோ, அங்கேயே கிடந்து உறங்கிவிடும் ; ஆற்றல் மிகுதியால், அத்துணை அஞ்சாமை உள்ளம் உடையது அப்பன்றி,

1. நற்றிணை - 233. அஞ்சிலாந்தையார்.
முள் எயிற்று-முள்போலும் கூரிய பற்களை உடைய. கோடு உயர் அடுக்கம்-உயர்ந்த உச்சிகளையுடைய மலைச்சாரல். ஆடுமழை-திரியும் மேகம்.

' சிறுகண் பன்றிப் பெருஞ்சின ஒருத்தல்
துறுகண் கண்ணிக் கானவர் உழுத
குலவுக்குரல் ஏனல் மாந்தி ஞாங்கர்,
விடர்அளைப் பள்ளி வேங்கை அஞ்சாது
கழைவளர் சாரல் துஞ்சும்,'' 1

**பல்லி சொல் அஞ்சும் பன்றி :**

தினைக்கதிர்களைத் தின்னும் ஆர்வமிகுதியால், புலிக்கு அஞ்சாது போகும் பன்றி, போகும் இடத்தில் தன் உயிருக்குக் கேடு உண்டாம் என்பதை அறிந்துவிடின் உடனே அச்சம் பிடர்பிடித்து உந்த, பின்னோக்கி ஓடி, மலைக்குகையைத் தேடி அடைந்து அடங்கிவிடும். ஒரு நாள் ஒரு பன்றி தினைப்புனம் ஒன்றை நோக்கிச் சென்று கொண்டிருந்தது. முள்ளம் பன்றியின் முட்கள் போன்ற பருத்துத் திரண்ட மயிர்கள் கழுத்தை அழகு செய்ய, தினைக்கதிர்களைத் தின்னும் ஆர்வம் அகத்தே எழ, அதன் கூரிய சிறிய கண்கள் தினைப் புனம் உள்ள இடத்தைத் தேடிக் காண, விரைந்து சென்று கொண்டிருந்தது. இடை வழியில், நுழைந்து நுழைந்து செல்வதல்லது எளிதிற் செல்லலாகா ஓர் இடத்தே, பன்றிகளால் தம் புனம் பாழாவதைப் பொறாத கானவர், அப் பன்றிகளை அகப்படுத்தவல்ல பொறிகளை அமைத்திருந்தனர். அவற்றைக் கண்டு விட்டது அப் பன்றி; ஆயினும் அஞ்சவில்லை; தினைக்கதிர் பால் கொண்ட ஆசையும், எதையும் அழித் தொழிக்கவல்ல ஆற்றலுடைமையால் தோன்றிய அஞ்சாமையும் பொறிகளைப் பொருட்படுத்தாதே புகுந்து செல்லத் தூண்டின. பன்றியும் பொறியை அணுகி

1. நற்றிணை : 336. தங்கால் ஆத்திரேயன் செங்கண்ணனார்.

ஒருத்தல்-ஆண் பன்றி. குலவுக்குரல் - முற்றினமையால் வளைந்த கதிர்கள். ஏனல்-தினை. மாந்தி-உண்டு. ஞாங்கர்-அண்மையில். விடர் அளைப்பள்ளி-மலைக்குகையை வாழிடமாக் கொண்ட. கழை-மூங்கில்.

நுழையத் தொடங்கிவிட்டது; அந் நிலையில், ஆங்கிருந்த பல்லி ஒன்று ஒலித்தது; பல்லி சொல்லின் பலன் அறிந்தது போலும் அப் பன்றி; அஃது ஒலித்த முறையும், இருந்து ஒலித்த இடமும், எதிர்காலத்தே, செல்லும் இடத்தே தனக்குண்டாம் கேட்டினை உணர்த்துவதாக உணர்ந்தது. அந்நிலையே, அச்சம் அதை ஆட்கொண்டுவிட்டது; அவ்விடத்தை விட்டு விரைந்து ஓடிற்று; மலைச் சாரலில், காப்புமிக்க குகையொன்றைத் தேடிக் கண்டு உட்புகுந்து அடங்கி விட்டது.

"எய்ம்முள் அன்ன பரூஉமயிர் எருத்தின்,
செய்ய்ம்ம் மேவல் சிறுகண் பன்றி
ஓங்குமலை வியன்புனம் படீஇயர், வீங்குபொறி
நூழை நுழையும் பொழுதில், தாழாது
பாங்கர்ப் பக்கத்துப் பல்லி பட்டென
மெல்ல மெல்லப் பிறக்கே பெயர்ந்து, தன்
கல் அளைப் பள்ளி வதியும்." 1

## இசைப் பறவை அசுணம்

இசைக்கு உருகாத உயிர்களே இல்லை; வழிப் போவாரை வருத்தி உயிர்கொண்டு, அவர் கைப் பொருள் கவர்ந்து வாழும் கொடியோரையும் நல்லோராக்கும் ஆற்றல் இசைக்கு உண்டு. இசை கேட்டு உருகாத உள்ளம், உயர்ந்த, உயிருடைய உள்ளமாகாது. இப்பண்பு மக்களுக்கு மட்டும் பொருந்துவதாகாது; ஓரறிவுயிர் முதலா அனைத்துயிர்க்கும், இது பொருந்தும்; பறவைகள்

1. நற்றிணை: 98. உக்கிரப் பெருவழுதி.

எய்-முள்ளம்பன்றி. பரூஉமயிர்-பருத்த மயிர். செய்ய்ம்ம்-செய் என் பதன் அளபெடை; தினைப்புனம் என்பது பொருள். மேவல்-விருப்பம். படீஇயர்-அடைதற் பொருட்டு. வீங்கு-பெரிய. பொறி-பன்றியை அகப் படுத்தும் பொறி. நூழை-நுழைந்து செல்லவல்ல இட்டுவழி. தாழாது-விரைந்து. பாங்கர் பக்கம்-நல்ல பக்கம். பட்டென-ஒலிக்க. பிறக்கு-பின் புறம்.

அனைத்துமே இசைக்கு இரங்கும் என்றாலும், அவற்றுள்ளும் அசுணம் எனும் பறவைக்கு வாய்த்துள்ள இசைநுகர் அறிவு, மக்களுக்கும் வாய்த்தற்கரிய மாண்புடையதாகும். இனிய இசைகளை இன்புற்றுக் கேட்கும் இயல்புடையது அப்பறவை. தேன் உண்ணும் வண்டுகள், தேன்தேடித் திரியுங்கால் எழுப்பும் ஒலி, காதிற்கினிய ஒலி யாதலை உணர்ந்த அசுணம், அவ்வொலியை இனிய யாழ் ஒலியாகக் கருதி மகிழும்; அதனால், அவ்வண்டொலி யாண்டு எழினும், கூரிய தன் காதுகளால் கூர்ந்து கேட்கும் இயல்புடையது.

" மாதர் வண்டின் நயவரும் தீங்குரல்
மணம் நாறு சிலம்பின் அசுணம் ஓர்க்கும்.'' 1

இசையின்பத்தில் ஆழ்ந்து போவது அனைத்துயிர்க்கும் உண்டேனும், ஏனைய உயிர்களுக்கில்லாத் தனிச் சிறப்பு அசுணத்திற்கு உண்டு ; இனிய இசை கேட்கும் ஏனைய உயிர்களின் காதுகள், இன்னாத ஒலிகளைக் கேட்க மறுத்துவிடுவதில்லை ; அவ்வொலியைக் கேட்க அவை விரும்புவதில்லை எனினும், அவ்வொலி அவற்றின் காதுகளிற் புகுவதும், அவற்றைக் கேட்கும் அவ்வுயிர்கள் இறந்து போகாது உயிர் வாழ்வதும் உலகியல் ; ஆனால் அசுணத்தின் இயல்பு முற்றிலும் மாறுபடும். இனிய இசை கேட்டு மகிழும் அசுணம், இன்னாத ஒலியினைக் கேட்க நேரிடின், உயிர் வாழாது ; அவ்வின்னா ஒலிகளைக் கேட்டு உணர்வற்றுப் போகாதிருத்தல், அசுணத்தின் காதுகட்கு இயலாது; இனிய இசைநுகரும் அக்காதுகள், இன்னா ஒலி தம்முள் புகுந்தவுடனே, உணர்வற்றுப் போகும் ; அசுணம் உயிரிழந்து போகும்.

1. நற்றிணை : 244. கூற்றங்குமரனார்.
மாதர்-அழகு. நயவரும்-விருப்பம் மிக்க. சிலம்பு-மலை. ஓர்க்கும்-கூர்ந்து கேட்கும்.

அசுணத்தின் இவ்வியல்புணர்ந்த வேட்டுவர், அதனை இசைநுகர் ஆர்வத்தைக் கொண்டே கைப்பற்றிக் கொல்வர். அவ்வேட்டுவர், அப்பறவையிருக்கும் இடந் தேடிச் சென்று, அது கேட்குமாறு, முதற்கண், யாழ் குழல் போலும் இனிய இசைகளை எழுப்புவர். அது, அவ்விசை கேட்டு மகிழ்ந்து மயங்கியிருக்குங்கால், திடுமென, அவ்வினிய இசையினை விடுத்து, பறைபோலும் இன்னா இசை தரும் கருவிகளை அடித்துப் பேரொலி எழுப்புவர். இனிய இசை கேட்டு இன்புற்றிருந்த அசுணம், அவ்வின்னா ஒலியினைக் கேட்டதுமே சிந்தை நொந்து செயலற்று வீழ்ந்துவிடும்; வேட்டுவரும் அதைக் கைப் பற்றிக் கொள்வர். இனிய இசை எழுப்பி, அசுணத்தின் உள்ளத்திற்கு உவகை ஊட்டிய அந்நானவர் கைவிரல் களே, அவ்வசுணத்தின் உயிர்போக்கும் இன்னா ஒலி யையும் எழுப்புவதறிந்து வருந்தினர் ஒரு புலவர். இனிய இசையால் மகிழ்ந்து, இன்னா இசையால் மாளும் அசுணத்தின் இசைநுகர் அறிவினைப் பாராட்டாதாரும் உளரோ?

அசுணம் கொல்பவர் கைபோல் நன்றும்
இன்பமும் துன்பமும் உடைத்து.'' 1

**மலைவாழ் மக்கள் :**

தமிழகத்து மலைநிலங்கள் இயற்கைச் செல்வங்களை நிறையக் கொண்டிருந்தன. அம்மலைநாட்டு மக்களின் உடலுக்கு உரம் ஊட்டும் காய் கனி கிழங்கு முதலாம் உணவுப்பொருள்களையும், அவர் வாழ்க்கைக்கு வனப் பூட்டும் அகில், ஆரம், தேக்கு, வேங்கை முதலாம் மர வகைகளையும், புலித்தோல், யானைக்கோடு முதலாம் விலங்குச் செல்வங்களையும் வேண்டுமளவு பெற்றிருந்தன

1. நற்றிணை : 304. மாறோக்கத்து நப்பசலையார்.

அந்நிலங்கள். என்றாலும், உழைப்பின் பயன் அறிந்த, உழைத்து வாழும் வாழ்வின் உயர்வறிந்த அம்மலைநாட்டு மக்கள், உழைக்காதே பெறலாகும் அவ்வியற்கைச் செல்வங்களோடு அமையாது, உழைத்துப் பொருள் பெற்று வாழ்ந்தனர். உழைத்து வாழக்கருதிய அவர்கள், தொழில்களுள் உழவுத்தொழிலே உயர்வுடையது; உணவளித்து உயிர்புரக்கும் சிறப்புடையது என அறிந்தனர். மலைச்சாரலில் மேடு பள்ளங்கள் மிகுதியாக இல்லாத இடங்களைத் தேடிக் கண்டனர்; ஆங்குள்ள மரம் செடி கொடிகளை அழித்தனர்; சிறு சிறு கொல்லைகளாக வளைத்து வரப்பிட்டனர்; மழை பெய்யும் பருவநிலை அறிந்து, நிலத்தை நன்கு உழுதனர்; அந்நிலத்தில் விளையத்தக்கது தினையே என அறிந்தனர்; விதைக்கும் விதைகளை நெருங்க விதைப்பின் விழுமிய பயன்தராது என அறிந்த அவர்கள், சில விதைகளை அகல விதைத்தனர்; அவர்கள் எதிர்நோக்கியவாறே, தினையும் ஒன்று பலவாகக் கிளைத்து வளர்ந்தது; பெரும் பெரும் கதிர்களை ஈன்றது. ஈன்ற கதிர்கள் முற்றிக் கனத்தமையால், நிமிர்ந்து நிற்கமாட்டாது தலை சாய்ந்தன; கதிர்க்காட்சியைக் கண்டு மகிழ்ந்தனர் கானவர்.

> ' மலை இடம் படுத்துக் கோட்டிய கொல்லைத்
> தளிபதம் பெற்ற கான் உழு குறவர்,
> சிலவித்து அகலவிட்டு உடன்பல விளைந்து
> இறங்கு குரல் பிறங்கிய ஏனல்.'' 1

---

1. நற்றிணை : 209. நொச்சி நியமங்கிழார்.

இடம்படுத்து-அகலப்படுத்தி. கோட்டி-வேலியிட்டு வளைத்து. தளி பதம்-மழைபெய்து பெற்றபதம். கான்-காட்டை. அகலவிட்டு-பரவலாக விதைத்து. இறங்கு-விளைந்து சாய்ந்த. குரல்-கதிர். பிறங்கிய-விளங்கிய. ஏனல்-தினைப்புனம்.

**களிறு விரட்டிக் காவல் புரியும் கானவர் :**

'நீரினும் நன்று அதன் காப்பு' என்றார் வள்ளுவர். ஒன்றை விதைத்து அதனாலாம் பயனைப்பெற எண்ணு வார்க்குப் பேருழைப்பும் பலநாளும் வேண்டும் ; ஆனால், விளைந்த ஒருபொருளை அழிக்கக் கருதுவார்க்கு ஒரு நாழிகையே சாலும் ; ஆகவே உழு தொழில் புரிவார், விளைந்த தம் பயிரை விழிப்பாயிருந்து காக்கக் கடமைப்பட்டவ ராவர். இரவும் பகலும் அகலாதிருந்து காத்தல் வேண்டும்; அவ்வாறு காத்துக் கிடப்பார்க்கே பயன்கிட்டும்; விளையும் பயிருக்குக் கேடுபுரிவன பலப்பல. காட்டு விலங்குகளால் உண்டாம் கேடு, அவை எல்லாவற்றிலும் அதிகமாகும். ஆகவே, அவ்விலங்குகள் வந்து அணுகாவாறு, வரின் விரைந்து ஓட்டிக் காக்கவல்லாரை நிறுத்திக் காத்தல் வேண்டும். உழவுத் தொழிலின் இவ்வுண்மையினை உணர்ந்திருந்தனர் அக்காலக் கானவர்.

கானவர் விளைக்கும் தினைப் பயிருக்கு, அது கதிர் முற்றி இருக்கும் காலத்தே, கேடு தருவனவற்றுள் களிறுகள் சிறந்தனவாம். அதனால், அக்களிறுகளை அடித்துத் துரத்தவல்ல படைகளோடு பார்த்திருப்பர் அக்கானவர். களிறு ஒன்று தம் புனத்தில் பகற் காலத்தே புகுந்துவிட்டது என்பதை அறியின், உடனே அச்சேரிவாழ் கானவர் அனைவரும் ஒன்றுகூடி 'ஓ' எனும் இரைச்சல் எழுப்பிக் கொண்டே ஓடி, அக்களிறு கேட்டதுமே அஞ்சி ஓடவல்ல பறைகளை முழக்குவர் முதற்கண் ; அப் பறையொலி கேட்டு அது அஞ்சி அகலாதாயின், வில் வளைத்து அம்பேவி விரட்டுவர் ; அம்பேறுண்டும் அகலாதாயின், அதன் உடலில் ஆழப் புகுந்து உயிரைப் போக்கவல்ல விசையோடு சென்று பாயுமாறு கவண் கற்களை வீசி விரட்டுவர்.

"மலைஅயல் கலித்த மைஆர் ஏனல்
துணையின் தீர்ந்த கடுங்கண் யானை
அணையக் கண்ட அங்குடிக் குறவர்
கணையர், கிணையர், கைபுனை கவணர்,
விளியர் புறக்குடி ஆர்க்கும்." 1

விலங்குகளில், சிறிது அறிவு வாய்ந்தது அக்களிறு; பகற்காலத்தே செல்வதால், புனங்காப்போர் கண்டு கொள்கின்றனர் என்பதை அறியவே, எவரும் அறியா வாறு இரவுக் காலத்தே சென்று மேயத் தொடங்கும். ஆனால், களிறுகளோடு பழகிய கானவர், களிறுகளின் கள்ளத்தனத்தை அறிந்திருந்தனர்; அதனால், அதன் வருகையை எதிர்நோக்கி இரவிலும் உறங்காது விழித் திருந்து விரட்டுவர்; இரவுக் காலத்தே வரும் களிறுகளை விரட்டக் கணையும் கவணும் பயன்படா; களிறுகளின் நடமாட்டம் அறிந்து, அவற்றின் மீது கணை எவுதலோ, கவண் எறிதலோ இயலாது: அதனால், இரவுக் காலத்தே வரும் களிற்றினை விரட்ட வேறு வழி அறிந் திருந்தனர்; யானை நெருப்பைக் காணின் அஞ்சும்; இதைக் கானவர் அறிவர்; அதனால், இரவுக் காலத்தே யானைவரக் கண்டவுடனே, பெரிய பெரிய தீப்பந்தங்களைக் கொளுத்தி, உயர்ந்த பரண்மீது இருந்து கொண்டே, அக் களிறு வரும் அரவம் கேட்கும் திசை நோக்கி எறிவர். விண்ணில் தோன்றும் மின்னல்கள் போல், செந்தீப் பரக்க நாற்புறமும் வந்து விழும் பந்தங்களைக் கண்டவுடனே களிறுகள் அஞ்சி அப்புனத்தை விட்டு அகலும்.

---

நற்றிணை : 108.

அயல்-சாரலில். கலித்த-தழைத்து வளர்ந்த. மைஆர்-வளம் மிகுதி யால் கருத்துத் தோன்றும். துணையின்-பிடியானையை விட்டு. தீர்ந்த-பிரிந்த. கணை-அம்பு. கிணை-ஒருவகைப் பறை. விளியர்-பெருங்கூச்சல் போடு வார். புறக்குடி-தம் சேரிப்புறத்தே. ஆர்க்கும்-ஆரவாரம் செய்யும்.

வாலா வேழம் வணர்குரல் கவர்தலின்
கானவன் எறிந்த கடுஞ்செலல் ஞெகிழி
வேய்பயில் அடுக்கம் சுடர மின்னி
நிலைகிளர் மின்னின் தோன்றும்.'' 1

**வானிலை அறியும் கானவர் :**

விளையும் பயிருக்கு விட்டில்களாலும் விலங்குகளாலும் விளையும் கேட்டினும், காற்றாலும் மழையாலும் விளையும் கேடு பெரிது. முன்னவற்றால் விளையும் கேட்டினை முன் கூட்டியே அறிந்து போக்குதல் ஒருவாறு இயலும். ஆனால், பின்னர்க் கூறிய இயற்கைகளால் உளவாகும் கேட்டினை, அவ்வாறு அறிந்து போக்குதல் அரிது. ஆதலால் உழுது பயன் விளைக்கும் கானவர், கதிர் முற்றியிருக்கும் தம் தினைப்புனம், காற்றாலோ, மழையாலோ கெட்டுப் போகாவாறு விழிப்பாயிருந்து காத்து, காலநிலை அறிந்து கதிர் கொய்து பயன்கொள்வர். மழையால் கதிர்கள் மடிந்துவிடும் என்பதை அறிவராதலின், அம் மழை எப்பொழுது வந்துவிடுமோ எனும் அச்சத்தால், அதன் வருகையை முன்கூட்டியே அறிந்து கொள்ளும் ஆர்வமுடையவராய் இருப்பர் ; எப்பொழுதும் வான நிலையினையே நோக்கிக் கிடப்பர் ; வானநிலை, பகற்காலமாயின் பார்த்தற்கு இயலும் ; இரவுக் காலத்தே, மேகங்களின் இயக்கத்தை அறிதல் இயலாது ; என்றாலும், அவ்விராக்காலத்தும், அதைக் காணும் ஆர்வம் துடிக்க விழித்திருந்து வானத்தையே நோக்கியிருப்பர் ; தம் மனையின் முன்புறத்தே வீற்றிருக்கும் அவர்கள், ஆங்கு வளர்ந்து, வானுற உயர்ந்திருக்கும் ஆசினிப் பலாவின்

1. நற்றிணை : 393. கோவூர்கிழார்.

வாலா-கரிய. வணர்குரல்-வளைந்த தினைக்கதிர். கடும்செலல்-விரைந்து செல்லும். ஞெகிழி-எரிகொள்ளி, தீப்பந்தம். வேய் பயில்-மூங்கில் வளர்ந்த. அடுக்கம்-மலைச்சாரல். நிலை கிளர்-சிறிது பொழுதும் நிலைபெறுதல் இல்லாத.

உச்சியில், ஒன்றுகூடி மொய்க்கும் மின்மினிப் பூச்சிகள் காட்டும் ஒளித்துணை கொண்டேனும், மேகத்தின் இயக்கத்தைக் காணாத் துடிக்கும் அவர்கள் உள்ளம். அவ்வாறே, அவற்றின் துணையாலும் வானிலை அறிந்து வாழ்ந்தனர் அக்கானவர்.

> " நீடிலை விளைதினைக் கொடுங்கால் நிமிரக்
> கொழுங்குரல் கோடல் கண்ணிச், செழும்பல
> பல் கிளைக்குறவர், அல்கு அயர் முன்றில்
> குடக்காய் ஆசினிப் படப்பை நீடிய
> பன்மர உயர்சினை மின்மினி விளக்கத்துச்
> சென்மழை இயக்கம் காணும்," 1

கானவர், தம் புனத்தில் கொய்து கொணர்ந்த கதிர்களைத் தம்மனையின் முன்புறத்தே உள்ள பாறைமீது உலர்த்திக் காவல் புரிவர். காவல் புரிவார்க்கு, அக்கதிர்களைக் கிளியும் கோழியும், களிறும் பன்றியும் கவர்ந்து போகாவாறு காத்தல் மட்டுமே கடமையாக அமைவதில்லை. காற்று மழைகளால் அவை கெட்டுப் போகாவாறு காத்தலும் கடமையாகும்; இக் கருத்துடைய கானவர் சிலர், தம் கதிர்களைக் காத்திருந்தனர். அப்பொழுது, திடுமெனக் கேட்டது, இடியொலித்தாற் போலும் ஒரு பேரொலி. காட்டில், தன்னைப் பகைத்த யானையைக் கொன்று வீழ்த்திய புலி, அவ்வெற்றிக் களிப்பால், மலையும் காடும், ஒருங்கே அதிருமாறு பேரொலி செய்தது. அவ் வொலியையே கானவர் கேட்டனர்; ஆனால் மழை வந்து கதிர்களைப் பாழாக்கி

---

1. நற்றிணை : 44. பெருங்கௌசிகனார்.

கொடுங்கால்-கதிரைத் தாங்கமாட்டாது வளைந்ததாள். கொழுங்குரல்-பருத்த கதிர்கள். கோடல்கண்ணி-கொய்தல்கருதி. அல்கு அயர்-தங்கி மகிழும். குடக்காய் ஆசினி-குடம்போலும் காயை உடைய ஆசினிப் பலா, படப்பை-தோட்டம்.

விடுமோ எனும் அச்சம், உள்ளத்தை இடைவிடாது உறுத்திக் கொண்டிருக்கக் காத்திருந்தனராதலின், அவர்கள் உள்ளம், எப்பொழுதும், அம்மழையையே நினைந்திருந்தது. அதனால், புலி ஒலி, மழையின் இடியொலி போல் அவர் காதுகளிற் பட்டது ; அதனால், மழைதரு மேகங்கள் எழுவதைக், கண்களால் கண்டிலரேனும், மேகம் இடிப்பதாகவே கருதினர் ; விரைவில் மழைவருதல் உறுதி என எண்ணினர் ; அந்நிலையே, முன்றிலிற் காய்ந்து கிடக்கும் கதிர்களை ஒன்று திரட்டவிரைந்தனர்.

> "பெருங்கல் விடரகம் சிலம்ப, இரும்புலி
> களிறு தொலைத்து உரறும் கடியிடி, மழை செத்துச்
> செந்தினை உணங்கல் தொகுக்கும்," 1

**கொன்று உயிர்வாழும் குறவர் :**

உழுது உயிர் வாழ்ந்த கானவர், தம் உழுதொழிற்கு ஊறுதந்த விலங்குகளை வேட்டையாடிக் கொன்றனர் ; பின்னர் நாள் ஆக ஆக, வேட்டையாடிக் கொன்ற விலங்குகளுள் சில உண்டற்கு உரியவாம் இனிய உணவாகிப் பயனளிப்பனவும் சில உள என அறிந்தனர். மேலும் சில காலம் செல்ல, தினைப்புனத்திற்குக் கேடு தரும் விலங்குகளேயல்லாமல், வேறு சில விலங்குகளும் உள ; உணவாகிப் பயன்தருதற்கு அவையும் உரிய என உணர்ந்தனர். காய் கனி கிழங்குகளையே உண்டு வாழ்ந்த அவர்கள், ஊன் உணவையும் உவந்து உண்ணத் தலைப்பட்டனர். அதனால் வேட்டையாடல் தொழில் அவர்களின் இன்றியமையாத் தொழிலாயிற்று ; வேட்டம்

---

1. நற்றிணை : 344. மதுரை அறுவைவாணிகன் இளவேட்டனார்.

பெருங் கல்-பெரிய மலை. விடரகம்-மலைப் பிளப்புக்கள். சிலம்ப-எதிரொலிக்க. இரும் புலி-பெரிய புலி. உரறும்-முழங்கும். மழைசெத்து-மழைக்குரல் என்று கருதி. செந்தினை உணங்கல்-காயப்போட்ட தினைக்கதிர்.

புரிதலில் வல்லராயினர் கானவர். காட்டில் வளர்ந்து வானுற உயர்ந்து வளைந்து கொடுக்கும் மூங்கில், வில்லாகப் பயன் தந்தது. வேட்டைப் பயனை விரும்பி எதிர் நோக்குவாராயினர் அக்கானவன் குடும்பத்தார். கானவன் ஒருவன், வில்லேந்தி வேட்டம் புரியவல்ல கைவன்மை பெற்றிருந்தான். கொடிய வில்லும் வலிய கணையும் அவன்பால் இருந்தன. ஒரு நாள் வேட்டை மேற்கொண்டு காட்டுட் புகுந்தான். அவன் கண்ணெதிர்ப்பட்டது ஒரு முட்பன்றி; உடனே வில்லை நாணேற்றி விரைந்து எய்தான் ஒரு கணையை; அது சென்று அப் பன்றியின் நெஞ்சிற் பாய்ந்தது. இறந்து வீழ்ந்தது பன்றி; வெற்றி கண்டு அவன் உள்ளம் உவகையால் துள்ளிற்று; அம் மகிழ்ச்சியோடு கொன்ற பன்றியையும் உடன்கொண்டு தன்மனை நோக்கி நடந்தான். காட்டின் நடுவே கால்களை நாட்டிக் கட்டிய குடிசையில் வாழும் அவன் மனைவியும் மக்களும், அவனையும் அவன் வேட்டைப் பொருளையும் விரும்பி வரவேற்றனர். வேட்டை நாய்கள் மகிழ்ச்சி மிகுதியால் அவனைச் சூழ வந்து வால்குழைத்து நின்றன.

"உரவுக் கணை
வன்கைக் கானவன் வெஞ்சிலை வணக்கி
உளம் மிசைத் தவிர்த்த முளவுமான் ஏற்றையொடு
மனைவாய் ஞமலி ஒருங்கு புடை ஆட
வேட்டுவலம் படுத்த உவகையன், காட்ட
நடுகால் குரம்பைத் தன்குடிவயின் பெயரும்." 1

1. நற்றிணை : 285. மதுரைக் கொல்லன் வெண்ணாகனார்.

உரவுக்கணை-வலிய அம்பு. வெஞ்சிலை-கொடிய வில். உளம்மிசை-நெஞ்சில். தவிர்த்த-ஏவிக்கொன்ற. முளவுமான்-முட்பன்றி. ஏற்றை-ஆண். ஞமலி-நாய். புடைஆட-அருகில் வந்து ஆடி மகிழ. குரம்பை-குடிசை.

**கடவுள் அஞ்சும் கானவர் :**

கானவன் ஒருவன், ஒரு நாள் வேட்டை மேற்கொண்டு சென்றான். காட்டினிடையே ஆமான் ஒன்றைக் கண்டான் ; கண்டாரை மகிழ்விக்கும் கண்ணழகுடையது அவ் ஆமான். ஆனால் வேட்டை வெறி கொண்டு நிற்கும் கானவன் கண்ணிற்கு அதன் கண்ணழகு புலப்படவில்லை. அதன் ஊன் சுவைக்கண் உள்ள ஆசை, அவனை உணர்வற்றவனாக்கிவிட்டது. அதனால் வில்லை வளைத்து, அம் பொன்றை, கழுத்திற்குக் குறிவைத்து எய்தான். ஏவிய பொருள்மீது, இழையளவும் பிழையாது சென்று பாயவல்ல அவன் கையம்பு, அன்று பிழைத்துவிட்டது. ஆமானின் நெஞ்சில் தைத்து நிற்கத் தவறிவிட்டது. ஆமான் உயிர் பிழைத்து ஓடிவிட்டது. தன் கையம்பு பிழைபட்டது கண்டான் கானவன். தன் ஆற்றலில் அவனுக்கு ஐயம் இல்லை. ஆதலின், அம்பு தவறியது தன் பிழையாம் என எண்ணினானல்லன். தங்கள் குலக்கடவுளாம் குன்றுறை குமரவேளுக்கும், கொற்றவைக்கும் தானும், தன்னுடன் வாழும் கானவரும் யாதோ பிழை புரிந்திருத்தல் வேண்டும்; அப்பிழை கண்டு, அக்கடவுளர் சினந்துள்ளமையினாலேயே தன் கைக்கணை, குறி தவறி விட்டது எனக் கருதினான். உடனே அத் தெய்வங்களை வழிபடத் துணிந்தான் ; அதற்குத் துணைபுரியுமாறு மழையை வேண்டிக்கொண்டான். மழை பெய்து நாடு நலம் பெற்றதுமே, சுற்றத்தார் சூழ்ந்துவர மலை ஏறினான். மலைமீதுறையும் கடவுள்முன் பலியிட்டு வழிபட்டான் ; தொழிலில் தோல்வி கண்டநாள் முதலாய், அந்நாள்வரை உண்ணாது விரதம் பூண்டிருந்த கானவன், பலியிட்டு எஞ்சியதை விரும்பி உண்டான். தெய்வச் சினத்தைத் தணித்து விட்டோம் ; அவரை உளம் மகிழச் செய்துவிட்டோம் ; இனிக் கவலையில்லை ; கொல்லையும் கொள்ளை கொள்ளை

யாக விளையும் ; வேட்டையும் விரும்பியவாறே வாய்க்கும் என நம்பி நிறைந்த சிந்தையோடு மீண்டான்.

" அமர்க்கண் ஆமான் அருநிறம் உள்காது
பணைத்த பகழிப் போக்கு நினைந்து, கானவன்
அணங்கொடு நின்றது மலைவான் கொள்கெனக்
கடவுள் ஓங்குவரை பேண்மார் வேட்டெழுந்து
கிளையொடு மகிழும்."1

**பாவைநிகர் பேரழகுடையாள் :**

மலைநாடு வளம் நிறைந்தது. உழாதே பயன் தரும் காய்கனி கிழங்கு வகைகளையும், உழுது பெறலாகும் தினை முதலாம் கூலவகைகளையும் குறைவறப் பெற்றுள்ளமையால், ஆண்டு உணவின்றி வருந்துவார் ஒருவரும் இலர் ; உண்ணும் நீர்ச்சுனைகளும், ஒலித்து வீழும் அருவிகளும் ஆங்கு அளவிறந்து காணப்படும். வெய்யிலின் வெப்பம் அறியாவாறு நின்று நிழல்தரும் மரங்களால் நிறைந்தது அம்மலை நிலம் ; இத்தகு வளங்களால் உடலிற்கும் உள்ளத்திற்கும் ஒரு குறையும் நல்கா நல்ல நாடாதலின், அந்நிலத்து ஆடவரும் மகளிரும், உடல் அழகும், உறுப்பு நலனும் ஒருங்கே வாய்க்கப்பெற்றிருந்தனர் ; இதோ ஒரு மலைநாட்டு மகள் ; அவள் வனப்பினைக் காணுங்கள்.

நீருண்டு கருத்த மேகத்தைத் தடுத்துப் பயன் கொள்ளுமாறு உயர்ந்த மலை ; அம்மலையின் மழை நீரைக் குறைவறப் பெறுவதால் தழைத்து வளர்ந்த குறிஞ்சி

---

1. நற்றிணை : 165.

அமர்க்கண்-விருப்பந்தரும் அழகிய கண். அருநிறம்-அரிய நெஞ்சம். உள்காது-உள்ளே பாய்ந்து தங்காது. பணைத்த-குறி தவறிப்போன. பகழி-அம்பு. மலை அணங்கொடு நின்றது என மாறுக. மலை-மலையுறை கடவுள். பேண்மார்-வழிபடல் கருதி. வேட்டெழுந்து-விரும்பிச் சென்று.

மரம் ; அம்மரத்தின் கிளைத்துப் பருத்த ஒரு கிளை; அக் கிளையில் அன்றலர்ந்த அழகிய மலர் ; அம்மலரின் பொன்னிறப் பொலிவு தோன்றும் மேனி ; அம்மலையின் அகன்ற சுனையின் ஆழ்ந்த நீரிடை மலர்ந்து, எதிர் எதிர் வைத்துக் கட்டிக் காட்டிய குவளை மலர் போலும், மை தீட்டி அருள் ஒழுகும் கருவிழிகள் ; அம்மலை மீதிருந்து மகிழ்ந்தாடும் மயிலின் சாயல் ; அந் நிலத்துக் கிளி பேசினாற் போலும் காதிற்கினிய மொழிகள் ; பருத்த தோள் ; இத்தகு உறுப்பு நலன்களைக் கொண்டு, அழகிய கொல்லிப் பாவை போலும் பேருருவம் ; காணும் காளையர் உள்ளத்தில் காதற் கனலை மூட்டிவிடும் இக்கவினுடை யாள் மலைநிலத்து மகள்.

" நீண்மலைக் கலித்த பெருங்கோல் குறிஞ்சி
நாண்மலர் புரையும் மேனிப், பெருஞ்சுனை
மலர் பிணைத்தன்ன மாயிதழ் மழைக்கண்,
மயிலோரன்ன சாயல், செந்தார்க்
கிளியோரன்ன கிளவிப், பணைத்தோள்,
பாவை அன்ன வனப்பினள் இவள்." 1

## குடி ஓம்பும் குறக்குல மகளிர் :

மலைநாட்டு மகள், உடல் நலன் மட்டும் உடையவள் அல்லள் : நலம்பல வாய்ந்த நல்லுள்ளம், அவள் உள்ளம்; பெண்மைக்குரிய பண்புகள் எல்லாம் அவள்பால் பொருந்தியிருந்தன ; அவள் கணவனுக்கேற்ற காதலி ; மக்கள் விரும்பும் மாண்புடைத் தாய் ; பெற்றோர் சொல்

1. நற்றிணை : 301. பாண்டியன் மாறன்வழுதி.

கலித்த–தழைத்த. கோல்–தண்டு. நாண்மலர்–அன்று அலர்ந்த மலர். புரையும்–ஒக்கும். பிணைத்தன்ன–கட்டிவைத்தாற் போன்ற. மா இதழ்–மை தீட்டிய கண் இமை. மழைக் கண்–அருள்நிறைந்த கண். கிளவி–மொழி. பணை–பருக்க.

பிழையாப் பேதை ; குடி ஓம்பும் குணக்குன்று ; முள்ளம் பன்றி ஒன்று தங்கள் தினைப்புனத்திற்குக் கேடு செய்வது கண்டான் அவள் கணவனாகிய கானவன் ; அதனால், அதன் கொடுமைக்கும் அஞ்சாது சென்று, அரும்பாடு பட்டு அதனைக் கொன்று வீழ்த்தினான்; வீழ்ந்த பன்றியை வீட்டிற்குக் கொணர்ந்தான். இனிய மணம் நாறும் கரிய கூந்தலைக் கையால் உலர்த்தியவாறே கணவனை எதிர் நோக்கி நின்ற அவள், கணவன் வருகையைக் கண்டு மகிழ்ந்தாள். வருவோன் தனியே வாராது, வேட்டையாடி வீழ்த்திய பன்றியோடும் வருதலைக் காணவே, அவள் மகிழ்ச்சி அளவிறந்தது. பன்றிஇறைச்சி இனிய சுவை உடையது என்பதை அவள் அறிவாள் ; அறிந்தும், அதைத் தானும், தன் கணவனும் மட்டுமே உண்டு தீர்த்தல் வேண்டும் என விரும்பினாளல்லள் ; மேலும், அது, தன் கணவன் கொன்றது எனும் உரிமை பாராட்டவும் மறுத்தது அவள் உள்ளம் ; அத்தகையாள் கணவனை மகிழ்ந்து வரவேற்றாள் ; வரவேற்றவள், வேட்டையாடிய அவன் தளர்ச்சி போக்கவேண்டும் எனவும் எண்ணினாளல்லள் ; அவண் நில்லாது விரைந்து வெளியே சென்றாள் ; அச்சிற்றூரில் வாழும் தன் சுற்றத்தார் மனைகட்குச் சென்றாள். வேட்டையின் வெற்றிப் பொருளைக் கூறி அவர்கள் அனைவரையும் கூட்டி வந்தாள் ; பன்றியின் உடலைப் பல கூறுகளாகப் பகிர்ந்து வைத்தாள் ; குடியில் உள்ளார் ஒவ்வொருவருக்கும ஒவ்வொரு கூறு கொடுத்து அனுப்பினாள் ; கணவன் கொணர்ந்த வேட்டைப் பொருளைக் குடிப்பிறந்தார்க்குக் கொடுத்து உதவினேன் எனும் மகிழ்ச்சி அவள் உள்ளத்தில் குடி கொண்டது ; அம் மலைநிலத்து மகள்பால் காணலாம், சுற்றம் தழுவும் அந்நற்றவப் பண்பினை நயந்து பாராட்டினார் ஒரு புலவர்.

" கானவன் எய்த முளவுமான் கொழுங்குறை
தேம்கமழ் கதுப்பின் கொடிச்சி மகிழ்ந்துகொடு
காந்தளம் சிறுகுடிப் பகுக்கும்." 1

**மனக்கவலையில்லா மனைவாழ்க்கை :**

காண்பார் கண்ணைப் பறிக்கும் அழகுருவம் ; கேட்டார் கருத்தைக் கவரும் அருள் உள்ளம் ; இவ்விருபெரு நலங்களோடு செல்வம் மலிந்து சிறக்கும் மனை ; இந்நல் நிலையில் வாழ்வாள் ஒருத்தியின் வாழ்க்கை கவலையற்று அமைதி நிறைந்து விளங்குவதில் வியப்புண்டோ ? உடலழகும், உள்ளநலனும் வாய்க்கப் பெற்றாள் ஒரு பெண், செல்வ வாழ்க்கையில் சிறந்து வாழ்கிறாள். அவள் மனை, வற்றா வளங் கொழிக்கும் பெருமனை ; அவள் மனையின் முன்புறத்தே ஒரு பலாமரம் ; தான் தரும் பயன் ஒன்றினாலேயே அவள் வாழ்க்கையை வனப்புடையதாக்கும் வளம் உடையது அப்பலா ; கிளைகள் ஒவ்வொன்றிலும் எண்ணற்ற கனிகள் காய்த்துத் தொங்கும் ; கனிகள் கணக்கற்றுப் போகவே, கனிந்த பின்னரும் மனைக்குரியோரால் பறிக்கப்படாமல் விடப்பட்டது பல ; அவ்வாறு விடப்பட்ட கனிகள், மேலும் பழுத்துத் தாமே விண்டு போக, அவற்றின் சுளைகள், அம்மனையின் முற்றம் முழுதும் உதிர்ந்து சிதறிக்கிடக்கும் ; அச்சுளைகளின் மணம் நாறும் அவ்விடமே, அவள் மகிழ்ந்து உறங்கும் இடமாம் ; ஆங்கு உறங்கப் புகும் அவள், அருகே உள்ள மலையில் தோன்றி, வெண்ணிறத் திவலைகள் சிதறி வீச, 'ஓ' எனும் பேரொலி எழ வீழ்ந்தோடும் அருவியின் ஒலி, மகவை

1. நற்றிணை : 85. நல்விளக்கனார்.

முளவுமான்-முள்ளம்பன்றி. கொழுங்குறை - கொழுத்த இறைச்சித் துண்டு. கதுப்பு-கூந்தல். கொடிச்சி-குறப்பெண். காந்தளம் சிறுகுடி - காந்தள் மலரின் மணம் வீசும் சிற்றூர்.

உறங்கப் பண்ணும் தாயின் தாலாட்டுப் பாடல்போல் இன்பம் ஊட்ட, அவ்வொலியைக் கேட்டுக்கொண்டே அயர்ந்து உறங்குவள்; என்னே, அப்பெண்ணின் மனம் நிறைந்த மனைவாழ்க்கை இன்பம்!

" சினைதொறும் தூங்கும் பயங்கெழு பலவின்
சுளையுடை முன்றில் மனையோள், கங்குல்
ஒலிவெள் அருவி ஒலியில் துஞ்சும்." 1

**கேடு அஞ்சாக் குறச்சிறுவர் :**

புலிக்குப் பிறந்தது பூனை ஆகாது; ஆண்மை அஞ்சாமை முதலாம் அரிய பண்புகளின் பிறப்பிடமாய் விளங்கும் மலை நாட்டாரின் வயிற்றிற் பிறந்த மக்களும் அஞ்சாமை நிறைந்த ஆண்மை உடையவராய் வாழ்ந்தனர். குறச்சிறுவர் சிலர் தம் தினைக்கொல்லையில் காவல் மேற்கொண்டு வாழ்ந்துவந்தனர். ஒரு நாள், புலியும் யானையும் போர் செய்யும் பேரொலி கேட்டது; அது கேட்ட அச்சிறுவர், அஞ்சி, அப்புனத்தை விட்டு ஓடினாரல்லர்; ஆண்மை நிறைந்த அவர்கள், அவ்வொலியைக் கேட்டதோடு ஆறுதல் அடையாது, அப்போர்க் காட்சியைப் போய்க்காண ஆசைப்பட்டனர்; ஆசைப்பட்ட அவர்கள், சிறுவரே எனினும், உலகியல் அறிவும் ஓரளவு வாய்க்கப் பெற்றிருந்தனர்; புலியையும், யானையையும் தனித்து எதிர்ப்படினும் அவற்றால் இடையூறு நிகழும்; அவையிரண்டும் ஒருங்கே கூடித் துயர் செய்யத் துணியின் அவற்றினின்றும் தப்பிப் பிழைத்தல் இயலாது; மேலும், அவையிரண்டும், ஒன்றையொன்று பகைத்துப் போரிட்டுக் கொண்டிருக்குங்கால், எதிர்ப்பட்டுவிடின் அவற்றால் அழிவுறுதல் முக்காலும் உறுதி என்பதை அறிவர். அதனால்

1. நற்றிணை : 77, கபிலர்.
சினை-கிளை. தூங்கும்-தொங்கும். பயங்கெழு-பயன்மிக்க. கங்குல்-இரவில். துஞ்சும்-உறங்கும்.

அவற்றின், எதிர்செல்லல் அறிவுடைமை யாகாது எனக் கருதினர். ஆனால், அப்போர்க்காட்சியைக் கண்டு களிக்கவேண்டும் எனும் ஆர்வம், ஆங்குப் போகாதிருக்க விடவில்லை ; அதனால், தமக்கு ஊறு தேடிக்கொள்ளாதே, அக்காட்சியைக்காண எண்ணினர் ; அப்போர் நிகழும் இடத்திற்கு அணித்தே, அவை எளிதில் அணுகுதற் கியலாவுயர்வுடைய மலையொன்றிருக்கக் கண்டு, அதன் உச்சியில் ஏறி, ஆங்கிருந்தவாறே, அப்போர்க் காட்சியைக் கண்டுகளித்தனர் ; போர்க்காட்சியைக் காணக்காண, அவர் ஆர்வம் அளவிறந்தது ; ஆர்வ மிகுதியால், தம் கையில் வைத்திருந்த தொண்டகப் பறைகளை அடித்து முழக்கி ஆரவாரிக்கத் தொடங்கினர். அப்பறை எழுப்பிய பேரொலி, அவர்கள் காத்துக்கிடந்த தினைப் புனத்தில், அவர்கள் இல்லாமையால் அஞ்சாது புகுந்து தினைக்கதிர் தின்று தங்கும் கிளிகளை அச்சுறுத்தி விரட்டிற்று ; காடென்றும், மலையென்றும் கருதாது, களிறு கண்டும், புலி பார்த்தும் அஞ்சாது ஆடியும், பாடியும் அக மகிழ்ந்து வாழும் குறச்சிறுவர்களின் குணநலம், கண்டு பாராட்டற்குரியதாம்.

"பூம்பொறி உழுவைப் பேழ்வாய் ஏற்றை,
தேம் கமழ் சிலம்பில் களிற்றொடு பொரினே,
துறுகல் மீமிசை உறுகண் அஞ்சாக்
குறக்குறு மாக்கள் புகற்சியின் எறிந்த
தொண்டகச் சிறுபறைப் பாணி அயலது
பைந்தாள் செந்தினைப் படுகிளி ஓப்பும்." 1

1. நற்றிணை : 104. பேரிசாத்தனார்.

பூம்பொறி-அழகிய வரிகள். உழுவை- புலி. பேழ்வாய்-அகன்ற வாய். ஏற்றை-ஆண். சிலம்பு-மலை. துறுகல்-பெரும் பாறை. மீ மிசை-மிக உயர்ந்த இடத்தில். உறுகண்-துன்பம். குறக்குறுமாக்கள்-குறக்குலச் சிறுவர். புகற்சி-ஆர்வம். எறிந்த-முழக்கிய. தொண்டகம்-மலைநிலத்திற் குரிய ஒருவகைப் பறை. பாணி-ஒலி. படுகிளி-படிந்து தினை உண்ணும் கிளி.

மலைவளம், அந்நிலத்து வாழ் உயிர்களின் இயல் நலம், மலைவாழ் மக்களின் மனவளம் ஆகியன குறித்து நற்றிணைபாடிய நற்றமிழ்ப் புலவர்கள் நவின்றனவற்றுள் நயமிக்கன சில இவை. இனி, மலையையடுத்துள்ள காட்டின் கவினைக் கண்டுகளிப்போமாக.

# 3. காட்டு நிலம்

இன்பத்தை எதிர்நோக்கி நிற்கும் இடம் காடு; கோடையின் கொடுமையால் வாடிய மரஞ்செடி கொடிகள் கார்காலத்து மழைபெற்றுத் தளிர்த்துப் பூத்துப் பேரின்பம் தரும் இடம் காடு: காலையில் சென்று, கானெலாம் மேய்ந்து மாலை மனை திரும்பும் தாய்ப்பசுக்களைக் கன்றுகள் எதிர் நோக்கி நிற்கும் இடம் அக்காடு. பழுமரம் நாடிப் பகலெல்லாம் பறந்து திரிந்து, தாமும் நுகர்ந்து, தம் பெடைக்கும் பார்ப்பிற்கும் கனிகொண்டு மீளும்பறவைகளை அப்பெடையும் பார்ப்பும் ஆர்வமுடன் எதிர்நோக்கி நிற்பதும் அக்காட்டிலேயே; காதற்கலைமான், தன் காமர்ப் பிணையை நோக்கிப் பாய்ந்தோடுவதும் ஆண்டே நிகழும்; இவ்வாறு இன்பநுகர்வினை எதிர்நோக்கி நிற்றல், மரம் செடி கொடிகளும், மாவும் பறவையும் போலும் சிற்றறிவுயிர்கள் மாட்டு மட்டுமே நிகழ்வதில்லை. அப்பண்பு ஆறறிவுவாய்ந்த மக்களுக்கும் பொருந்தும். பொருள் வேண்டியும், போர் குறித்தும், கற்றுப் பயன் கோடல் கருதியும் மனைவியரைப் பிரிந்துபோகும் கணவன்மார்,

வினைக்கண் வெற்றிபெற்று, வீட்டின்கண் தனித்திருக்கும் தம் மனைவியரை நினைந்து மீள்வதும், போன கணவன் மாரின் வருகையை மனைவியர் எதிர்நோக்கி நிற்பதும் அக்காட்டுநாட்டின் கண்ணே நிகழும். இவ்வாறு எவ்வுயிர்க்கும் இன்பம் சுரக்கும் இடமாய்த் திகழ்வது காடு. காட்டின் கார்காலமும், அக்காலத்து மாலையும், கணவன்மார் பிரிந்துபோக, அவர் வருகையை எதிர் நோக்கிக் காத்துக்கிடக்கும் ஒரு சில மகளிர்க்குக் கொடுமையுடையபோல் தோன்றினும், பொதுவாக அந் நிலத்தில் வாழ்வார்க்கும், ஆங்குச்சென்று அவற்றைக் கண்டு நிற்பார்க்கும் மனமகிழ்ச்சி தரும் பெருங்காட்சி யவாம்.

**கார் தொடங்கிற்று :**

புது மழை பெய்யப்பெற்று மரங்களெல்லாம், புத்தம் புதிய தளிர் ஈன்று பூத்துக்குலுங்கும் காலம், கார்காலம் ; அது, ஆவணியும், புரட்டாசியும் ஆகிய இரு திங்களும் கூடிய காலமாம். இதோ அக்கார்காலம் தொடங்கி விட்டது ; பிடவம் எனும் மரம், இலைகள் ஈனுதே மலரும் இயல்புடையது ; அது அரும்புகளால் நிறைந்துவிட்டது ; புதர்களைப் பற்றுக்கோடாகக் கொண்டு படரும் முல்லைக் கொடிகள், புதர்தோறும் மலர்ந்து மணம் நாறின ; கொன்றை மரங்கள், பொன்னிற மலர்களால் பொலி வுற்றுத் தோன்றின ; காயாமரத்தின் சின்னஞ்சிறு கிளைகளும், நீல மணியின் நிறம் வாய்ந்த மலர்களை நிறைய மலர்ந்து மாண்புற்றன. பன்னிற மலர்கள், பார்ப்போர் கண்களுக்கு விருந்தூட்ட, அவற்றின் பல்வேறு மணமும் ஒன்று கலக்க வீசும் புதுமணம் உள்ளத்திற்கு உவகை ஊட்டப் பிறக்கும் கார்காலக் காட்சியைக் கண்டுகளித்தார் ஒரு புலவர் ;

இலை இல் பிடவம் ஈர் மலர் அரும்பப்,
புதல் இவர் தளவம் பூங்கொடி அவிழப்,
பொன் எனக் கொன்றை மலர, மணி எனப்
பன்மலர்க் காயாங்குறுஞ்சினை கஞலக்,
கார் தொடங்கின்று''

**மாலை புகுந்தது :**

பேரொளி பரப்பிப், பகற்காலத்தைப் பயனுடைய தாக்கும் தன் தொழிலை முடித்துக் கொண்ட ஞாயிறு, மேலைத்திசை மலைகளுக்கிடையே புகுந்து மறைந்து கொண்டான். பறக்கும் திறம் வாய்க்காத தம் இளம் பார்ப்புக்களைக் கூட்டில் விட்டுக் காலையில் பறந்துபோன பறவைகள், அப்பார்ப்புக்களுக்கு வேண்டும் இரையோடு அக்கூட்டினைச் சென்று அடங்கின; மயிர் திரளக், கறுத்துத் தோன்றும் கழுத்தினை உடைய கலைமான், மாலை இருள் கண்டு, மருளும் தன் பிணையின் அச்சம் அகலுமாறு அதை அணைத்துக் கொண்டது. முல்லை அரும்புகள் மலர்ந்து மணம் வீசின; காட்டின் இடை யிடையே, காணும் இடங்கள் தோறும், காட்சி அளிக்கும் புதர்களில், காட்டில் ஏற்றி வைத்த விளக்குகள் போல் காந்தள்கள் மலர்ந்தன. காட்டில் புல் மேய்ந்து கன்றை நினைந்து வீடு திரும்பும் பசுக்களின் கழுத்தில் கட்டிய மணிகளின் தெளிந்த ஓசை, அவ் ஆனிரையின் பின் வரும் ஆயர் ஊதும் குழலோசையோடு கலந்து, மெல்ல வந்து ஒலித்தது. அம்மங்கல ஒலியோடு மாலையும் புகுந்தது :

---

1. நற்றிணை : 242. விழிக்கண் பேதைப் பெருங்கண்ணனார்.

ஈர்மலர்-தேனுல் ஈரம்பட்ட மலர். இவர்-படரும். தளவம்-முல்லை, அவிழ-மலர. குறுஞ்சினை-சிறிய கிளை. கஞல-நிறைய.

பல் கதிர் மண்டிலம் பகல் செய்து ஆற்றிச்
சேய் உயர் பெருவரைச் சென்று அவண் மறையப்,
பறவை பார்ப்புவயின் அடையப், புறவின்
மா எருத்து இரலை மடப்பிணை தழுவ,
முல்லை முகை வாய்திறப்பப், பல்வயின்
தோன்றி தோன்றுபு புதல் விளக்கு உருஅ,
மதர்வை நல்லான் மாசில் தெண் மணி
கொடுங்கோல் கோவலர் குழலோடு ஒன்றி
ஐது வந்து இசைக்கும் அருள் இல் மாலை '' 1

**மருண்டு நோக்கும் மான் :**

முல்லை எனும் பெயரால் அழைக்கப் பெறும் குறுங் காட்டிற்குக் கவின் அளிப்பன, கலையும் பிணையுமாய்க் கலந்து வாழும் மான் கூட்டங்களாம். துன்பந்தரும் கொடுவிலங்குகள் ஆங்கு வாழ்வதில்லை. தம் காதல் வாழ்வால், கரவற்ற கண்களால் மக்கள் வாழ்க்கையை மாண்புடையதாக்கும் மான் போலும் உயிரினங்களே மிகுதியாம்.

முல்லை நிலத்து ஆயர், காட்டை அழித்து ஆக்கிய பழங்கொல்லையை, மண் கீழ் மேலாமாறு நன்கு உழுது விதைத்த வரகு, முளைத்து, இடங்கொளக் கிளைத்து, நன்கு தழைத்துக் கதிர் ஈன்றது; மன்றில் நின்று வழக்காடுவோர், அவ்வழக்கினை விளங்க எடுத்து உரைக்குங்கால், சுட்டிச் சுட்டிக்காட்டும் அவர் கைவிரல்கள் போல், இரண்டு இரண்டாக இணைந்து விளங்கும் அவ் வரகுக் கதிரைக் காணும் மான்பிணை, அவற்றை மகிழ்ந்து

1. நற்றிணை : 69. சேகம்பூதனர்.

பல்கதிர்மண்டலம்-ஞாயிறு. ஆற்றி - முடித்து. புறவு-காடு. மா-கருமை. எருத்து-கழுத்து. இரலை-கலைமான். முகை-அரும்பு. வாய் திறப்ப-மலர. தோன்றி-காந்தள் மலர். புதல்-புதர். விளக்கு உருஅ-விளக்குப்போல் தோன்ற. மதர்வை-செருக்கு. கொடுங்கோல்-ஆயர்கைத் தண்டு. ஒன்றி-கலந்து. ஐது-மெல்ல.

உண்ணும்; பின்னர், மரல் வித்துக்கள் உதிர்ந்து மனத்திற்கு மகிழ்ச்சி ஊட்டும் அக்காட்டின் ஒருபால், தான் விரும்பும் கலைமான் உலாவக் கண்டு, ஆங்கு ஓடி, அக்கலையோடு கலந்து மகிழ்ந்து ஆடும். அக்காட்சியைக் கண்டு மகிழும் வாய்ப்பினை அக்கால மக்கள் எளிதிற் பெற்றிருந்தனர்.

> "விதையர்கொன்ற முதையல் பூழி
> இடுமுறை நிரப்பிய ஈரிலை வரகின்
> கவைக்கதிர் கறித்த காமர் மடப் பிணை
> அரலை அம் காட்டு இரலையொடு வதியும்," 1

**பிணையைக் காணாது கலங்கும் கலை :**

மானின் கண்கள், பொதுவாகவே மகிழ்ச்சி யூட்டும் இயல்புடைய. அவற்றின் அழகு கண்டு மயங்கிய புலவர்கள், அவற்றை மகளிரின் மைதீட்டிய விழிகளுக்கு உவமை காட்டி உயர்வு கூறிப் பாராட்டியுள்ளனர். அம் மானினத்தின் இளைய கன்றுகளின் கண்கள் பேரழகு வாய்ந்தனவாம்; இயல்பாகவே கரவுள்ளமற்ற இனத்திற் பிறந்து, தம் இளமையால் கரவற்ற அவ்வியல்பை மிகுதியாகப் பெற்றிருக்கும் மான் கன்றுகளின் விழிகள் மிகப் பேரழகுடையவாம். அக்கண்ணழகில் மயங்கி அறிவிழந்து போன ஒரு புலவர், அவ்விளங் கன்றை, விழிக்கண் பேதை எனும் விழுமிய பெயரிட்டு அழைத்து, அச்சிறப்பால் தன் இயற் பெயரையும் இழந்துள்ளார். புலவர் தம் இயற் பெயரையும் இழக்கப் பண்ணும் பேரழகு வாய்ந்த விழிகளைக் கொண்ட அக்கன்றுகள்பால், கலைக்கும் பிணைக்கும் பேரன்பு பிறக்குமன்றோ?

---

1. நற்றிணை : 121. ஒரு சிறைப்பெயரியனார்.

விதையர்-உழுதொழில் புரியும ஆயர். கொன்ற-பலகால் உழுத. முதையல்-பழங்கொல்லை. இடுமுறை-விதைக்கும் முறை. கவைக்கதிர்-பிளவுபட்ட கதிர். கறித்த-தின்ற. அரலை-மரல்விதை.

கலைமான் ஒன்று, தான் விரும்பும் பிணையோடும், விழிக்கண் பேதையோடும் ஒரு காட்டில் வாழ்ந்திருந்தது. ஒரு நாள், அவை தம் இனத்தோடும் கூடி, எங்கோ ஓர் இடம் தேடிச்சென்று கொண்டிருந்தன; செல்லுங்கால் இடைவழியில், பிணை, வழி தவறிவிட்டது. அப் பிணையையே பின்பற்றிச் செல்லும் இயல்புடைய அதன் கன்றும் வழி தவறி விட்டது. இதை அப்போது அறிந்திலது அக்கலை. ஒன்று திரண்டு பெருங்கூட்டமாய்ச் செல்லும் தன் இனத்தின் இடையே கலந்து யாண்டேனும் இருக்கும் எனும் எண்ணத்தால் சென்றுகொண்டேயிருந்தது. சிறிது தூரம் சென்றது; மீண்டும் அக்கூட்டத்தை நோக்கிற்று; அவற்றினிடையே, தன் பிணையும் கன்றும் இல்லாமையை உணர்ந்தது; கலங்கிற்று அதன் உள்ளம்; அவ்விடத்தினின்றும், மேலே ஓர் அடி எடுத்து வைக்கவும் அதால் இயலவில்லை. வந்த வழியே பின் நோக்கி ஓடிற்று; இடைவழியில், ஒவ்வோர் இடத்திலும் நின்று நின்று, அவற்றைத் தேடித் தேடி அலைந்தது அலையும் அதன் காட்சி, காண்பார்க்குக் கடுந்துயர் தருமேனும், அக்காட்சி காட்டும் அதன் காதல் உள்ளத்தை உணர வல்லார்க்கு, அது பெரு மகிழ்ச்சி தருமன்றோ?

"கழிப் பெயர் களரில் போகிய மடமான்
விழிக்கண் பேதை யொடு இனன் இரிந்து ஓடக்,
காமர் நெஞ்சமொடு அகலாத்
தேடூஉ நின்ற இரலை ஏறே" 1

1. நற்றிணை : 242. விழிக்கண் பேதைப் பெருங்கண்ணனார், மானின் இளங்கன்றை "விழிக்கண் பேதை" எனும் பெயர் கொடுத்துச் சிறப்பித்தமையால், அக்கால மக்கள், அப் புலவர்க்கு, விழிக்கண் பேதை எனும் அப்பெயரளித்துச் சிறப்பித்தனர்.

களர்-களர்நிலத்தில். இரிந்து-பிரிந்து. காமர்-ஆசை, அன்பு. இரலை-மான். ஏறு-ஆண். இரலைஏறு-கலைமான்.

**ஒழுக்க நெறி உணர்த்தும் ஊர்க் குருவி:**

குருவிக் குடும்பம் ஒன்று, முல்லை நிலத்து மனை யொன்றில் வாழ்ந்திருந்தது; அவ்வீட்டுக் கூரையின் உள்ளே கூடுகட்டி வாழ்ந்திருந்தது அக்குடும்பம்; சேவல், அது விரும்பும் பேடை, ஈங்கை மலர் போன்ற உருவினவாய அவற்றின் இளம்பார்ப்புக்கள், இவையே அக்குடும்பம்; கார் காலத்து ஒரு நாட்காலை, கூட்டை விட்டு வெளியே சென்ற சேவல், சென்ற இடத்தில் அழகிய பெண் குருவி யொன்றைக் கண்டது; அதன் பால் ஆசை பிறக்கவே, அப்பகலை, அதனோடு சேர்ந்து அவ்விடத்திலேயே கழித்தது. மாலை வந்துற்றதும் தன் கூட்டை நோக்கிப் பறந்தது. கூட்டின் வாயிற்கண், அதன் வரவை எதிர் நோக்கியிருந்தன பேடையும் பார்ப்புக்களும்; சேவலும் வந்து சேர்ந்தது. வந்த சேவலை வரவேற்கக் கூட்டின் வாயிற்கண் காத்திருந்த பேடை, சேவலின் தோற்றத்தைக் கண்டது; சென்ற இடத்தில் வேறு ஒரு பெண் குருவியோடு தொடர்பு கொண்டு வருகிறது என்பதை உணர்த்தி விட்டது அத்தோற்றம். அதை அறிந்து கொண்ட பேடை, வந்த சேவலை வரவேற்று உள்ளே அழைத்துச் செல்வதை விடுத்தது; அதற்கு வாயில்விட மறுத்தது. அதை வெளியே விடுத்துத் தன் பார்ப்போடு உள்ளே புகுந்து வாயிலை அடைத்துக் கொண்டது. வெளியில் தங்கிய சேவல், தன் செயல் கண்டு வருந்திற்று; கார்கால மாதலின், சிறிது நாழிகைக் கெல்லாம் மழை பெய்யத் தொடங்கி விட்டது; வாடையும் வீசிற்று. வாடையும், மழையும் வருத்த, உடல் குளிரால் நடுங்க, அவ்விடத்திலேயே செயலற்றுக் கிடந்தது சேவல். சேவலின் ஒழுக்கங் கெட்ட செயல் கண்டு சினந்து, அதைப் புறத்தே விட்டுப் போயிற்றேனும் பேடைக்கு அதன் பால் உள்ள அன்பு குறைந்திலது;

அதனால் கூட்டின் வாயிலைத் திறந்து வெளியே நோக்கிற்று; வாடையும், மழையும் வருத்த வீழ்ந்து கிடக்கும் சேவலைக் கண்டது; இனியும், அதை அங்ஙனே விட்டுவைப்பின், அது இறந்து போம்; அதனால் தனக்கும் பெரும் பழி உண்டாகும்; ஆதலின், அதை, அதன் பிழை பொறுத்து ஏற்றுக் கொள்வதே பெருமை தரும் செயலாம் என உணர்ந்தது. அருள் நிறைந்த அதன் உள்ளத்தால், சேவலின் வருத்தத்தை மேலும் காண்பது இயலாதாயிற்று. வெளியே வந்து, வாய்திறந்து "வருக" என அழைத்துக் கொண்டு உட்சென்றது. என்னே அதன் அன்பு! என்னே அதன் ஒழுக்கம்! பிழை காணின் பழித்து ஒறுக்கும் உரமும், பிழை புரிந்தார், தம்பிழை உணர்ந்து வருந்திய வழி, அப்பிழை பொறுத்து ஆட்கொள்ளும் அன்பும் மனைவியர்க் மாண்பு தரும் குணங்களாம் என்பதை அறிவுறுத்தி அறவழி காட்டும் அக்குருவிக் குடும்பம் வாழ்க.

"உள்ளிறைக் குரீஇக் கார்அணல் சேவல்
பிறபுலத் துணையோடு உறைபுலத்து அல்கி
வந்ததன் செவ்வி நோக்கிப் பேடை
நெறிகிளர் ஈங்கைப் பூவின் அன்ன
சிறுபல் பிள்ளையொடு குடம்பை கடிதலின்,
துவலையின் நனைந்த புறத்தது, அயலது
கூரல் இருக்கை அருளி, நெடிது நினைந்து
ஈர நெஞ்சின் தன்வயின் விளிப்ப." 1

---

1. நற்றிணை : 181.

உள்இறை-வீட்டின் உட்கூரை. கார் அணல்-கரிய கழுத்து. பிறபுலத் துணை-வேறிடத்தே உள்ள பெண் குருவி. உறைபுலம்-தங்கும் இடம். அல்கி-தங்கி. செவ்வி-தோற்றம். நெறிகிளர்-நெருங்கிய. குடம்பை-கூடு. கடிதலின்-விலக்கலின். துவலை-மழை. கூரல் இருக்கை-குளிரால் நடுங்கியிருக்கும் இருக்கை. ஈரநெஞ்சு-அன்பு உள்ளம்.

**கோழியின் காதல் :**

காதல் வாழ்க்கையைத் தாமே அறிவர் எனச் செருக்கித்திரியும் மக்கள் இனத்திற்குக், காதல் நெறி இது என்பதை எடுத்துக்காட்டி, கடமையை எண்ணிக் காதலைக் கைவிடும் கயவர்க்குக் * காதற் சிறப்பினை உணர்த்தும் உயர்வுடைமை, விலங்குகளுக்கும் பறவை களுக்குமே உண்டு. காதலை மறவா மாண்பு, காட்டுப் பறவைகளிடத்தும் காணலாம். கோழி, இயல்பாகவே அன்புடையது; தன் குஞ்சுக்குக் கேடுசெய்ய நினைக்கும் கொடும் பறவைகளை அஞ்சாது எதிர்க்கும் அன்புடையது கோழி; "கோழியும் தன் குஞ்சுதனைக் கொல்லவரும் வான்பருந்தைச் சூழ்ந்து எதிர்க்க அஞ்சாது" எனக் கோழியின் அன்பை, அவ் அன்பு காரணமாகப் பிறக்கும் அஞ்சாமையினைப் பாராட்டியுள்ளார் ஒரு புலவர். தாம் ஈன்ற குஞ்சுகள்பால் பேரன்பு காட்டும் கோழிகள், காதல் நெறியிலும் சிறந்து விளங்கும் என்பதில் ஐயமுண்டோ ?

அழகிய சேவற்கோழியொன்று, தன் பெடையோடு வாழ்ந்திருந்தது. காய்ச்சி உருக்கிய ஆன் நெய்யில் பால் தெளித்ததுபோலும் வெண்புள்ளிகள் விளங்கும் கழுத்து, தேரையின் குரல்போல் தெளிவாக ஒலிக்கும் தொண்டை, இவற்றால் கண்டார் மகிழும் உருவம் உடையது அச் சேவல்; ஒரு நாள், பெருமழை பெய்துகொண்டிருந்தமை யால், வெளியே சென்று, இரை தேடிப் பெறமாட்டாது வருந்தியிருந்தன அச்சேவலும் பெடையும். தன் பெடையின் பசித்துயரைக் கண்டும் செயலற்று இருத்தல் சேவலுக்கு இயலாதாயிற்று. மழையின் ஒழிவை எதிர் நோக்கியிருந்தது. மழையும்நின்றது. உடனே காட்டிற்குள் ஓடிற்று; ஆங்கே, மணலில் மழைநீர் வடியவும் இல்லை; பெடையின் பசித்துயரைப் போக்கவேண்டும் என்பதில்

அதற்குள்ள ஆர்வம், அந்நீர் வடியுங்காறும் பொறுக்கச் செய்திலது ; ஈரமணலைக் கிளைக்கத் தொடங்கிவிட்டது ; கிளைத்தவிடத்தே நாங்கூழ்ப் புழுவொன்றைக் கண்டு, பற்றிக் கொன்றது ; கொன்றுகொண்ட அவ்விரையைத் தன் அலகுகளில் ஏந்திக்கொண்டே பெடையிருக்கும் இடம் நோக்கிப் பறந்தது. என்னே அதன் அன்பு ! அக் காதற்காட்சியைக் கண்ட ஓர் இளைஞன், வீட்டில் விட்டுப் பிரிந்துவந்த தன் காதலிபால் விரைந்து ஓடினன். அவனை, அவன் காதலிபால் துரத்தும் காட்டுக்கோழியின் காதற் பெருமைதான் என்னே !

“ ஏமதி வலவ ! தேரே ; உதுக்காண்,
உருக்குறு நறுநெய் பால் விதிர்த் தன்ன,
அரிக்குரல் மிடற்ற அம்நுண் பல்பொறிக்
காமரு தகைய கான வாரணம்
பெயல் நீர் போகிய வியல்நெடும் புறவில்
புலரா ஈர்மணல் மலிரக் கெண்டி,
நாள் இரை கவர மாட்டித்
தன் பெடை நோக்கிய பெருந்தகு நிலையே.” 1

**ஆனிரை ஓம்பும் ஆயர் :**

இன்ப நுகர்விற்கு ஏற்ற இடமாய முல்லை நிலத்தில் வாழும் ஆயர் உள்ளமும் அன்பால் நிறைந்ததாம். ஒருவர் வாழப் பலர் வருந்தவேண்டிய நிலை இன்றிப், புல்லும் புனலும் அளித்து ஆனிரைகளையும் வாழவைத்து, அவை அளிக்கும் பால் முதலாம் பல பொருள்களால் தாமும்

1. நற்றிணை : 21. மருதன் இளநாகனர்.

ஏமதி-விரைந்து ஓட்டுவாயாக. வலவன்-தேர்ப்பாகன். உதுக்காண்-அதோபார். விதிர்த்தல்-தெளித்தல். அரிக்குரல்-தேரையின் குரல்ஒலி போலாம் குரல். மிடற்ற-கழுத்தை உடைய. அம் நுண்பொறி-அழகிய சின்னம் சிறு புள்ளிகள். காமருதகைய-அழகிய. கானவாரணம்-காட்டுக் கோழி. பெயல் நீர்-மழை நீர். போகிய-வடிந்த. மலிர-நிறைய. கெண்டி-பறித்து. நாள் இரை-காலைப் போதில் கிடைத்த இரை.

வாழ்ந்து பிறரையும் வாழப்பண்ணும் வளமார் வாழ்க்கை ஆயர் வாழ்க்கை. அவர் வாழ்க்கையின் இவ்வியல்பறிந்த இளங்கோவடிகளார், "ஆ காத்தோம்பி ஆப்பயன் அளிக்கும் கோவலர் வாழ்க்கை ஓர் கொடும்பாடில்லை" எனக் கூறிப் பாராட்டியுள்ளார். அதிலும் மனதாலும் கொடுமை எண்ணு மாண்புடைய அறத்துறை அடிகளாய கவுந்தியின் வாயில்வைத்து வாழ்த்தியுள்ளார்.

அடைமழை, ஆனிரைச் செல்வத்தை அழிக்கும் பகைகளுள் ஒன்று. பெருமழை பெய்யின், ஆனிரைகள், அதிலும் ஆடுகள், வெளியே சென்று உணவு கொள்ள மாட்டாதும், குளிரால் நடுங்கியும் உடல் குன்றி உயிர் இழக்கும்; அதனுல் அவற்றை நம்பி வாழும் ஆயர், மழைக்காலத்தில் அவற்றைக் காப்பதில் விழிப்பாயிருப்பர்; மழை நிறுத்தத்தை எதிர்நோக்கி யிருந்து, அது நின்ற வுடனே தம் நிரைகளை மேட்டு நிலங்களுக்குக் கொண்டு சென்று மேய விடுவர். அதன் பொருட்டுத் தம் மனைவி மக்களைப் பலநாள் பிரிந்திருக்க நேரினும் வருந்தார். இன்றி யமையாக் காலத்தும், தம் நிரைகளைத் தம்மோடு வரும் பிற ஆயர்பால் ஒப்படைத்து வந்து விரைவில் மீள்வர். இஃது, ஓர் ஆயன் வாழ்க்கை.

கார் காலத்துக் கருமேகம் கால் இறங்கிப் பெய்து ஓய்ந்தது. அதை எதிர் நோக்கியிருந்த ஆயன், உணவுக் கலம் தாங்கும் உறி, உடற்குளிர் போக்க உதவும் தீக் கடைக்கோல் போலும் கருவிகள் இட்ட தோல்பை, மழை நீர் படாது மேனியை மறைக்க உதவும் பனைஓலைக் குடை ஆகிய இவற்றை முதுகின் பின்புறத்தே ஒரு சேரக் கட்டிக் கொண்டான்; கையில், பெரிய தடியை ஏந்திக் கொண்டான். மழையின் சிறுதூரல் தன்னை நனைப் பதையும் பொருட்படுத்தாதே, ஆனிரைகளை ஓட்டிச்

சென்று, மேட்டு நிலத்தை அடைந்தான்; ஆங்கே ஆனிரைகளை மேயவிட்டான். ஓய்ந்து உட்கார்ந்து விடின், நிரையைவிட்டு ஓடும் ஆடுகளை அறிதல் இயலாது ஆகலின், உட்கார்ந்திலன்; நின்றது நின்றவாறே காத்துக் கிடந்தான்; கால் கடுப்பின், கைத்தண்டைக் கீழே ஊன்றிக் கடுக்கும் காலை அதன்மீது வைத்துக் கொண்டான்; அந்நிலையில், யாதேனும் ஓர் ஆடு நிரையை விட்டு ஓடின், அதன்பின் ஓடி மடக்குதல் செய்யாது, வாயிதழ் மடித்து, வீளை எழுப்பி அதை அழைத்தான்; அதுவும் அவ்வொலி கேட்டு அடங்கி அப்பாற் செல்லாது மீண்டும் நிரை வந்து அடைந்தது. இவ்வரிய காட்சியை அக்காலத்து முல்லைக் காடுகளில் கண்டு களித்த புலவர் பலர்.

வான் இகுபு சொரிந்த வயங்குபெயல் கடைநாள்
பாணி கொண்ட பல்கால் மெல்உறி,
ஞெலிகோல் கலப்பை அதளொடு சுருக்கிப்,
பறிப்புறத்து இட்ட பால்நொடை இடையன்,
நுண்பல் துவலை ஒருதிறம் நனைப்பத்,
தண்டுகால் வைத்த ஒடுங்குநிலை மடிவிளி
சிறுதலைத் தொழுதி ஏமார்த்து அல்கும்
புறவு.'' 1

**கோடையில் ஆயர்:**

கார் காலத்தில், தம் நிரைகளை நீர் பெருகா மேட்டு நிலத்திற்குக் கொண்டு சென்று மேய்க்கும் ஆயர், மழை

---

1. நற்றிணை: 142. இடைக்காடனார்.

இகுபு-கால்இறங்கி. சொரிந்த-பெய்த. வயங்கு-விளங்கும். பாணி-கை. பல்கால்-பலகாலிட்டுப் பின்னிய. ஞெலிகோல்-தீக் கடைகோல். கலப்பை-கருவிகள். அதள்-தோல், இங்குத் தோலால் ஆகிய பை. பறி-பனை ஓலைக் குடை. பால்நொடை இடையன்-பால்விற்று வாழும் இடையன். துவலை-மழைத்துளி. மடிவிளி-இதழ்மடித்து எழுப்பும் வீளைஒலி. சிறுதலைத் தொழுதி-ஆட்டுநிரை. ஏமார்த்து-மயங்கி.

யற்ற காலத்திலாவது, தம் மனையின்கண் இருந்து மகிழ்ந்து வாழ்வரோ என்றால், அதுவும் இல்லை. மாரிக் காலத்தில், மழை மிகுதியால் வருந்தி வாடும் அவர் நிரை, கோடை காலத்தில், உண்ணுநீர் பெறாது வருந்தும்; அதனால் அக்காலத்தில் அவற்றிற்கு வேண்டும் தண்ணீர் கிடைக்கும் இடந்தேடிச் சென்று, ஆங்கு வாழ்வர்; அதனால், அவர்கள் ஆண்டு முழுவதும், தம் மனையின் அகன்றே வாழவேண்டியவராவர். தண்ணீர் தேடிப்போகும் இடங்களில், தண்ணீர் கிடைக்கப்பெறாது போயின் உடன்கொண்டு செல்லும் கணிச்சி முதலாம் கருவிகளைக்கொண்டு, அக் கல்நிலத்தில், கல்லைப் பிளந்து கிணறுகள் தோண்டுவர். அரிதின் முயன்று தோண்டிய அக்கிணறுகளில், தண்ணீர் பெருகக் கிடைக்காதாயின், அச்சிறிது நீரையும் முல்லை நிலத்தை அடுத்த மலைக்காட்டு யானைகள் உண்டுவிடுதல் அஞ்சி, அவை அந்நீரை எளிதில் அடையாவாறு, கிணற்றின் வாயை, வலிய நீண்ட கொம்புகள் பலவற்றை வில்போல் வளைத்துக் குறுக்கும் நெடுக்குமாக வைத்து அழுந்தப் பொருத்தி மூடிச் செல்வர். அவ்வாறு அவர் மூடிவைத்தவற்றையும் யானைகள், அகற்றி அந்நீர் உண்டு செல்வதையும், அதனால் ஆயர் பெரிதும் வருந்துவதையும் கண்டு வருந்திய புலவர்களும் உளர்.

> வெயில் வெய்துற்ற பரல் அவல் ஒதுக்கில்
> கணிச்சியிற் குழித்த கூவல் நண்ணி
> ஆன்வழிப் படுநர் தோண்டிய பத்தல்
> யானை இனநிரை வெளவும் கானம்."1

---

1. நற்றிணை : 240. நப்பாலத்தனார்

பரல்-சிறு கற்கள். அவல்-பள்ளம். ஒதுக்கில்-ஒருபால். கணிச்சி கல்லுடைக்கும் குந்தாலி. குழித்த-தோண்டிய. கூவல்-கிணறு. நண்ணி-அடைந்து. பத்தல்-வாய்சிறிய கிணறு.

# 4. வயல் நிலம்

நெல்லும் கரும்பும் விளையும் நன்செய்களைக் கொண்ட நிலப்பகுதிகள், மருதம் எனப் பெயரிட்டு வழங்கப் பெறும்; மருத நிலம், நாகரிகத்தின் எல்லையை எட்டிப் பிடித்த மக்கள் வாழும் இடமாகும். மக்களுக்கு உயிரளிக்கும் உழவுத்தொழில் நிகழும் இடம் மருதநிலம்; உலகநிலை பல்வேறு துறைகளில் வளர்ந்திருப்பினும், புத்தம் புதிய கண்டு பிடிப்புக்கள் நாள்தோறும் நடை பெற்றுக்கொண்டே யிருப்பினும், “மக்கள் யாக்கை உணவின் பிண்டம்” என்ற கொள்கையில் மட்டும் எவ்வித மாற்றமும் இடம் பெறவில்லை; இனி இடம் பெறுவதும் இல்லை. மக்கள் மேற்கொள்ளும் ஒவ்வொரு முயற்சியும் வயிற்றை வளர்க்கவே யாதலின், அவ்வயிற்றை நிரப்பும் உணவளிக்கும் உழவுத் தொழில், தொழில்கள் பலவற்றுள்ளும் தலையாயது; மக்கள் மேற்கொள்ள வேண்டிய இறுதித் தொழிலும் அதுவே யாகும். ஆகவே, அவ்வுண்மையுணர்ந்து, அத்தொழிலிற் சிறந்து விளங்கிய மக்கள் நாகரிகத்தின் எல்லையைக் கண்டவ

ராவர் ; அத்தொழில் நிகழும் இடம் நாகரிகம் நனிசிறந்து விளங்கும் இடமாம்.

மருதநிலப்பகுதி மலையற்றது ; மணல் பரவாதது ; அதனால், அங்கு மழைநீர் உருண்டோடி விடுவதோ, மண்ணுள்ளே ஊறி மறைந்துவிடுவதோ இல்லை. பெய்த நீரில் பெரும் பகுதி, ஏரிகுளம்போலும் பெரிய பெரிய நீர் நிலைகளில் நிலைத்து நிற்கும் ; அதனால் ஆழ உழுது, நிறைய நீர் அளித்துத் தொழிலாற்றுவதற்கு ஏற்ற வாய்ப்புடையது அந்நன்செய் நிலப்பகுதி ; தமிழகத்து மருத நிலங்கள் அத்தகைய மாண்புடையவாம்.

**ஆமை முதுகும் சுட்ட நத்தையும் :**

நெல்லும் கரும்பும் மஞ்சளும் இஞ்சியும் விளையும் நிலங்கள், கல்லும் மணலும் அற்ற, மண்ணே நிறைந்த நிலங்களாதல் வேண்டும். அத்தகைய மண்ணிலேயே, அவை நன்கு வேறுன்றி நிறைந்த பயன் தரும் ; ஆதலின் அத்தகு நிலவளத்திற்குக் கற்கள் இல்லாமையினைக் கருத்தாய் இருந்து காத்தனர் அக்கால மக்கள் ; மருத நிலக் கழனிகள் கற்கள் அற்றவை என்பதையும் புலவர் ஒருவர் நயமாக எடுத்துக் கூறியுள்ளார்.

விளைந்து முற்றிய தம் வயலைக் காத்திருந்தனர் சில உழவர். காவல் மிகுதியால், வீட்டிற்குச் சென்று வரவும் இயலாது போயிற்று ; அதனால் பசித்துயர் வருத்திற்று ; ஏதேனும் தின்னவேண்டும்போல் இருந்தது ; அந் நிலையில் நத்தைகள் சில நகர்ந்து செல்வதைக் கண்டனர்; அவற்றைப் பிடித்துச் சுட்டனர் ; சுட்ட நத்தையின் கூட்டை உடைக்கக் கல் தேடினர். எங்கும் கிடைக்க வில்லை. கல் கிடைக்கவில்லையே எனக் கவலை கொண்டி ருந்தபோது, வயலில் படுத்துறங்கும் ஆமைகள் அவர்

கண்ணிற்பட்டன ; அவர் பசிக்கொடுமை, நத்தையின் ஓடுகளை யாமையின் முதுகு ஒட்டிலாவது உடைத்துத் துண்ணத் தூண்டிற்று ; அவ்வாறே உடைத்தும் உண்டனர் என்று கூறும்முகத்தான், நத்தையின் மெல்லிய கூட்டினை உடைக்கக்கூடிய சிறுகல்லும் கிடைக்கப் பெறாத மருத நிலக்கழனிகளின் மண்வளம் விளங்கச் செய்துள்ளமை அறிக.

"பழன யாமைப் பாசறைப் புறத்துக்
கழனி காவலர் சுடுநந்து உடைக்கும்." 1

**வாளை விளையாடும் வயல் :**

நிலவளத்தை அடுத்து வேண்டுவது நீர்வளம் ; நிலம் வளமற்றுப் போமாயின், அதற்கு வேண்டும் உரம் இட்டோ, அந்நிலத்தில் கலந்திருக்கும் கல்லையும் மணலையும் அகற்றியோ அதை வளமுடையதாக்கி விடுதல் இயலும். ஆனால், நீர்வளம் நீரின் துணையால் மட்டுமே உண்டாம் ; அதுமட்டுமோ ? நிலத்தை வளமுடைய தாக்குவதும் நீரே. நிலத்தை வளமுடைய தாக்குவது மட்டுமன்று ; நிலத்தைப் பயனுடைய தாக்குவதும் நீரே. நீர்வளம் இல்லாத நாட்டில் நிலம் எவ்வளவு பரந்து, எவ்வளவு சிறந்தவள முடையதாக விளங்கினும் பயனில்லை. நீர்வளம் அவ்வளவு இன்றியமையாதது. இதை உணர்ந்தவர் பழந் தமிழ் மக்களும், மன்னரும் ; அதனால், அவர்கள் ஆறுகளுக்கு அணைகட்டியும், குளம் கிணறுகளை வெட்டியும் அந்நீர் வளத்தைப் பெற்றனர் ; தமிழகத்து நிலங்கள் நீர்வள மற்றன என்ற குறைபெறாவாறு பார்த்துக்கொண்டனர் ;

---

1. நற்றிணை : 280. பரணர்.
பழனம்-வயல். பாசறைப்புறம்-பசிய கல்போன்ற முதுகு. கழனி-வயல். சுடுநந்து-சுட்ட நத்தையை.

நிலத்தின் நீர்வளம் கண்டு மகிழ்ந்த புலவர்கள், அதைப் பல்வேறு வகையில் விளக்கியுள்ளனர்.

மீன் வகையுள் வாளை என்பதும் ஒன்று ; உள்நாட்டு நீர்நிலைகளில் வளரும் மீன்களுள், உருவிற் பெரியது வாளை ; பெரிய பெரிய நீர் நிலைகளில் மட்டுமே வாழக் கூடியது ; அதன் ஆட்டத்தைக் கூறி, அக்கால நீர் வளத்தை விளக்கியுள்ளார் ஒரு புலவர்.

பாண்டியர், தம் நாட்டு நிலவளத்தைப் பெருக்க எண்ணியெடுத்த ஒரு பெரிய குளம் நீரால் நிறைந்து, மடை அடைக்கப்பட்டிருந்தது. பல திங்கள் வரையும், மடையெடுக்கப்படாமலே கிடந்தமையால், அதில், வாளை, வரால் போலும் பெரிய பெரிய மீனினங்கள் நிறைந்தன. ஒரு நாள், திடுமென மடை எடுத்துக்கொண்டது. தேங்கி யிருந்த நீர் விரைந்து வெளியே பாய்ந்து ஓடிற்று. வெள்ள மென ஓடிய அந்நீரில், நிலைத்து நிற்க மாட்டாத ஒருவாளை அக்குளத்தை விட்டு வாய்க்காலை அடைந்தது. அங்கும் நீரை எதிர்த்தோடுவது அதனால் இயலவில்லை. நீர் அவ்வளவு வேகமாக ஓடிக்கொண்டிருந்தது. அதனால் சிறிது தூரம் அந்நீரோடே அடித்துக்கொண்டு போகப் பட்டது. வெள்ளத்தின் வேகம் தணிந்ததும், நீரை எதிர்த்து நீந்திச் சென்றது. சென்று, வாய்க்காலை அடுத் துள்ள வயலுள், அவ்வயலுக்கு நீர் பாயும் சிறிய மடை வாய் வழியே புகுந்து ஓடிற்று ; ஆங்கு அந்நிலத்தை உழுதுகொண்டிருந்த எருமைகள், கால் எடுத்து வைக்குந் தோறும் சிதறும் சேறு, புள்ளி புள்ளியாக, அதன் மேற்புறத்தே தெறித்து வீழ்ந்தது. சேறு படிய ஓடிய வாளையைக்கண்ட வயல் உழவர், தம் கைக்கோல் கொண்டு அதைப் புடைத்தனர். அவர் அடிக்கும் அஞ்சாது, அவர் கையிலும் அகப்படாது, சேறும் நீரும் கலந்த அவ்வயலில்

அங்கும் இங்கும் ஓடி அலைந்தது. அவ்வாறு நெடிது நாழிகை ஓடிய அது, கடைசியில், அவ்வயலின் ஒருபால் வரப்பை அடைந்தது ; வரப்பைக் கடந்து செல்ல மாட்டா மையால் ஆங்கேயே கிடந்து புரண்டுகொண்டிருந்தது.

இக்காட்சியைக் கண்டு களித்த புலவர், பெரு நீரில் வாழும் வாளை, வயலில் விளையாடிற்று எனப்பாடி, தமிழ கத்து மருத நிலங்களின் நீர் வளத்தை விளக்கியுள்ளமை உணர்க.

'கல்லா யானைக் கடுந்தேர்ச் செழியன்
படைமாண் பெருங்குளம் மடைநீர் விட்டெனக்
கால் அணைந்து எதிரிய கணைக்கோட்டு வாளை
அள்ளல்அம் கழனி உள்வாய் ஓடிப்
பகடு சேறு உதைத்த புள்ளி வெண்புறத்துச்
செஞ்சால் உழவர் கோல்புடை மதரிப்
பைங்கால் செறுவின் அணைமுதல் புரளும்.''

### மீன் வளர்க்கும் வயல் :

மீன், ஒன்று பலவாகி வளர்ந்து வாழ்தல், நீர் இடை யறுது நிற்கும் நிலைகளில் மட்டுமே இயலும் ; தமிழகத்து வயல்கள் என்றும் நீர் வற்றியதில்லை. அதனால், அவ் வயல்கள், நெல் விளையும் நன்செயாகி நீடிய பயன்தந்த தோடு, மீன் வளர்க்கும் பண்ணையாகவும் பயன் உற்றன. ஒரு வயலில் நெற்பயிர் அறுக்கப்பட்டுவிட்டது. அறுத்த நிலத்தை மீண்டும் ஆழ உழுது நெல் விளைக்க எண்ணி னன், அந்நிலத்திற்குரிய உழவன். ஒருநாள், அரிதாள்

1. நற்றிணை : 340. நக்கீரர்.

செழியன்-பாண்டியன். படை-தோண்டிய. கால் அணைந்து-கால் வாயை அடைந்து. எதிரிய-திரும்பிய. கணை-பெரிய. கோடு-கொம்பு அள்ளல்-சேறு. அம்-அழகிய. உள்வாய்-உள்ளே. பகடு-எருது. செஞ் சால் உழவர்-ஆழமாகப் பலசால் ஓட்டும் உழவர். கோல்புடை-கோலால் அடித்தல். மதரி-தப்பிச் செருக்குற்று. பைங்கால்-நீர்மிக்க. அணை-வரப்பு.

மடங்க உழுமாறு ஏர்களை அமர்த்திவிட்டு வீடுசென்றான்; சென்று அந்நிலத்தில் விதைத்தற்கு வேண்டும் நெல் விதைகளை ஒரு கூடையில் இட்டுத் தூக்கி வந்தான். வருவதற்குள் உழவர்கள், உழுகாலில் அவ்வப்போது சிக்கிய மீன்களைப் பிடித்துப் பிடித்து ஒரு பள்ளத்தில் போட்டு வைத்தனர். உரியவன் வந்தான்; கொண்டு வந்த விதைகளை விதைத்தான்; விதை கூடையை வறிதே எடுத்துச் செல்லாது, அப்பள்ளத்தில் குவிந்து கிடக்கும் மீன்களை நிறைய வாரிக்கொண்டு வீடு சென்றான்; விதை கூடை நிறையுமளவு மீன்வளரும் வயல், நீர் வளம் உடையது என உரைக்கவும் வேண்டுமோ? வயல், நீர் வளம் வாய்ந்தது என்பதை அவ்வாறே கூறாது, இவ்வாறு கூறி இலக்கியத்திற்கு இனிமை ஊட்டினார் ஒரு புலவர்.

' அரிகால் மாறிய அங்கண் அகல்வயல்
மறுகால் உழுத ஈரச் செறுவில்
வித்தொடு சென்ற வட்டி பற்பல
மீனொடு பெயரும் யாணர் ஊர்.'' 1

**ஆம்பல் பூக்கும் பொய்கை :**

அல்லியும் தாமரையும் வளர்தல் வற்றாப் பெருநீர் நிலைகளில் மட்டுமே இயலும்; அதுவும், அவை வேர் ஊன்றி வளர்ந்து, படர்ந்து, மலர் ஈனவேண்டுமாயின், அதற்குத் திங்கள் பலவாயினும் தண்ணீர் குறையாதிருக்கும் குளங்களாதல் வேண்டும். இதை அறிந்த புலவர் ஒருவர் தமிழகத்து வயல்களுக்கு, நீர் வழங்கும்

1. நற்றிணை : 210. மிளைகிழான் நல்வேட்டனார்

அரிகால்-அறுத்ததாள். மாறிய-நீக்கப் பெற்ற. மறுகால்-மறுமுறையும். ஈரச்செறு-ஈரம் பொருந்திய சேறு. வட்டி-விதை கூடை. யாணர்-புது வருவாய்.

ஒரு பொய்கையின் நீர் வளத்தை விளக்க அல்லித் துணையை நாடியுள்ளார்.

பிடியானையின் காதுகள்போல் பரந்த பெரிய பசிய இலைகள்; நீர் நிலைக்கண், உறுமீன் நாடி நிற்கும் கொக்கின் கூம்பிய நிலையினை நினைப்பூட்டும் அரும்புகள்; விடியற் காலையில் எழுந்து செல்லும் வயல் உழு உழவர், கண்டு மகிழுமாறு, பேரொளி பரவக் கீழ்த்திசையில் தோன்றும் விடிவெள்ளியைப் போல், வெண்மை நிறம் விளங்க, மலர்ந்து மணம் வீசும் மலர் ஆகியவற்றால் அழகுடைய வாய்த் தோன்றும் அல்லிக் குளம் எனப் பாடிப் பாராட் டினர் அப் புலவர். அம்மட்டோ! உழவர் நாள்தோறும் கண்டு மகிழும் கூம்பிய கொக்குகளையும், விடிவெள்ளி யையும் உவமை காட்டி விளக்கி வயலின் நீர் வளத்தை, அவ்வயலுக்கு நீர்தரும் பொய்கையின் நீர்வளத்தைப் போற்றிப் புகழ்ந்துள்ளார் அப் புலவர்.

'முயப்பிடிச் செவியின் அன்ன பாசடைக்,
கயக்கண்அம் கொக்கின் கூம்புமுகை அன்ன
கணைக்கால் ஆம்பல் அமிழ்து நாறு தண் போது,
குணக்குத் தோன்றும் வெள்ளியின் இருள்கெடவிரியும்
கயல்கணம் கலித்த பொய்கை.'' 1

**நெல் மலை :**

நிலவளமும் நீர்வளமும் ஒருங்கே வாய்க்குமிடத்தில், நெல்வளமும் நிறையும் எனக் கூறவேண்டியதில்லை. தமிழ்

---

1. நற்றிணை : 230. ஆலங்குடி வங்கனார்.

முயப்பிடி- நெருங்கிய பிடியானை. பாசடை-பசிய இலை. கயக்கண்- குளத்தின்கண். கூம்பு முகை-மலராத அரும்பு. கொக்கின் அன்ன கூம்பு முகை என மாற்றுக. கணை-பருத்த. கால்-தண்டு. அமிழ்து-தேன் போது-மலரும் பருவத்தில் உள்ள அரும்பு. குணக்கு-கிழக்கு. கயல் கணம்-கயல் மீன்கூட்டம். கலித்த-மிக்க.

நாட்டின் நில நீர்வளங்களைக் கண்டு களித்த பழந்தமிழ்ப் புலவர்கள், அந்நாட்டு நெல் வளத்தையும் நெஞ்சாரப் பாராட்டியுள்ளனர். அவர்கள் கண்ட நெல்மலைக் காட்சி ஒன்றை நீங்களும் காணுங்கள்.

அடுக்கடுக்காக நிற்கும் மலைகள் போன்ற பெரிய பெரிய நெற்கூடுகள் நாடெங்கும் தோற்ற மளிக்கின்றன. நெல் மலிந்து கிடப்பதால், அதை அருமையாகப் பேணிக் காத்தல் வேண்டும் எனக் கருதாத பழந்தமிழ் மக்கள், நெல்லிட்டுவைக்கும் அக் கூடுகளின் அடிகளை வைக்கோற் புரியால் சுற்றிக் காத்தல் வேண்டும் எனக் கருதினரல்லர்; ஆற்றில் போடினும் அளந்து போடுதல் வேண்டும் என்ப வாதலின், கூடுகளில் இடும் நெல்லை அளந்து இட்டனர். இட்ட நெல்லின் அளவைக் குறிக்கும் புள்ளிகள்—இது வரை நிரைந்தால் இத்தனை கலம் என்பதை அறிவிக்கும் புள்ளிகள்—கூட்டின் புறத்தே வரிசையாகப் பொறிக்கப் பட்டுள்ளன. அத்தகைய நெடிய கூடுகள், தமிழகத்தின் சிற்றூர் மனை முன்றில் தோறும் நிற்கும் காட்சியை, அப் புலவர் காட்டும் இலக்கிய ஆடிகொண்டு கண்டு களிப் பீர்களாக.

"செவ்வி சேர்ந்த புள்ளி வெள்ளரை
விண்டுப் புரையும் புணர்நிலை நெடுங்கூட்டுப்
பிண்ட நெல்." 1

**எருமைச் செல்வம் :**

குறிஞ்சி நிலத்துப் புலியும் களிறும் பிற உயிர்களைக் கொன்று உயிர்வாழும் உயிரினங்கள் ; முல்லை நிலத்து

1. நற்றிணை : 26. சாத்தந்தையார்.

செவ்வி-அழகு. வெள் அரை-புரிஅற்ற அடி. விண்டு-மலை. புரையும்-ஒத்த. புணர்நிலை-அடுக்கு அடுக்காக உள்ள. பிண்ட நெல்-நிரம்பிய நெல்.

ஆடு, தான் மடிந்து மக்கள் உயிரோம்பும் உயிரினம். மருத நிலத்து எருதும் எருமையும், ஆவும் ஆன்கன்றும் அவ்விரு இயல்பிற்கும் மாறுபட்டனவாம். பால்முதலாம் தம் பயன் அளித்தும், உழுதொழிற்கு உற்ற துணையாய் நின்றும் அந்நிலத்து மக்களுக்குத் துணைபுரிவன அவை. பாலும் நெய்யும் உணவாய் உடல் ஓம்புவதாலும், உணவுப் பொருள் அளிக்கும் உழுதொழில் நடைபெறப் பெருந் துணை புரிவதாலும் மருதநிலத்து மக்கள், அவற்றைத் தம் செல்வமென மதித்துச் சிறப்புச் செய்தனர். தம் தம் குடும்ப அளவிற்கு ஏற்றவாறு, அவற்றைப் பெரிய அளவிலோ, சிறிய அளவிலோ பெற்றுப் போற்றினர். பழங்கால மக்களின் செல்வ நிலையை மதிப்பிட்ட அறிஞர்கள், ஆனிரைகளையே மதிப்பீட்டளவாக மேற்கொண்டனர்.

எருமைக் கன்றுகளை எண்ணற்றனவாகக் கொண்டமையால் செல்வத்தில் சிறக்கும் வீடு ஒன்றைக் கண்ட ஒரு புலவர், நீண்ட பெரிய கொம்புகளைக் கொண்ட எருமையின் இளங் கன்றுகள், தூண்தோறும் கட்டப் பெற்றுக் காட்சியளிக்கும் கவின்மிக்க நல்ல வீடு என்று பாராட்டினர்.

> " தடமருப்பு எருமை மடநடைக் குழவி
> தூண் தொறும் யாத்த காண்தகு நல்இல்." 1

தமிழ்நாட்டுச் சிற்றூரைச் சேர்ந்த ஒரு வீட்டில், எருமையின், பெரிய காதுகளையுடைய இளங் கன்று, மலர் தரும் மலர்த் தாதுக்களும் உதிர்ந்து எருவாகிக் கிடக்கும் தொழுவத்தில் துயில் கொண்டுக் கிடந்தது. அவ்வீட்டின் வளம் கண்டு வாழ்த்தினர் மற்றொரு புலவர்:

---

1. நற்றிணை : 120. மாங்குடிகிழார்.
தடம்-பெரிய. யாத்த-கட்டிய.

" இரும்புனிற்று எருமைப் பெருஞ்செவிக் குழவி
பைந்தாது எருவின் வைகுதுயில் மடியும்
செழுந்தண் மனை.'' 1

**உழுது ஓய்வுகொள்ளும் எருமை :**

பருத்து வளைந்த கோடுகளையும், கறுத்துத் திரண்ட கழுத்தினையும் உடைய எருமைக் கடாவொன்று, நாட் காலையில் சென்று நீண்ட நேரம் உழுதது. அதனால் மிகவும் தளர்ந்துபோன அது, அத்தளர்ச்சி போக, அருகேயுள்ள பொய்கையில் துடும் எனும் பேரொலி எழப் பாய்ந்து நீந்திற்று. அந் நீர்நிலையின் கரையில் இருந்து, மீன் தேடி உண்டு வாழ்ந்த, நாரை கொக்கு போன்ற பறவையினங்கள், அவ்வெருமைக்கு அஞ்சி, அவ்விடம் விட்டுப் பறந்து ஓடின. நீரில் நெடிது நேரம் ஆடிய எருமை, பின்னர் மெதுவாகக் கரைஏறி, அப்பொய்கையை அடுத்து இருந்த மருதமரத்தடியில், இருளோ என எண்ணுமாறு பெருநிழல் செய்யும் அதன் கிளைகளின் நிழலில் கிடந்து உறக்கம் கொண்டது.

" தடமருப்பு எருமைப் பிறழ்சுவல் இரும் போத்து
மடநடை நாரைப் பல்இனம் இரிய,
நெடுநீர்த் தண்கயம் துடும்எனப் பாய்ந்து
நாள்தொழில் வருத்தம் வீடச், சேட்சினை
இருள்புனை மருதின் இன்நிழல் வதியும்
யாணர் ஊர்.'' 2

---

1. நற்றிணை : 271.

இரும்-கரிய. புனிறு-அண்மையில் மகவு ஈன்ற. பைந்தாது-மலரின் மகரந்தம். வைகுதுயில் - பெருந்தூக்கம். மடியும் - மேற்கொள்ளும். செழுமை-வளம்.

2. நற்றிணை : 330. ஆலங்குடிவங்கனர்.

தட-பெரிய. மருப்பு-கொம்பு. பிறழ்-வலிமை. சுவல்-கழுத்து. இரும்-கரிய. போத்து-கடா. பல் இனம்-பறவைக் கூட்டம். இரிய-பறந்து ஓடுமாறு. கயம் - குளம். நாள்தொழில் - விடியற்காலம் முதலாக மேற் கொண்ட உழுதொழில். வீட-நீங்குமாறு. சேட்சினை-நீண்ட கிளை. இருள் புனை-இருளை நிகர்க்கும். யாணர்-புது வருவாய்.

**சோலைக் குயில் :**

இளவேனிற் காலம், உழவுத்தொழில் ஒழிந்த காலம்; தொழில் இன்றி ஓய்வுகொண்டிருக்கும் மக்கள், தம் மக்களுக்கு மணம் செய்தும், கடவுளர்க்கு விழாக் கண்டும் களிக்கும் காலம், அவ்விளவேனிற் காலம். அக் காலத்தில் அவர் காண்பனவும், கேட்பனவும் எல்லாமே இன்பம் தரும். சோலைகள் புதிய தளிர் ஈன்று, பூத்துக் கிடக்க, அச் சோலையில் இருந்து குயில்கள் கூவக், கேட்பார்க்குப் பேரின்பமாம். காதலனும் காதலியுமாய்க் கூடி வாழும் இளங் காதலர்க்குக், குயிலின் குரல், "மக்காள்! மண்ணுலக வாழ்வு நிலையற்றது; சூதாடு கருவி, உருட்டுந் தோறும் மாறிமாறி உருள்வதுபோல், நிலையற்று அழிந்து போகும் இயல்புடையது. அத்தகைய வாழ்வைப் பெற வேண்டி, மணங்கொண்ட மனைவியரை மறந்து பொருள் தேடிப் போவதைக் கைவிட்டு வாழுங்கள்; நிலையற்ற இவ்வுலகத்தில், வாழக்கிடைத்த அந்நாளை மனைவியோடிருந்து மகிழ்ந்து கழியுங்கள்" எனக் கூறுவது போல் தோன்றி அவர்க்குப் பேரின்பம் தரும்; அக்குயிலின் குரல் கேட்டுக் கேட்டு, உள்ளம் இன்பவுணர்வுகளால் துள்ள வாழ்ந்திருந்தனர் பழந்தமிழ் மக்கள் :

'பொதும்புதோ றல்கும் பூங்கண் இருங்குயில்
'கவறு பெயர்த்தன்ன நில்லா வாழ்க்கை இட்டு
அகறல் ஓம்புமின்! அறிவுடையீர்!' எனக்
கையறத் துறப்போர்க் கழறுவ போல
மெய்யுற இருந்து மேவர நுவல.'' 1

---

1. நற்றிணை : 243. காமக்கணிப்பசலையார்.

பொதும்பு-சோலை. அல்கு-தங்கும். பூங்கண்-அழகிய கண். இருங்குயில்-கரிய குயில். கவறு-சூதாடு கருவி. கையற-செயலற. துறப்போர்-கைவிட்டுப்போவார். கழறுதல்-இடித்து அறிவுரைத்தல். மெய்யுற-ஆணும் பெண்ணுமாய்க் கூடி இருந்து. மேவர-பொருந்துமாறு.

## கரைந்து இனம் கூட்டும் காக்கை

இருபக்கத்து நிகழ்ச்சிகளையும் அறிந்துகொள்ளும் வண்ணம் தலையை இருபாலும் சாய்த்துச் சாய்த்து நோக்கும் பார்வை; கண்ணிற்படும் உணவுப் பொருள் களைத் தவறாது கொத்திக்கொண்டு வரவல்ல கூரிய அலகுகள்; இவ்விரண்டும் வாய்க்கப் பெற்ற ஒரு பெண் காக்கை, ஓரிடத்தில் உணவு குவிந்திருப்பதைக் கண்டு விட்டது; அது ஒரு சிறிய வீடு; குறுகிய கால்களை நாட்டிக் கட்டிய கூரைவீடு; வீடுதான் சிறியது; ஆனால் அங்கு நிகழும் விருந்தோ பெரிது; வருவார்க்கெல்லாம் வழங்கவல்ல பெருஞ்சோறு மலையெனக் குவிந்துகிடந்தது ஆங்கே. கருனைக் கிழங்குப் பொரியல்; கந்தசாலி என்ற உயர்வகை அரிசியால் ஆக்கிய வெண்சோறு: இவ்விரண்டையும் வாரி வாரி வழங்குகின்றனர் அவ் வீட்டில் வாழும் நல்லோர். அதைக் கண்டுவிட்டது அக் காக்கை. அண்மையில் பிறந்து, முற்ற வளராத இறகுகள் நடுங்கத் தத்தித்தத்திப் பறக்கும் தன் இளம் பார்ப்பை அணைத்திருந்தவாறே, விருந்து நிகழும் வீட்டைப் பார்த்துவிட்ட அக்காக்கைப் பேடு, அதைத் தான் மட்டும் தனித்திருந்து உண்ணவிரும்பாமல், தன் இனக் காக்கைகளையும் கூவி அழைத்தது. குரல் கேட்டு வந்த இனத்தோடும் கூடிச் சென்று, வீட்டார் கடவு ளர்க்குப் போடும் பலியைக் கவர்ந்து உண்டது.

"கொடுங்கண் காக்கைக் கூர்வாய்ப் பேடை
நடுங்குசிறைப் பிள்ளை தழீஇக் கிளைபயிர்ந்து
கருங்கண் கருனைச் செந்நெல் வெண்சோறு
சூருடைப் பலியொடு கவரிய, குறுங்கால்
கூழுடை நன்மனை குழுவின இருக்கும்." 1

---

1. நற்றிணை: 367. நக்கீரர்.

கொடுங்கண்-வளைந்த கண். சிறை-இறகு. கிளை-இனம். பயிர்ந்து-அழைத்து. செந்நெல்-கந்தசாலி நெல். சூருடைப்பலி-கடவுளர்க்கு இடும் பலி. கவரிய-கவர்ந்துண்ணக் கருதி.

**மருத நிலத்து மக்கள் வளம் :**

மருதநிலம், நிலவளம் நீர்வளம் இரண்டால் மட்டும் சிறப்புடையதன்று ; நிலவளமும் நீர்வளமும் வாய்ந்த நாட்டில், அவ்விரு வளங்களையும் பயன்கொண்டு தொழிலாற்றும் மக்கள் வளம் இல்லையேல், அந்நிலநீர்வளங்களால் பயன் இல்லாமற் போகும். ஆகவே, ஆங்குக் குடிவளம் குறைவின்றிப் பெருகுதல் வேண்டும். அவ்வாறே, மருதநிலம், மக்கள் வளத்தாலும் மாண்புற்றிருந்தது. பல்வேறு தொழிலறிந்த மக்களும் ஒன்று கூடி வாழ்ந்தனர் ஆங்கு. தொழில் வளத்திற்குத் தொழிலறிந்தார் பலரும் ஒன்று கூடி, வழிவழியாகத், தாம் அறிந்த தொழில்களை வழுவாது மேற்கொண்டு வாழ்தல் இன்றியமையாதது என்பதை அறிந்திருந்தனர் நற்றிணை நாட்டு மக்கள். அதனால், அவர்கள் ஒவ்வொருவரும், ஒவ்வொரு தொழில் மேற்கொண்டு வாழ்ந்தனர் ; ஒன்றிற்கொன்று துணையாய் அமைந்த அத்தொழில்களின் இன்றியமையாமை அறிந்த அக்கால மக்கள், அத்தொழில்களை ஒருசேர மதித்தனர் ; ஒன்று பெரிது ; பாராட்டற்குரியது ; ஏனைய சிறிய ; பழித்தற்குரிய எனப் பாராது, எல்லாத் தொழில்களையும், அத்தொழில் மேற்கொண்ட எல்லா மக்களையும் ஒன்றாகவே, ஒத்தவுயர்வுடையராகவே மதித்துப் பாராட்டிப் பெருமை செய்தனர். அதனால் தமிழ்நாட்டில் தொழில்வளம் செழித்தது.

மருத நிலத்தில், அந்நிலத்தின் தொழிலாய உழவுத் தொழில் மேற்கொண்டு வாழ்ந்த மக்களே பெரும்பகுதியினராவர். உழவனுக்கு, அவன் உழவுத் தொழிலிற்குத் துணைபுரியும் தொழில் புரிந்து வாழ்ந்தார் சிலர். உழவுப் பயன் கொண்டு வாழும் உழவனுக்கு, அவன் வாழ்க்கை இனிது நடைபெற, அவன் வாழ்க்கையின் பயனை நன்கு துய்க்கத் துணைபுரியும் தொழில் மேற்கொண்டு வாழ்ந்

தார் வேறு சிலர். உழவன் அளிக்கும் உணவு பெற்று வாழ்ந்தாரும் உளர். உழவனுக்கு ஆடல் பாடல்களால் இன்பம் ஊட்டிவாழும் பாணன், பரத்தை போன்றாரும் வாழ்ந்தனர். உழவன், செல்வ மிகுதியாலும், ஆடல் பாடல்களினாலும் அறிவுமயங்கி, அறம்பிறழ்ந்து விடுவனோ எனும் அச்சத்தால், அவனுக்கு வேண்டும் அறிவுரை வழங்கியும், அவன் தவறியபோது தண்டித்து நன்னெறி நிறுத்தியும் துணைபுரியும் பெரியோர்களும் ஆங்கு வாழ்ந்தனர்.

**தொழில் திறம் அறிந்த உழவன் :**

பழந்தமிழர் காலத்திற்கும், இக்காலத்திற்குமிடையே எத்தனையோ மாறுதல்கள் நிகழ்ந்துவிட்டன. ஆனால், அவர்கள் அன்று மேற்கொண்ட உழவு முறை மட்டில் எவ்வித மாற்றமும் பெறுமல், இன்றளவும் வாழ்கிறது. திருந்திய உழவு முறையினை, மேலும் மாற்றியமைக்க முடியாத, மாற்றியமைக்க வேண்டாத, உழவு முறையினை அவர்கள் அப்போதே அறிந்து மேற்கொண்டமையினையே அது காட்டுகிறது.

உழவன் ஒருவன் ஏர் பல வைத்து வாழ்கிறான். அவன் வீட்டில் எங்கு நோக்கினும், மலைபோல் உயர்ந்த நெற்கூடுகள் பல காணப்படுகின்றன. முழுதும் நெல்லால் நிறைந்துள்ளன அக்கூடுகள். தொழில் நுணுக்கம் அறிந்தவன் அவ்வுழவன். அதனால் வெய்யில் ஏறின், உழுவெருதுகளும் மயங்கும்; உழுவாரும் தளர்ந்து போவர்; அதனால் தொழிலும் தடையுறும் என அறிந்து விடியலிலேயே வயல் நோக்கிச் செல்வன்; விடியலில் செல்லவேண்டியிருப்பதாலும், தொழிற்கண் துணைபுரிவாரை அதற்குள்ளாகவே ஒன்றுகூட்டி உடனழைத்துச் செல்லவேண்டியிருப்பதாலும், அதே நினைவாய், இரவெல்

லாம் உறங்காது விழித்திருந்து விடியுமுன் எழுந்து செல்வன். செல்வதற்கு முன்னர், வரால் மீனை வெட்டி, ஒன்றாகப் போட்டு ஆக்கிய சோற்றை வயிறார மிகவும் உண்பன்; அவன் வயலுக்குச் சென்றான்; நாற்றுநட உழவுப் பெண்களும் ஒன்றுகூடி வந்துவிட்டனர்; வரப்பில் இருந்து வயலை நோக்கினான்; வயலில் ஆங்காங்கே கோரையும் நெய்தலும் வளர்ந்திருக்கக் கண்டான். நாற்று நடப்போகும் கழனியில், அவை போலும் களை யிருத்தல் கூடாதே என எண்ணினான். விரைந்து வயலில் இறங்கினான். அவற்றை அறவே களைந்தெறிந்து நிலத்தைப் பண்படுத்திக் கொடுத்தான். உழவன் தொழில் திறம் கண்டு வியந்த புலவர், அவனைப் பாடிப் பரிசளித்தார்:

"மலைகண்டன்ன நிலைபுணர் நிவப்பின்
பெருநெல் பல்கூட்டு எருமை உழவ!
கண்படைபெறாது, தண்புலர் விடியல்
கருங்கண் வராஅல் பெருந்தடி மிளிர்வையொடு
புகர்வைஅரிசிப் பொம்மல் பெருஞ்சோறு
கவர்படுகையை கழும மாந்தி
நீர்உறு செறுவின் நாறுமுடி அழுத்த நின்
நடுநரோடு நீ சேறி யாயின்." 1

உழவுத் தொழிலுக்கு உயிர்போல் விளங்குவன உழு வெருதுகள்; எருதுகளின் துணையின்றேல் உழவுத் தொழில் நடைபெறாது; இவ்வுண்மையை உணர்ந்தவர் பழந்தமிழ் உழவர்; எருதுகளின் உழைப்பின் பயன்

1. நற்றிணை : 60. தூங்கலோரியார்.

மலைகண்டன்ன - மலைபோன்ற. நிவப்பின் - உயர்ச்சியையுடைய. கண்படை - உறக்கம். பெருந்தடி - பெரிதாகப் பண்ணியதுண்டு. மிளிர்வை - குழம்பில் மிதக்கும் கறி. புகர்வை - உணவுக்குரிய. பொம்மல் - மிக்க. கவர்படுகையை - விரும்பி வாங்கும் கையால். கழும - மயக்க மேற மிகவும். செறு - வயல்.

அறிந்த அவர்கள், அவற்றைத் தம் உயிரினும் அருமையாகப் போற்றி வந்தனர். அவற்றிற்கு நல்ல உணவும், நீரும் நல்கி வளர்த்தனர். அவ்வாறு வளர்த்து அவற்றால் பயன் கொண்ட உழவர், அவை முதுமை யடைந்துவிட்ட போது, அவற்றால் பயனில்லை ; அவற்றை வைத்துக் காப்பதால் தம் வளத்திற்குக் கேடாம் எனக் கருதும் இழிகுணம் அற்றிருந்தனர். எருதுகளின் உழைப்பால் பெரும்பயன் கொண்ட அவர்கள், அந்நன்றியை மறவாது, முதுமையுற்ற அவற்றை, வயது சென்ற தம் தாய் தந்தையரைப் பேணிக் காப்பதுபோல், போற்றிக் காத்தனர். வயதான எருதுகள் வைக்கோலைத் தின்னா ; ஆகவே, அவற்றின் தேய்ந்த பற்கள் வருந்தாவாறு புல்உணவே அளிக்கவேண்டும் என்பதை அறிந்திருந்தனர் ; புல்லுணவு உண்ணவேண்டிய அவை, அப்புல் கிடைக்கும் இடங்களைத் தாமே தேடிச் சென்று மேய்க என எண்ணி விடாது, புல் நிறைய வளர்ந்திருக்கும் தம்முடைய இள மரச்சோலைகளில் கொண்டு விட்டு, அவை ஆங்குக் கிடைக்கும் புல்லை வேண்டுமளவு மேய்ந்து, அம்மரங்களின் நிழலிற் கிடந்து, தளர்ச்சி போக உறங்கச் செய்து வளர்த்தனர். பல்லாண்டு உழைத்த எருது, ஆண்டு முதிர்ந்து, நடை தளர்ந்துவிடின், உடனே அடிமாட்டான் பால் விலைபேசி விற்றுவிடும் இக்கால உழவர்களுக்கும், அக்கால உழவர்களுக்கும் இடையே எவ்வளவு வேற்றுமை? அவர்கள் அருள் உள்ளம் எங்கே ! இவர்கள் பொருள் உள்ளம் எங்கே !

> " நல்எருது நடைவளம் வைத்தென, உழவர்
> புல்லுடைக் காவில் தொழில் விட்டாங்கு." 1

---

1. நற்றிணை : 315. அம்மூவனார்.

வைத்தென - நீங்கியது என்று கருதி. புல்லுடைக்கா - புல் நிறைந்த மரச்சோலை. தொழில் விட்டாங்கு - தொழில் செய்ய வேண்டாது விட்டதைப் போல்.

**மாடு மேய்த்து மீளும் சிறுவர் :**

உழவுத் தொழில், ஒருவரே தனித்து மேற்கொள்ளக் கூடிய தொழிலன்று. அதற்குப் பலர் துணை புரிதல் வேண்டும். வீட்டில் உள்ளார் அனைவரும் ஒன்றுபட்டு உழைத்தல் வேண்டும். தந்தையும் தாயும் வயலில் தொழில் செய்யச் சென்றுவிடின், வீட்டிலிருக்கும் சிறுவர் வறிதே விளையாடி வாழார். கால்நடை வளர்க்கும் முறைகளை அறிந்த உழவர், தாம் வளர்க்கும் ஆவும் எருமையும் பாற்பயனைப் பெருக அளித்தல் வேண்டின், அவற்றிற்கு நிறைய புல்லுணவு தருதல் வேண்டும் என்பதையும் தெரிந்திருந்தனர். அதனால் அவற்றிற்குப் புல்லளித்துப் பேணும் பணியை, உழவர் தம் சிறுவர்கள்பால் ஒப்படைத்திருந்தனர். அச்சிறுவர்களும், கன்றுகளையும் வீட்டிலே விடுத்து, கன்று ஈன்ற எருமைகளையும் கரிய ஆனிரைகளையும் புல் கிடைக்கும் இடந்தேடி வைகறையிலேயே ஓட்டிச் சென்று மேய்த்து மாலையில் மீள்வர். அவ்வாறு ஓட்டிச் சென்று மேய்ப்பார், நடை மிகுதியால் தம் கால்கள் தளரின், எருமைகள்மீது ஏறி இனிது அமர்ந்து செல்வர். அக்காட்சி ஒன்றை அழகாகப் படம் பிடித்துக் காட்டியுள்ளார் புலவர் ஒருவர்.

> "மன்ற எருமை மலர்தலைக் கார்ஆன்,
> இன்தீம் பால்பயம் கொண்மார் கன்றுவிட்டு
> ஊர்க்குறு மாக்கள் மேற்கொண்டு கழியும்
> பெரும்புலர் விடியல்." 1

---

1. நற்றிணை : 80. பூதன்தேவனார்.

மன்றம் : மாட்டுத் தொழுவம். மலர்தலை-அகன்ற தலை. கார் ஆன் - கரிய பசு. குறுமாக்கள் - இளைய சிறுவர். மேல் கொண்டு - எருமைமேல் ஏறிக்கொண்டு. கழியும் - செல்லும். புலர்தல் - இருள் நீங்குதல்.

# 5. கடல் நிலம்

தமிழகம், முப்பாலும் கடல்கள் சூழ, நீண்ட கடற்கரைச் செல்வத்தைப் பெற்றுளது. உலகின் எப்பகுதிக்கும் வாய்க்காத பருவ மழைகளைப் பெறுதற்குத் துணை புரியும் சிறப்புடையது தமிழகத்துக் கடல்கள். மேல் கடல், கோடையிலும், கீழ்க்கடல் மாரிக்காலத்தும் மழை தந்து, தமிழ்நாட்டு வளத்தை வளர்க்கின்றன. தமிழகத்தின் பெரும் பகுதி கடலை யடுத்திருப்பதால், தமிழ் நாட்டின் பொருள் வளர்ச்சியிலும், அரசியல் புரட்சியிலும், அக்கடல் பெரும் பங்கு கொண்டிருந்தது.

கடல், பல்வேறு வளங்களையும் வழங்கும் இடமாய் கடல் வாணிகம் வளர்க்கும் வழித்துணையாய் விளங்கிற்று. கடற்கரை ஊர்களை வாழ்விடமாகக் கொண்ட மக்கள், கடற்கரையை அடுத்திருந்த நன்செய் நிலங்களை உழுது பயன் கொண்டும், கடல்மேல் சென்று மீன் பிடித்தும், கடல் நீருட் புகுந்து முத்துக் குளித்தும், கடல் நீரைக் காய்ச்சி உப்பு விளைத்தும் வாழ்ந்தனர்.

**வானம் வேண்டா வளம் :**

மழை வழங்கும் வானை எதிர் நோக்கி வாழும் குறை வாழ்க்கை, கடற்கரை மக்களுக்கு இல்லை. மழைத்துணை வேண்டாதே வளங்கொழிக்கும் நாடு கடற்கரை நாடு ஒன்றே. "மழை பெய்தால், கடற்கரை, மரம் செடி கொடிகள் தழைத்து மாண்புறும். மானினம் மந்தை மந்தையாக வந்து உலாவும் வயல்கள், முற்றி வளைந்த பெரிய பெரிய கதிர்களைக் கொண்ட நெற்பயிரால் நிறைந்து நலம் நல்கும். அவ்வளம் உண்டு வாழும் நாங்கள், மழை பெய்யாது பொய்த்துப் போவது கண்டு கலங்கிக் கண்ணீர் விடுவதில்லை. அக்காலத்தில், முள்ளிச் செடியின் உதிர்ந்தமலர்கள் படிந்துகிடக்கும் கழிகளில், கரிய சேறு காய்ந்து போக, அங்கெல்லாம் வெண்ணிற உப்பு தானே விளையும். விளையும் அவ்வுப்பை விற்று, உணவும் உடையும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்வேம். இவ்வகையால் மழை பெய்யினும், அது பொய்யாது பொய்ப்பினும் அழியாது வாழும் எம் கடலகத்து ஊர்கள் ஆற்றவும் நன்று" எனத் தான் பிறந்த ஊரின் பெருமை பாராட்டுகிருள் ஒரு நெய்தல் நில நங்கை.

"பெயினே விடுமான் உழையினம் வெறுப்பத் தோன்றி
இருங்கதிர் நெல்லின் யாணர்அஃதே ;
வறப்பின், மாநீர் முண்டகம் தாஅய்ச் சேறு புலர்ந்து
இருங்கழிச் செறுவின் வெள்உப்பு விளையும்;
அழியா மரபின் நம்மூதூர் நன்றே."1

"நாற்புறமும் வரப்புக்கள் நன்கு அமைந்த உப்புப் பாத்திகளில் கடல்நீரைப் பாய்ச்சி, வெய்யிலின் வெப்பத்

1. நற்றிணை : 311. உலோச்சனர்.

விடுமான்-உலாவும் மான். உழை-மான். வெறுப்ப-கூட்டமாக. இருங்கதிர்-பெரிய கதிர். யாணர்-புது வருவாய். செறுவில்-வயலில். வறப்பின்-மழை இன்றி வறண்டால்.

தால் வற்றச் செய்து, உப்பு விளைத்து வாழும் வாழ்க்கை உடையேம் ஆதலின், வானம் வழங்கவேண்டும் என அதன் வரவினை எதிர் நோக்கி வாழவேண்டா வளம் வாய்ந்த கடற்கரைக் கண்ணது எம் ஊர் " எனத் தன் கடற்படு செல்வத்தை வாழ்த்தினுள் மற்றொரு பெண்.

" நேர்கண் சிறுதடி நீரின் மாற்றி
வானம் வேண்டா உழவின் எம்
கானலம் சிறுகுடி.''1

நெய்தல் நிலம், கடல்விளை யமுதமாகிய உப்பு, முத்து, மீன் இவற்றால் மட்டும் வளமுடையதாகி விடவில்லை. அது, வணிகப்பெருநிலையங்களாய் விளங்கினமையினு லேயே, வளம் சிறந்து விளங்கிற்று. தமிழ் நாட்டு வணிகர், பிற நாடுகளுக்குக் கொண்டு சென்று விற்கக் கொண்டு வந்து குவிக்கும் பொருள்களாலும், பிறநாட்டு வணிகர், தமிழகத்துப் பேரூர்களில் வாணிகம் புரிதல் கருதித் தம் கலங்களில் கொண்டு வந்து குவிக்கும் பொருள்களாலும், அது வளம் பெற்று விளங்கிற்று. நெய்தல் நிலக் கடற்கரை, பல்வேறு பண்டங்களால் நிறைந்து கண்ணிற்கினிய காட்சி நல்கும் சிறப்புடைத்து. கடல் துறைகள், உலகின் பல்வேறு பகுதிகளினின்றும் போந்த சிறியவும் பெரியவுமாய கலங்களால் நிறைந்து கவினுறத் தோன்றும்; அக்காட்சிகளைக் கண்டு மகிழ்ந்த புலவர்கள், "காற்று இயக்க இயங்கிக் கடலைக் கடந்து வந்த சிறந்த பல வேலைப்பாடு மிகுந்த நாவாய்கள் நிற்கும் துறை என்றும், கலங்கள் கொண்டு வந்து இறக்கிய பல திறப்பட்ட பண்டங்கள் குவிந்து பரந்த துறை " என்றும் பாராட்டியுள்ளார்கள்.

1. நற்றிணை : 254. உலோச்சனுர்.

நேர்கண்-பண்பட்ட இடமாகிய. சிறுதடி-சிறிய வயலில். நீர்-கடல்நீர். கானலம் சிறுகுடி-கடற்கரைச் சோலை சூழ்ந்த எம் ஊர்.

"வேறுபல் நாட்டின் கால்தர வந்த
பலவினை நாவாய் தோன்றும் பெருந்துறை."[1]

"வேறுபல் நாட்டின் கால்தர வந்த
பலவுறு பண்ணியம் இழிதரும் நிலவு மணல்,"[2]

**வண்டற்பாவை :**

வெண்மணல் பால்போல் பரந்திருக்கும் கடற்கரை; கடலை அடுத்து கவின்மிக்க ஒரு சிற்றூர்; கண்டல் மரங்கள் வேலிபோல் சூழ்ந்து வளர்ந்திருக்கும் அச் சிற்றூர், செல்வச் செழிப்புடையது; சிற்றூரைச் சேர்ந்த சிறுமியர் விலையுயர்ந்த அணிகள் பல அணிந்து ஆடச் செல்வர். கடற்கரையில் புலிநகக் கொன்றைமரத்தின் நிழல் பரந்த இடமே அவர்கள் ஆடிடம்; சின்னஞ்சிறு பூக்களையுடையது அப் புலிநகக் கொன்றை; மலர் சிறிதே யாயினும் அது பெற்றிருக்கும் தேனோ பெரிது; அதன் நிறமோ கண்டார் கண்ணைப் பறிக்கும் பேரொளி வாய்ந்தது. அழகிய அம் மரத்தடியில் ஆடி மகிழும் மகளிர், அங்கே மணல்வீடு கட்டி, அவ்வீட்டின் நடுவே அழகிய மண்பாவை பண்ணி மகிழ்வர். மகளிர் இழைத்த மண்பாவை மீது, அப்புலி நகக்கொன்றை தன் பொன்னிற மகரந்தப் பொடிகளைத் தூவிப் பேரழகு செய்யும். மகரந்தம் படிந்த அம் மண்பாவை, பொன்னிறத் தேமல்களால் பொலிவுற்ற மேனியையுடையாளொரு பெண் போல் தோன்றிப் பேரின்பக் காட்சி நல்கும். அத்தகைய அழகிய காட்சிகளை உடையது அந் நெய்தல் நிலம்.

---

1. நற்றிணை : 295. ஔவையார்.
கால-காற்று. தர-கொண்டு வர. நாவாய்-கப்பல்கள்.

2. நற்றிணை : 31. நக்கீரர்.
பண்ணியம்-பண்டங்கள். பலவுறு-பலவகைப்பட்ட.

'சிறுவீ ஞாழல் தேன்தோய் ஒள்ளிணர்,
நேரிழை மகளிர் வார்மணல் இழைத்த
வண்டல் பாவை வனமுலை முற்றத்து
ஒண்பொறிச் சுணங்கின் ஐதுபடத் தாஅம்
கண்டல் வேலிக் காமர் சிறுகுடி.''1

## நாரை விலக்கிய நண்டு வண்டுப் போர் :

அலை அலைக்கும் கடற்கரை ; அக்கரையில் ஒரு கரு நாவல் மரம்; தொட்டால் ஒடிந்துவிடும் மெல்லிய கிளைகளை யுடையது அம்மரம். அக்கிளையில் காய்த்த கரிய கனி யொன்று காம்பற்றுக் கீழே உதிர்ந்தது. கறுத்துச் சதைப் பற்றுக்கொண்டு பருத்த அக்கனியைக் கண்ட சில கருவண்டிகள், அதைத் தம் இனமாகக் கருதி, அதன் பால் விரைந்து பறந்தன ; அந்நிலையில் அம்மரத்தின் வேரிடையே வாழும் நண்டு ஒன்றும் அக்கனியைக் கண்டு விட்டது ; நாவல்கனியுண்டு பழகிய அது, வண்டுகள் வந்தடைதற்கு முன்னரே, அக்கனியைத், தன் கூரிய கொடுக்குகளால் பற்றிக் கொண்டது ; அதைக் கண்ட வண்டுகள், தம் இனத்து வண்டொன்று நண்டின் கால் களில் சிக்குண்டதாகக் கருதின ; தன் இனம் ஒன்றை இழக்கமனமின்றி வருந்தின. அதனால், அதை விடு விக்கும் வண்ணம் நண்டைச் சூழ்ந்து சூழ்ந்து பறந்தன. அவை எத்தனை கூடிவந்து, எத்தனை நேரம் சூழ்ந்து திரியினும், நண்டு அக்கனியைக் கைவிட்டிலது. அதனால் வண்டுகளின் ஆரவாரம் பெரிதாயிற்று ; 'இம்' என்ற இரைச்சல் எழுந்து விட்டது.

---

1. நற்றிணை : 191. உலோச்சனார்.

வீ-மலர். ஞாழல்-புலிநகக் கொன்றை. தேன்தோய்-தேன் நிறைந்த. ஒள்இணர்-ஒளிவிடும் மலர்க்கொத்து. நேர்இழை-அழகிய அணிகள். வண்டல் பாவை-மண் பொம்மை. சுணங்கின்-தேமல்கள் போல். ஐதுபட-மெல்லிதாகப் படுமாறு. தாஅம்-பரவும்.

இப்போர் நிகழ்ந்துகொண்டிருக்கும்பொழுது, அது நிகழும் இடத்திற்கு அணித்தாக நாரை ஒன்று மீன் தேடித் திரிந்துகொண்டிருந்தது. வண்டுகள் எழுப்பிய ஆரவாரப் பேரொலி நாரையின் கருத்தைக் கவர்ந்தது. ஒலிவந்த திசையை உற்று நோக்கிற்று நாரை ; ஆங்கு நிகழும் நிகழ்ச்சியைக் கண்ட நாரை, ஆங்கு நிகழ்வதை விளங்க அறிந்துகொள்ளும் ஆர்வம் பெருக, அவ்விடம் நோக்கி விரைந்து சென்றது. நாரைவரக் கண்ட வண்டுகள், நண்டைவிடுத்துப் பறந்தோடின ; நண்டும் நாவற்கனியைக் கைவிட்டு, வளைக்குள் ஓடி மறைந்தது. நண்டிற்கும் வண்டிற்கும் நிகழ்ந்த போர், நாரையால் முடிவுற்ற அக்காட்சியைக் கண்டு களித்தார் ஒரு தமிழ் அன்பர்.

" பொங்கு திரை பொருத வார்மணல் அடைகரைப்
புன்கால் நாவல் பொதிப்புற இருங்கனி
கிளைசெத்து மொய்த்த தும்பி, பழம் செத்துப்
பல்கால் அலவன் கொண்ட கோள் கூர்ந்து
கொள்ளா நரம்பின் இமிரும் பூசல்
இரைதேர் நாரை எய்திய விடுக்கும் " 1

## காதல் மிகுந்த கடல் காக்கை :

பேடும் சேவலுமாகப் பிரியாது வாழ்ந்திருந்தன இரு கடற் காக்கைகள் ; பேடு சூலுற்றிருந்தது. சூல், நிரம்பிய தாதலின், அதனால் சிறிது தூரம் பறப்பதும் இயலாதா யிற்று. அதன் நிலை கண்டு வருந்திய காக்கைச் சேவல்,

---

1. நற்றிணை : 35. அம்மூவனார்.

பொருத-மோதிய. புன்கால்-மெல்லிய காம்பு. பொதிப்புற இருங் கனி-சதைப்பற்று மிகுந்த கரிய பழம். கிளை செத்து-இனமாகக் கருதி. பழம் செத்து-பழமாகக் கருதி. கோள் கூர்ந்து-விலக்கி. நரம்பின் இமிரும்-யாழோசை போல் ஒலி எழுப்பும். பூசல்-ஆரவாரப்போர்.

காலையில் கடற்கரைக்கு வந்து, கடலில் நீராடி நோன்பு நோற்கும் மகளிர், கரையில் படர்ந்திருக்கும் அடும்பங் கொடிகளை இடையிடையே விலக்கி, இருந்து, வழிபாடாற்றி விட்டுச்சென்ற வெற்றிடங்கள் ஒன்றில், பறந்து இரைதேடமாட்டாத் தன்பேட்டினை விடுத்து, இரை தேடிச் சென்றது. கழியின் கரிய சேற்றில் வளரும் அயிரை மீனைச் சூலுற்ற பேடு பெரிதும் விரும்பி உண்ணும். தன்பேட்டினுக்கு, அது விரும்பும் உணவளிக்க ஆசைப்பட்ட காக்கைச் சேவல், தெளிந்த நீர் தேங்கிக் கிடக்கும் அக்கழியின் ஆழமான இடத்தே சென்று, ஆங்குப் படிந்திருக்கும் மலர்களை அகற்றிவிட்டுத் தன் காலாலும் அலகாலும் துழாவித் துழாவி அயிரை மீனைத் தேடி அலையும். அக்காட்சியை அகம் குளிரக் கண்டு மகிழ்ந்தார் ஒரு புலவர்.

“ கடலம் காக்கைச் செவ்வாய்ச் சேவல்
படிவ மகளிர் கொடி கொய்து அழித்த
பொம்மல் அடும்பின் வெண்மணல் ஒரு சிறைக்
கடுஞ்சூல் வதிந்த காமர் பேடைக்கு
இருஞ் சேற்று அயிரை தேரிய தெண்கழிப்
பூவுடைக் குட்டம் துழவும்.” 1

பரந்த கடல்; கன்னங்கரேல் எனக் கறுத்து நிறைந்த நீர்; அக்கடலை அடுத்திருந்த ஒரு கழி; பரந்திருந்த அக் கழியில் குளிர்ந்து தெளிந்து தேங்கிக் கிடக்கும் நீர்; அக் கடல் நீருள் புகுந்து இரைதேட எண்ணிய ஒரு காக்கைச் சேவல், இரைகாணுமளவு கடல் நீர் தெரியாமை கண்டு, கழி நீர் நோக்கிப் பறந்ததையும், கழி அடைந்து அந் நீரை

1. நற்றிணை : 272. முக்கல் ஆசான் நல்வெள்ளையார்.

படிவமகளிர் - நோன்பு நோற்கும் மகளிர். பொம்மல் - அடர்ந்து வளர்ந்த. கடுஞ்சூல்-நிறைந்த சூல். காமர்-தான் விரும்பும். இரும்-கரிய. தேரிய-தேடுதற் பொருட்டு. குட்டம்-ஆழமான இடம்.

நீண்ட நேரம் துழாவித் துழாவித் திரிந்ததையும், இறுதியில் தன் அலகில், செந்நிற இருல் மீன் அகப்பட அகம் மகிழ்ந்து, கரை கண் இருக்கும் தன் காதற் பேட்டினைக் கூவியவாறே அதன்பால் பறந்து வந்து, வருந்தித்தான்பெற்ற இருல்மீன்உணவை, அதன் வாயில் இட்டு மகிழ்ந்ததையும் கண்குளிரக் கண்டு மகிழ்ந்தார் மற்றொரு புலவர்.

> " மாஇரும் பரப்பகம் துணிய நோக்கிச்
> சேய்இரு எறிந்த சிறுவெண் காக்கை
> பாய்இரும் பனிக்கழி துழைஇப் பைங்கால்
> தான் வீழ் பெடைக்குப் பயிரிடூஉச் சுரக்கும்." 2

**நாரைக் கூட்டம் :**

நீர் நிலைகளை அடுத்து வாழும் பறவை இனங்களில், பெரியது நாரை இனம் ; நீண்ட காலும், பருத்த உடலும், வெண்ணிறத் தூவியும் பெற்றது நாரை. நீர் நிலைக்கண் கூட்டங் கூட்டமாய்க் கூடிவாழும் இயல்புடையன நாரைகள். நீர் நிலை இருக்கும் இடமெங்கும், நாரைகள் காணப்படும் என்றாலும், கடற்கரைக்கண் அவை காணப் படும் காட்சி மிகவும் அழகுடையதாம்.

கடல் கொந்தளித்துப் பொங்கி எழும் பொழுது, கழியுள் ஏறும் கடல் நீர், கொந்தளிப்பு அடங்கியதும் மீண்டும் கடலுள் புகுந்து விடும். புகுந்த கடல் நீர், மீண்டு போய்விடின், கழி சேறாக மாறிக் காட்சியளிக்கும் ; கழிநீரில் நீந்திவாழும் மீனினங்கள், நீர் அற்றுப் போயின் சேற்றில் சிக்கிச் செயலற்றுப் போகும். அம்மீன்களைத்

---

2. நற்றிணை : 31. நக்கீரர்.

மா - பெரிய. துணிய - தெளிய. எறிந்த - பற்றிய. வீழ்-விரும்பும். பயிரிடூஉ-கூவி அழைத்து. சுரக்கும்-ஊட்டும்.

தேடித்தின்று உயிர் வாழும் நாரைகள். அத்தகைய நிலை, நாரைகள் நினைத்தவுடனே நேர்ந்து விடுவதில்லை. அந்நிலையை எதிர் நோக்கி, நாரைகள், கழிநீரின் கரைக்கண் உள்ள மணல் மேட்டில் கூட்டம் கூட்டமாய்க் காத்துக் கிடக்கும். வெண்ணிறத் தூவிவிளங்க, வரிசை வரிசையாய் வீற்றிருக்கும் நாரைகளின் அத்தோற்றம், அரசர்களின் படைகள், கையில் ஏந்திய படைக்கலங்கள் ஒளிவிட, கடற்கரைக்கண் பாடிகொண்டிருக்கும் காட்சியை நினைப்பூட்டிக் கழி பேரின்பம் தரும்.

> "நீர்பெயர்ந்து மாறிய செறிசேற்றுஅள்ளல்
> நெய்த்தலைக் கொழுமீன் அருந்த, இனக்குருகு
> குப்பை வெண்மணல் ஏறி, அரைசர்
> ஒண்படைத் தொகுதியின் இலங்கித் தோன்றும்."

**நாரைக் காதல் :**

கடற் கரையை அடுத்த ஒரு சிற்றூர் ; உப்பிட்டு உலர்த்திக் கிடக்கும் மீனின்முடை நாற்றம் மூக்கைத் துளைக்கும் அவ்வூரின் நடுவே ஒரு பனைமரம். அடிக்கும் கடற் காற்றிற் கேற்றவாறு அசைந்து கொடுக்கும் அப் பனைமரத்து மடலில் கூடு கட்டி வாழ்ந்தன சேவலும் பேடுமாகிய இரு நாரைகள். ஒருநாள், பேடு கூட்டில் தனித்திருக்க, சேவல் இரைதேடி வெளியே சென்றது. கடலையொட்டி ஓடிய கழிநீரைத் துழாவித் துழாவி, மீன்களைப் பிடித்து வயிறார உண்டு மகிழ்ந்தது. மாலை வந்தது. பேட்டின் நினைவு வரவே, கூட்டை நோக்கி

1. நற்றிணை : 291. கபிலர்.

செறி சேறு-மிக்க சேறு. அள்ளல்-சேறு. நெய்த்தலை-தலையில் நெய்ப்பசை மிக்க. கொழுமீன்-கொழுத்த மீன். குருகு-நாரை. குப்பை வெண்மணல்-குவியல் குவியலான மணல் மேடுகள். ஒண் படை-ஒளி விடும் படை. இலங்கி-விளங்கி.

விரைந்து பறந்து சென்றது. ஆனால், அந்தோ!......... அங்குத் தன் பேட்டினை கண்டிலது! துணையைக் காணாமையால் துணுக்குற்றது அதன் உள்ளம். உரத்த குரலில் அழைத்தது பேட்டினை. ஆனால் எவ்வளவு நேரம் அழைத்தும் பேடு வந்திலது. சேவல் நாரையின் துயர் பெரிதாயிற்று. உயிரே போய்விட்டது போலாகி விட்டது அதன் நிலை. சிறிது ஓய்ந்திருந்தது. மீண்டும் குரலெடுத்துக் கூவி அழைத்தது. ஊராரெல்லாம் உறங்கி விட்டனர். அப்பொழுதும் அது ஓய்ந்திலது. கூவிக்கூவி அழைத்துக் கொண்டே இருந்தது தன் அன்புப் பேட்டினை. அதன் குரலில்தான் எத்தனை வேதனை! எவ்வளவு ஏக்கம்! என்னே அதன் காதல்!

"வியல் இரும் பரப்பின் இரை எழுந்து அருந்துபு
புலவுநாறு சிறுகுடி மன்றத்து ஓங்கிய
ஆடு அரைப் பெண்ணைத் தோடுமடல் ஏறிக்
கொடுவாய்ப் பேடைக் குடம்பைச் சேரிய
உயிர்செலக் கடைஇப் புணர்துணைப்
பயிர்தல் ஆனா பைதலம் குருகே." 1

ஒரு பெண் நாரை, அழகிய சேவல் நாரையொன்றைக் கண்டு காதல் கொண்டது. தூய வெண்ணிறத் தோகை உடையது அச்சேவல். மூங்கிலின் உட்புறத்தே படிந்தி ருக்கும் மெல்லிய வெண்ணிறத் தோலை உரித்து ஒன்று கலந்து வைத்தது போன்ற மென்மை வாய்ந்தது அத்

---

1. நற்றிணை: 338. மதுரை ஆருலவிய நாட்டு ஆலம்பேரி சாத்தனார்.

வியல் - அகன்ற. இரும் - கரிய. பரப்பு - கழிப்பரப்பு. அருந்துபு- அருந்தி. புலவு-மீன் முடை. மன்றம்-ஊர்ப்பொதுவிடம். அரை-அடிமரம் பெண்ணை - பனைமரம். குடம்பை - கூடு. சேரிய - சேருதற்பொருட்டு. கடைஇ-வருந்தி. பயிர்த்தல்-அழைத்தல். ஆனா-ஓயாத. பைதல்-துயரம் மிக்க.

தோகை. தன் தோகையின் அழகில் மயங்கிவிட்ட அப்பேட்டினைச் சேவலும் காதலித்தது. அதன்பால் இன்பமும் நுகர்ந்தது. அவ்வின்ப உணர்வால், பேடு தன்னை மறந்திருக்கும்பொழுது, நன்றிகெட்ட அந்நாரைச் சேவல் அதை விடுத்து ஓடிவிட்டது. பேடு உணர்வு வந்து நோக்கியபொழுது சேவலைக் காணாமையால் கலக்கம் கொண்டது. இன்பம் தந்த சேவலை இழந்து விட்ட வருத்தம் ஒருபால், அதுகாறும் இழக்காதிருந்த தன் கற்பை இழந்து விட்ட வருத்தம் ஒருபால் என வருத்த மேல் வருத்தமாய் வந்து வாட்டின. அவ்வருத்த மிகுதியால் உணவுண்ணும் நினைப்பையும் இழந்துவிட்டது. கழிக்குச் சென்று மீன் தேடி உண்பதை விடுத்தது. ஆங்குத் தழைத்து வளர்ந்திருந்த தாழை மரத்தின் கிளையொன்றில், வருந்தி உள்ளம் சோர்ந்து, வாடிக் கிடந்தது.

"ஆடுஅமை ஆக்கம் ஐது பிசைந்தன்ன
தோடுஅமை தூவித் தடந்தாள் நாரை
நலன் உணப்பட்ட நல்கூர் பேடை
கழிபெயர் மருங்கில் சிறுமீன் உண்ணாது
கைதையப் படுசினைம் புலம்பொடு வதியும்." 1

பேடும் சேவலுமாக இரு நாரைகள் வாழ்ந்திருந்தன. அவற்றின் காதல் வாழ்க்கை இனிதே கழிந்து கொண்டிருந்தது. அந்நிலையில் பேடு சூலுற்றது. சூலும் வளர்ந்தது. பேட்டினால் பறப்பதும் இயலாதாயிற்று. அதனால், அது இரைதேடிச் செல்வதை விடுத்தது. கடற்கரைச் சோலைவரை செல்வதற்கும் அதனால் இயல

1. நற்றிணை : 178.

ஆடு அமை – அசையும் மூங்கில். ஆக்கம் – உள்ளே உள்ள வெண்ணிறத் தோல். ஐது–மெல்லிதாக. தோடு–இறகு. தூவி–தோகை. நல்கூர்–இன்பம் இழந்த – கற்பை இழந்த. கைதை–தாழையின். அம்–அழகிய. படுசினை–பெரிய கிளை. புலம்பு–துன்பம்.

வில்லை. கடலுக்கு வெகு தொலைவில் உள்ள வயல்களிலேயே அது தங்கிவிட்டது. பேடு சூலுற்றது கண்டு மகிழ்ந்த சேவல், சூலுற்றமையால் அது படும் துன்பம் கண்டு வருந்திற்று. தன்பேடு, கடல்மீனை விரும்பி உண்ணும்; அதிலும், அது சூலுற்ற காலத்தில், கடல் மீன் ஆசை அதற்கு அதிகமாம் என உணர்ந்தது. கடற்கரையை அடைந்தது. அரும்பாடுபட்டுக் கடல்மீன் ஒன்றைக் கைப்பற்றியது. கைப்பற்றிய மீனைத் தான் உண்ணக் கருதாது பேடுக்கு ஊட்ட விரும்பிய அது, பேடு இருக்கும் கழனியை நோக்கி விரைந்து பறந்தது.

இரைவேட்டுக்
கடுஞ்சூல் வயவொடு கானல் எய்தாது
கழனி ஒழிந்த கொடுவாய்ப் பேடைக்கு
முடம்முதிர் நாரை கடல்மீன் ஒய்யும்."[1]

**நாரையின் தாய்மை உணர்ச்சி :**

கடல்நீர் உள்ளே புகுந்துவிடாவாறு இடை நின்று தடுக்கும் உயர்ந்த கரை; "ஓ"வெனும் ஒலி ஓயாது எழுப்பும் அலைகள்; தண்ணெனக் குளிர்ந்த நீர்; இத்தனைச் சிறப்பும் வாய்ந்த கடற்கரையில் ஒரு புன்னைமரம். பூத்து மணம் கமழும் அப்புன்னையின் உச்சியில் கூடுகட்டி வாழ்ந்திருந்தன இரு நாரைகள். பேடும் சேவலுமாகிய அவற்றின் காதல் வாழ்வின் பரிசாய் வந்து பிறந்தது ஓர் இளம் பார்ப்பு. உணவு தேடிச் செல்லுங்கால், ஒன்றை விட்டு ஒன்று போகாது உடன்கூடிச் செல்லும் இயல்பினவாய அந் நாரைகள், கடல்நீருள் புகுந்து மீன்

1. நற்றிணை : 263. இளவெயினனார்.

வேட்டு-விரும்பி. கடுஞ்சூல்-நிறைந்த கரு. வயவு-கருவுற்ற காலத்து மகளிர்க்கு உண்டாம் வருத்தம். ஒய்யும்-கொண்டு போய்க் கொடுக்கும்.

தேடி உண்ணும். அவை மீன் தேடிச் சென்றிருப்புழி, கூட்டில் இருக்கும் குஞ்சு, தன் தாயை நினைந்து ஓயாது அழைக்கும். பிள்ளையின் அழைப்புக் குரல் கேட்டு ஆர்வம் கொள்ளும் அந்நாரைகள், இரை தேடுங்கால், சிவந்த கண்ணும், சின்னஞ்சிறு உடலும் வாய்ந்த பொடிமீன் அகப்படின், அம்மீனை, உடனே எடுத்தோடிச் சென்று, ஓயாது அழைக்கும் அக்குஞ்சின் வாயில் இட்டு மகிழும்,

"புன்னை பூத்த இன்நிழல் உயர்கரைப்
பாடுஇமிழ் பனிக்கடல் துழைஇப் பெடையோடு
உடங்கு இரைதேரும் தடந்தாள் நாரை
ஐய சிறுகண் செங்கடைச் சிறுமீன்
மேக்குஉயர் சினையின் மீமிசைக் குடம்பைத்
தாய்ப்பயிர் பிள்ளை வாய்ப்படச் சொரியும்,"1

## மலர் கண்டு மருளும் மீன் :

கடல்நீர் பாயும் உப்புப் பாத்தியில் வாழ்ந்திருந்தது ஓர் இருல் மீன். வளைந்த முதுகும், அகன்ற வாயும் உடைய அம்மீனை, அப் பாத்தியை அடுத்து ஓடிய கழியில் மீன்தேடித் திரிந்திருந்த நாரை ஒன்று பார்த்துவிட்டது. உடனே அம்மீனைப் பாய்ந்து குத்திற்று; ஆனால், மீன், அதன் குத்திற்குத் தப்பிவிட்டது பிழைத்த மீன், உப்புப் பாத்தியிலே இருப்பின் ஏதமாம் என எண்ணிக் கடல் நீருட்புகுந்து மறைந்தது. கடல் நீருட்புகுந்த அது, பெரு நீரில் நெடிது வாழமாட்டாமையால் கரை நோக்கி வந்தது. கரையில், அலை கொண்டுவந்து குவித்த மணல் மேட்டில், பேய்போல் தலைவிரித்துத் தாழ்ந்த மடல்களையுடைய

---

1. நற்றிணை : 91. பிசிராந்தையார்.

பாடு-அலைஓசை. இமிழ்-ஓயாது ஒலிக்கும். பனிக்கடல்-குளிர்ந்த கடல். உடங்கு-ஒன்றுகூடி. தேரும்-தேடும். ஐய-மெல்லிய. மேக்கு உயர்-மேலே உயர்ந்த. மீமிசை-மேலே. குடம்பை-கூடு. பயிர்-அழைக்கும்.

தாழைமரம் ஒன்று தழைத்திருந்தது. அத் தழையின் கிளையொன்று கடல்நீரில் படுமாறு தாழ்ந்திருந்தது. தாழ்ந்திருந்த அக்கிளையில் இதழ்விரியாது மலர்ந்திருந்தது ஒரு வெண்தாழைமலர். அம்மலர், மீனின் கண்ணிற் பட்டுவிட்டது. நிறத்தாலும் உருவாலும் நாரை போல் தோன்றிற்று. அம்மலர் நாரையின் குத்துக்குப் பிழைத்து வந்த அம்மீன், அம்மலரை நாரை என்றே எண்ணிவிட்டது, அதனால், அம்மலருக்கு அஞ்சி அவ்விடம் விட்டு ஓடி ஒளிந்துகொண்டது.

' ஓதம் சென்ற உப்புடைச் செறுவில்
கொடுங்கழி மருங்கின் இரைவேட் டெழுந்த
கருங்கால் குருகின் கோள் உய்ந்து போகிய
முடங்கு புற இறவின் மோவாய் ஏற்றை
எறிதிரை தொகுத்த எக்கர் நெடுங் கோட்டுத்
துறுகடல் தலைய தோடுபொதி தாழை
வண்டுபடு வான்போது வெருஉம்.''1

**பரதவர் வாழ்க்கை :**

மக்கள் வாழ்க்கை, சூழ்நிலைக்கு ஏற்ப அமையும் என்பது, உலகியல் உணர்த்தும் உண்மை; அவர் உணவு, உடை, உறையுள் ஆகியனவும், அச் சூழ்நிலைக்கு ஏற்பவே அமையும். கடற்பகுதியில் வாழும் மக்கள், தம் வாழ்க்கைக்கு அக்கடலின் துணையையே பெரிதும் எதிர்நோக்கி வாழ்வர். தமிழ்நாட்டுக் கடற்கரைகளில் வாழ்ந்த

1. நற்றிணை : 211. கோட்டியூர் நல்லந்தையார்.

ஓதம்-கடல்நீர். செறு-பாத்தி. கொடுங்கழி-வளைந்து வளைந்து செல்லும் உப்பங்கழி. கோள்-குத்து. உய்ந்துபோகிய-பிழைத்து ஓடிய. முடங்கு புறம்-வளைந்த முதுகு. மோவாய்-பெரிய வாய். எக்கர்-மணல்மேடு. நெடுங்கோடு-நீண்ட கடற்கரை. துறுகடல் தலை-நெருங்கிய கடற்கரைக்கண் உள்ள. தோடு-இதழ். பொதி-மூடியிருக்கும். போது-அரும்பு. வெருஉம்-மருளும்.

தமிழர்கள், கடலில் கலம் செலுத்தவும், கடலின் இயல் பறிந்து கடல்மேல் சென்று மீன் பிடித்து வாழவும் வல்லராய் வாழ்ந்தனர். தமிழகத்து மலைக்காடுகளில் வாழ்ந்தாரைக் குறவர் என்றும், குறுங்காடுகளில் வாழ்ந்தாரை ஆயர் என்றும், வயல்வெளிகளில் வாழ்ந்தாரை உழவர் என்றும் பெயரிட்டு அழைத்த அக் காலத்தார், கடற்கரைவாழ் மக்களைப் பரதவர் எனும் பெயரிட்டு அழைத்தனர். பரதவர் மேற்கொண்டு வாழ்ந்த மீன் பிடித்தல் தொழில், உறுதியும் ஊக்கமும், உள்ளத் தெளிவும் ஒருங்கே உடையார் மட்டுமே மேற்கொள்ளத் தக்க பெருந் தொழிலாகும். அத் தொழிலில் கரைகண்டு சிறப்புற்றிருந்தனர் சங்ககாலத் தமிழ்ப் பரதவர்.

**பருவம் நோக்கும் பரதவன் :**

கடற்கரையை அடுத்திருந்த ஒரு சோலையின் இடையிடையே சிறுசிறு வீடு கட்டி வாழ்ந்திருந்தனர் சில பரதவர். அப்பரதவர் கலம் செலுத்தியோ, முத்துக் குளித்தோ, உப்புக் காய்ச்சியோ வாழ்பவரல்லர்; மீன் பிடித்து வாழ்தலை வாழ்வின் தொழிலாக மேற்கொண்டவர். மீன் பிடித்தல் தொழில், நினைத்தபோதெல்லாம் மேற்கொள்ளும் தொழிலன்று. கடல்மேற் சென்று மீளுதற்கேற்ற பருவம் வாய்த்த விடத்து மட்டுமே மேற்கொள்ளலாகும் தொழில் அது. அதனால், அச்சிறு குடி வாழும் பரதவர், பொழுது புலர்ந்ததும், தம் வலைகளை வாரி எடுத்துக்கொண்டு கடற்கரைக்குச் செல்வர். ஆங்கு புன்னைமரங்களின் நிழலில் அமர்ந்து, கடலை நோக்குவர். கடல் கொந்தளித்தலோ, காற்றுச் சுழன்றடித்தலோ இன்றிக், கடல் அமைதியடையும் அந்நிலையை எதிர் நோக்கி யிருப்பர். அவ்வாறு காத்திருக்கும் அவர்கள், அச்சிறு பொழுதிலும் வாளா இராது, மீன் வலைகள்

நனைந்தது நனைந்தவாறே யிருப்பின், விரைவில் பழுது படும் ஆதலின், முன்னுள்பட்ட ஈரம்போக, அவற்றை உலர்த்தும் பணி மேற்கொண்டிருப்பர்.

> "கானல் அம் சிறுகுடிக் கடல்மேம் பரதவர்
> நீல்நிறப் புன்னைக் கொழுநிழல் அசைஇத்
> தண்பெரும் பரப்பின் ஒண்பதம் நோக்கி.
> அங்கண் அரில்வலை உணக்கும் துறை."1

**உழைத்து உருக்குலைந்த தோணி :**

காற்று அடங்கி, கடல் கொந்தளிப்பு அற்று நல்ல சூழ்நிலை வாய்த்தவுடனே, பரதவர் கடல்மேல் செல்லு தற்கு விரைவர்; கடல் அலைகளின் தாக்குதலைத் தாங்க வல்ல தோணியைத் தேர்ந்தெடுப்பர். தோணிக்குச் சந்தனம் முதலாம் நல்ல நறுமணப் பொருள்களைப் பூசுவர்; பொட்டிடுவர்; பூச்சூட்டுவர்; அகில் ஆரம் முதலாம் பொருள்களையிட்டு எழுப்பும் புகைகாட்டி வழி படுவர். அவ்வழிபாடு முடிந்த பின்னரே, அவர்கள் தோணி ஏறிக் கடல்மேற் செல்வர்.

தோணி, பல்லாண்டு உழைத்து, அலைகளால் அலைப் புண்டு முரிந்து பழுதாகிப் பயனற்றுப் போய்விடின், பரதவர் அதை மீண்டும் பயன்படுத்தார். ஆனல், பயனற்றுப்போன அதை அழிக்கவும் அவர் உள்ளம் ஒப்புவதில்லை. பல்லாண்டு உழைத்தது; தம் வாழ்வை வளர்த்தது; தம் உயிரைப் பேணியது; அதனல் வினை

1. நற்றிணை : 4. அம்மூவனர்.

கானல்-கடற்கரைச் சோலை. அம்-அழகிய. கடல்மேம் பரதவர்-கடல்மேல் சென்று வாழும் பரதவர். நீல்-நீலம். அசைஇ-தங்கியிருந்து. தண்பெரும் பரப்பு-குளிர்ந்தநீர் நிலையாய கடல். ஒண்பதம்-செல்லத்தக்க நல்ல பருவம். அங்கண்-அவ்விடத்தில். அரில்வலை-முறுக்குண்ட வலைகளை. உணக்கும்-காயவைக்கும்.

மேற் செல்லுங்கால், அதற்கு ஆற்றிய வழிபாட்டை மட்டும் நிறுத்திவிட்டு, அதை, புன்னையும் புலிநகக் கொன்றையும் வளர்ந்து நிழல் செய்யும் அக்கடற் றுறையில், புன்னைமரத்தின் வேரில் பிணித்து வாளா விடுத்து வைப்பர். தொழிலுக்குத் துணைபுரியும் உயிர்கள், உற்ற கருவிகள் ஆகியவற்றைக் கடவுள்களாக மதித்துச் சிறப்புச் செய்யும் செந்தமிழ்நாட்டுப் பரதவர் பண்பு பாராட்டற்குரியதாமன்றோ!

" ஈண்டுபெரும் தெய்வத்து யாண்டுபல கழிந்தெனப்
பார்த்துறைப் புணரி அலைத்தலின் புடைகொண்டு
மூத்து வினைபோகிய முரிவாய் அம்பி
.........................................
நறுவிரை, நன்புகை கொடாஅர், சிறுவீ
ஞாழலொடு கெழிஇய புன்னையம் கொழுநிழல்
முழவுமுதல் பிணிக்கும்."1

**வலை ஏற்றிய தோணி:**

பொட்டிட்டு, பூச்சூட்டி, புகைகாட்டித் தோணியை வழிபட்ட பரதவர், மீன்களை வலிந்து அகப்படுக்கவல்ல பெரிய வலைகளை அத்தோணியில் ஏற்றுவர். கடல் மீன்களுள் எறிவேல் ஏறுண்டும் பிழைத்து ஓடவல்ல சுறு போலும் பெரிய பெரிய மீன்கள் உளவாதலின், கடலில் வீசும் வலை அவற்றால் அழிவுறாது, அவற்றையும் அகப் படுத்தவல்ல வன்மையுடையதாதல் வேண்டும். பரதவர் இதை அறிவர். அதனால் கடல்மீன் பிடிக்கப் பயன்

1. நற்றிணை : 315. அம்மூவனார்.

ஈண்டு-மிக்க. தெய்வத்துயாண்டு-தெய்வம் எனப் பெயர் கொண்ட ஆண்டு. புணரி-அலை. புடைகொண்டு-மோதுண்டு. மூத்து-முதிர்ந்து. வினை போகிய - தொழில் அற்றுப்போன. முரிவாய் - முரிந்தவாய். அம்பி-தோணி. விரை-மணப்பொருள். வீ-மலர். ஞாழல்-புலிநகக் கொன்றை. கெழிஇய-பொருந்திய. முழவுமுதல்-முழவு போல் பருத்த அடிமரம்.

படுத்தும் பெரிய வலைகளை, கையால் திரிக்காது, பெரிய கதிர்களின் துணைகொண்டு திரித்த கயிற்றால் பின்னுவர். பின்னுங்கால் இடும் முடிகளையும், எளிதில் அவிழ்ந்து போகாவாறு இறுக முடிவர். அவ்வாறு விழிப்பாயிருந்து, வன்மை வாய்ந்ததாகப் பின்னிய வலையும் ஓரோவழி, கிழிந்து பாழாகிவிடும். எடுத்துச் சென்ற வலை பாழாகிவிடின், பரதவர் வறிதே மீளவேண்டியவராவர். அவர்கள் அத்தனை உழைப்பும் பாழாம். ஆதலின் ஒன்று பாழாயின், அந்நிலையில் உதவவேண்டி, ஒன்றிற்கு மேற்பட்ட வலைகளை உடன்கொண்டு செல்வர். வலை ஏற்றிச் செல்லும் தோணியை, இடிபோல் ஒலித்து, மலை போல் எழுந்துவிழும் அலைகள் அலைக்கழிக்காவாறு, பரதவர் முன்னும் பின்னும், மேலும், கீழும் இருந்து, துடுப்பின் துணைகொண்டு செலுத்திச் செல்வர். அக்காட்சி, தம் மிக்க யானையைப் பாகர், நாற்புறமும், நின்றும், மேலேறி ஊர்ந்தும் அடக்கி நடத்திச் செல்லும் காட்சியை நினைப்பூட்டிப், பரதவர் வாழ்வின் கடுமையைக் கண்ணெதிரில் காட்டும்.

> "வடிக்கதிர் திரித்த வன்ஞாண் பெருவலை
> இடிக்குரல் புணரிப் பௌவத்து இடுமார்
> நிறையப் பெய்த அம்பி காழோர்
> சிறை யரும் களிற்றின் பரதவர் ஒய்யும்." 1

**மீன் பிடிக்காது மீளார் :**

கடலின் அமைதியையும், காற்றின் அடக்கத்தையும் நோக்கியிருந்து, கடவுளை வழிபட்டுக் கட்டுமரம் ஏறிச்

1. நற்றிணை : 74. உலோச்சனார்.
வடிக்கதிர்-வடித்துச் செய்த கதிர். வன்ஞாண்-வலிய கயிற்றால் பின்னிய. இடிக்குரல்-இடிபோன்ற அலையோசை. புணரி-அலை. பௌவம்-கடல். இடுமார்-இடுதற் பொருட்டு. காழோர்-யானைப் பாகர். சிறையரும்-அடக்குதற்கு அரிய. களிற்றின்-யானையைச் செலுத்துவதுபோல். ஒய்யும்-செலுத்தும்.

செல்லும் பரதவர், சென்ற வினையைக் குறைவற முடித் தல்லது மீளார். ஆனால், சென்ற இடத்தில், வினையில் வெற்றி பெறுதல் அத்துணை எளிதில் வாய்த்து விடுவ தில்லை. அவர்கள் வீசிய வலையுள், மீன்கள் அகப்படாது போதலும் உண்டு. அகப்படினும், அகப்படும் மீன், அவ் வலையை அழித்துவிட்டுத் தப்பிப் பிழைத்தலும் உண்டு. அதனால் அவர்கள் ஏமாற்றம் உறுதலும் நிகழும். ஆனால் நாம் அறிந்த பரதவர், அவ்வளவு ஏமாளிகள் அல்லர்; ஆற்றல் மிக்க அவர்கள், அத்தொழிலில் பல்லாண்டு பழகிய அவர்கள், கடலில் மீன்படும் இடங்களை அறிந்தே வலை வீசுவர்; வலையுள் சிக்கிய மீன், எவ்வளவு பெரிய தாயினும், அதைத் தப்பவிடார். ஒருமுறை பிழைத்துப் போகவிடினும், மறுவிசை முயன்று, அதைப் பிடித்தே மீள்வர். பரதவரின் இப் பண்பாட்டினை அறிந்த பெண்கள் இருவர், மீன் வேட்டையின் அருமையினையும், அவ் வேட்டையில்வல்ல பரதவர் ஆற்றலையும் எடுத்துக் கூறியுள்ளனர்.

"கடல் நீரும் தெளிந்திருந்தது; நீருள் உலாவும் மீன்களும் நன்கு புலப்பட்டன; மீன் பிடிக்கச் சென்ற பரதவரும் ஆற்றல் மிக்கவரே; வலைகளை வலித்து வலித்து வன்மையுற்ற கைகள் அவர் கைகள்; அவர் எடுத்துச் சென்ற வலையும் உறுதி வாய்ந்ததே; வலிந்து இட்ட முடிகளால் ஆனது அவ்வலை. வலை வீசிய அவர்கள் மீன் வழங்கா வெற்றிடத்தே வீசினரல்லர்; அவை வழங்கும் இடம் அறிந்தே வீசினர்; அவர் வலையுள் மீன்களுள் மிகப் பெரிய சுறு மீனே வந்து அகப்பட்டது; ஆனால் அகப்பட்ட சுறு ஆற்றல் மிகுந்தது; அளவிற் பெரியது. கண்ணிற்பட்ட, உயிர்களைக் குத்திக் கொல்லவல்ல கொம்புகளை உடையது; மேலும் கோபம் மிக்கது. அதனால் அது, தன்னை அகப்படுத்திய அவ்வலையைத்

தூள் தூளாகக் கிழித்துவிட்டு வெளியேறித் தப்பிவிட்டது. பரதவர் என்ன செய்வர்? பாவம்!" எனக் கூறி மீன் பிடிக்கும் தொழிலின் கொடுமையினை எடுத்துக் காட்டினுள் ஒருத்தி.

" தெண்கடல்
வன்கைப் பரதவர் இட்ட செங்கோல்
கொடுமுடி அவ்வலை பரியப் போகிக்
கடுமுரண் எறிசுறு வழங்கும்." 1

அவள் கூறியன கேட்டாள் மற்றொருத்தி; அவள், அப் பரதவர் குலத்தில் பிறந்தவள். சுறுமீன் வேட்டைக்குச் சென்ற பரதவரின் குடியில் வந்தவள். தன் சுற்றத்தாரின் தோல்வி கேட்டு வருந்திற்று அவள் உள்ளம். அவள் கூறியதை ஏற்றுக்கொண்டாளல்லள்; தன் உறவினராய பரதவர் ஆற்றலை அவள் அறிவாள்; அதனால், "ஏடி பெண்ணே! வலிய வலையையும் கிழித்துக்கொண்டு சுறு ஓடிவிட்டது என்பதை நான் ஏற்றுக்கொள்கிறேன். அது எங்கள் தொழிலில் இயல்பாக நிகழ்வது. ஆனல் அதனல் எங்களவர் ஏமாற்றம் அடைதலோ, உள்ளம் உடைந்து சோர்ந்து விடுவதோ இல்லை. சுறு, ஒரு முறை ஓடிவிடுவதைக் கண்டவுடனே அவர்கள் ஆற்றல் அதிகமாம்; அதைப் பிடிக்கும் ஆர்வமும் மிகும். முன்னினும் மிகுதியாக முயன்று அச் சுறுவை அகப்படுத்துவர். அதைக் கைப்பற்று து - மீன் வேட்டையில் வேண்டுமளவு வெற்றி கிட்டாமுன் - எங்களவர் கரை ஏருர்; இது உறுதி" என்று கூறிப் பரதவரின் பேராற்றலைப் புலப்படுத்தினுள்.

1. நற்றிணை: 303. மதுரை ஆருலவிய நாட்டு ஆலம்பேரி சாத்தனர்.
வன்கை-வலிய கை. கொடுமுடி-வலித்துக் கட்டிய முடி. பரிய-தூள் தூளாகக் கிழிய. போகிய- தப்பிப் பிழைத்த. கடுமுரண்-கொடிய கோபம் மிக்க. எறிசுறு-கொல்லும் சுறு.

"கொடுமுடி அவ்வலை பரியப் போகிய
கோட்சுறாக் குறித்த முன்பொடு
வேட்டம் வாயாது எமர் வாரலர்." 1

**மீன் பிடித்த மகிழ்ச்சி :**

மீன் வேட்டையில் வல்ல பரதவர், வீசிய வலையை வலிதிற் பற்றி இழுத்தல், பகற் காலத்திலும் இரவுக் காலத்தில் எளிதாம்; உடல் தளர்ச்சி உறுதலும் இன்றாம்; மேலும், இரவில் விளக்கேற்றிச் செல்லின், அவ்விளக்கொளி கண்டு, மீன்கள் தம் படகை அணுகுதலும் செய்யும்; ஆதலின் மீன் பிடித்தற்கு இரவுக் காலமே ஏற்ற காலமாம் என்பனவற்றை அறிந்திருந்தனர்; அவ்வறிவு வாய்க்கப் பெற்ற பரதவர் சிலர், இரவின் இடையாமத்தே கட்டுமரம் ஏறிச் சென்றனர். கடற் காற்று வீசினும் அவியாத பெரிய திரிகொண்டு கொளுத்திய விளக்குகளை ஏற்றி வைத்துக் கொண்டனர்; இரவில், மீன்களை வலை வீசிப் பிடிப்பதினும், விளக்கொளி கண்டு வந்து, தம் தோணியை மொய்க்கும் மீன்களை, அவ்விளக்கின் நிழலில் மறைந்திருந்து, எறிவேல் எறிந்து பிடித்தலே நன்று என உணர்ந்து எறிவேல்களையும் எடுத்துக்கொண்டனர்; வேலேறுண்ட மீன்கள், அவ்வேலோடு ஓடி விடுதலும் உண்டு ஆதலின், அவை அவ்வாறு ஓடிவிடாவாறு, அவ்வேல்களின் அடியை வலிய கயிற்றால் பிணித்துக் கொண்டனர். இத்தனை ஏற்பாடுகளோடும் புறப்பட்டுப் போன பரதவர், போன இடத்தில் எதிர் நோக்கியவாறே எண்ணற்ற பெருமீன்களைப் பிடித்துக் கொண்டனர். வினை முடிந்துவிட்டமையால், விடிவதற்குள் வந்து கரையேறினர்; கொண்டு

1. நற்றிணை : 215. மதுரைச் சுள்ளம் போதனார்.
கோட்சுறா—எதிர்த்த உயிர்களைக் கொன்று அழிக்கும் சுறா. முன்பு—ஆற்றல். வாயாது – வெற்றி பெறாது.

வந்த மீன்களைக் கடற்கரையை அடுத்திருந்த சோலையுள் குவித்தனர். அவற்றைக் காணக் காண, அவர்கள் மனம் மகிழ்ச்சியில் திளைத்தது. தம் இனத்தாரையெல்லாம் அழைத்தனர்; தம் வேட்டைப் பயனை அவர்க்கும் காட்டி, அவரோடும் கூடிக் கள்ளுண்டு களித்தனர்.

> "நோன்புரிக்
> கயிறு கடையாத்த கடுநடை எறிஉளித்
> திண்திமில் பரதவர், ஒண்சுடர்க் கொளீஇ
> நடுநாள் வேட்டம் போகி, வைகறைக்
> கடல்மீன் தந்து, கானல் குவைஇ
> ஓங்கு இரும் புன்னை வரிநிழல் இருந்து
> தேம் கமழ் தேறல் கிளையொடு மாந்திப்
> பெரிய மகிழும்." 1

மாலை வந்துற்றது; காலையில் கடல்மேல் சென்ற பரதவர் சிலர், அப்போது வந்து கரை ஏறினர்; அவர்கள் வலை கொண்டு சென்றவர்; பெரிய கடலைச் சேறு காணுமளவு கலக்குபவர்போல் வலைகளை வீசி வீசி, மீன்களை வாரிக் குவித்தனர். தாம் ஏறிச் சென்ற படகும் நிறைந்து போகவே, வலை வீசுவதை விடுத்து, வந்து கரை ஏறினர்; கொண்டுவந்த மீன் குவியலைக் கரையை அடுத்த சோலைவரை கொண்டு செல்லவும் அவர்களால் இயலவில்லை. அவர்கள் அவ்வளவு தளர்ச்சியுற்றிருந்தனர். அதனால் அம்மீன்களை, அலை அலைக்கும் மணல் மேட்டிலேயே கொட்டிக் குவித்தனர். இரவும் வந்தது; இருள் பரவிவிட்டது. உடனே, கீழே சிதறிக் கிடக்கும் கிளிஞ்சில்களில் சிலவற்றைப் பொறுக்கி, அவற்றில் மீன் கொழுப்

---

1 நற்றிணை : 388. மதுரை மருதங்கிழார் மகனார் பெருங்கண்ணனார்.

நோன்புரி-வன்மைமிக்க புரிகளால் ஆய. கடையாத்த - அடியில் கட்டிய. கடுநடை-விரைந்து செல்லவல்ல. திண்திமில்-வலிய மீன்படகு. கொளீஇ-கொளுத்திக்கொண்டு. கானல்-கடற்கரைச் சோலை. தேம்கமழ்-தேன் மணம் வீசும். தேறல்-கள். கிளையொடு-இனத்தாரோடு.

பால் ஆகிய நெய் வார்த்து விளக்கேற்றி வைத்தனர். அதற்குமேல் அவர்களால் எதுவும் செய்ய இயலவில்லை. அவ்விளக்கின் ஒளியில், மீன் குவியலுக்கு அருகே, மணல் மீது வீழ்ந்து, தம்மை மறந்து உறங்கிவிட்டனர். அவர்கள் மேற்கொண்ட மீன்வேட்டைத் தொழில், அவர்கள் உள்ளத்திற்கு அளித்த அமைதி அத்துணைப் பெரிது போலும் !

' நெடுங்கடல் அலைத்த கொடுந்திமில் பரதவர்
கொழுமீன் கொள்கை அழிமணல் குவைஇ
மீன் நெய் அட்டிக் கிளிஞ்சில் பொத்திய
சிறு தீ விளக்கில் துஞ்சும்.'' 1

## வலைஞர் குல இளைஞர் :

கடற்கரையில், பனை மரங்கள், வேலிபோல் வளர்ந்திருக்கும் ஒரு சிற்றூர் ; அச்சிற்றூரில் வாழும் பரதவருள், கொடிய சுறு மீன்களையே தேடிப் பிடிக்கும் ஒருவன் இருந்தான் ; அதற்கேற்ற ஆற்றலும், உடற்கட்டும் உடையான் அவன் ; மக்கட் செல்வத்தையும், அவன் குறைவறப் பெற்றிருந்தான் ; அவன் சிறுவர்களும் அவனைப்போலவே தொழில்விருப்பம் வாய்ந்தவர். தந்தை, கட்டுமரம் ஏறிச் செல்வதையும், அவன் ஏறிச் செல்லும் கட்டுமரம், ஊசல் ஆடுவதுபோல், உயர்ந்தும் தாழ்ந்தும் அலைகளில் ஆடிச் செல்லும் அழகையும், சென்ற தந்தை மீண்டு வருங்கால், பெரிய பெரிய மீன்களைப் பற்றி வருவதையும் நாள்தோறும் கண்டுமகிழும் அவர்கள் உள்ளத்தில், தந்தையைப் போலவே தாமும் கட்டுமரம் ஏறிக் கடல்மேல் செல்லுதல் வேண்டும், கட்டுமரம், கடலில்

---

1. நற்றிணை : 175.

அலைத்த-வலை வீசி மீன் பிடித்த. கொழுமீன் கொள்கை-தாம் கொண்ட கொழுத்த மீன்களை. அட்டி-வார்த்து. பொத்திய-ஏற்றிய. துஞ்சும்-உறங்கும்.

ஆடி அசையும் அழகைக் கண்டு மகிழ்தல் வேண்டும்; பெரிய மீன்களை நிறையப் பெற்று வருதல் வேண்டும் எனும் ஆசைகள் அடுக்கடுக்காக எழுந்தன. இளமையின் அறியாமையும், அத்தொழிலிற் கொண்ட ஆர்வமும், அத் தொழில் எத்துணை அருமை வாய்ந்தது, கொடுமை உடையது என்பதை உணர்த்தில. அதனால் ஒருநாட் காலை, தந்தை கடல்மேல் செல்லப் புறப்பட்டவுடனே, அவர்கள் அவன் கால்களைக் கட்டிக்கொண்டு தம்மையும் உடன்கொண்டு செல்லுமாறு வற்புறுத்தினர். செல்லும் இடத்தின் அல்லல் அறிந்த அவன், அவர் ஆசையை நிறைவேற்ற அஞ்சினான். அவர்களை அழைத்துச் செல்ல மறுத்தான். அதனால் அவரைக் கரைக்கண் விடுத்துக் கட்டுமரம் ஏறிக், காக்கைகள் கூட்டங் கூட்டமாய்ப் பறக்கும் கடல்மேல் சென்றுவிட்டான். தந்தை மறுத்துச் செல்வதையும், செல்லும் தந்தையின் கட்டுமர அழகையும் காணக் காணக் கலக்கம் மிகுந்தது. கண்கள் நீரைக் கக்கின. அவர்கள் தேம்பித் தேம்பி அழுதனர். அவர்கள் அருகிருக்கும் தாய் எத்துணை ஆறுதல் கூறியும் அழுகை அடங்கவில்லை. அவர் அழுகையை வெறும் சொற்க களால் போக்க இயலாது என்பதை உணர்ந்தாள் தாய். அவர்களை விடுத்து விரைந்து சென்றாள்; வேலிக்கண் நிற்கும் மரத்தினின்றும் பனங்காய்கள் சில பறித்தாள்; அவற்றை வெட்டி உள்ளிருக்கும் நுங்குகளைப் பெயர்த்து எடுத்தாள்; நுங்கோடு சிறுவர்கள்பால் சென்றாள்; அதற்குள், அவன் சென்ற கட்டுமரம் கண்ணிற்குப் புலப் படாது மறைந்துவிட்டது; அதைக் காணாமையால், தந்தையின் போக்கைச் சிறுவர்களும் ஒரு சிறிது மறந் தனர்; அவர்கள் தேமலும் குறைந்தது; அந்நிலையில் ஆங்கு வந்த அவள், அவர்கள் கைநிறைய நுங்குகளைக் கொடுத்தாள்; ஒரு சிலவற்றை அவர்கள் வாயிலும்

திணித்தாள். நுங்கைத் தின்று சுவைத்த அவர்கள் அச்சுவை மிகுதியால் தந்தையின் போக்கை அறவே மறந்தனர். நுங்குத் தின்பதில் மகிழ்ந்து போயினர்; இளைஞர்களின் தொழிலார்வம் போற்றுவதற் குரிய தன்றோ!

" கடுஞ்சுறு எறிந்த கொடுந்தாள் தந்தை
புள் இமிழ் பெருங்கடல் கொள்ளான் சென்றென
மனை அழு தொழிந்த புன்தலைச் சிறுஅர்
துணையதின் முயன்ற தீங்கண் நுங்கின்
பணைகொள் வெம்முலை பாடுபெற்று உவக்கும்
பெண்ணை வேலி உழைகண் சீறூர்." 1

**வருதிமில் எண்ணும் பரதவர் மகளிர்:**

பெற்ற மக்களுள் ஆண்பாலார், தந்தையையும், பெண்பாலார் தாயையும் ஒத்திருப்பர்; இவ்வுண்மை பரதவர் குலத்தார்க்கும் பொருந்தும். தந்தை கடல்மேல் சென்று மீன்பிடித்து வருதலைக் காணும் அவன் இளைஞர், தந்தையைப்போல், தாமும் கடல்மேல் சென்று மீன் பிடித்து வாழ விரும்புவர். ஆனால் அவன் மகளிர், தம் தந்தை தொழிலை விரும்பார்: தாயின் தொழிலையே விரும்புவர்.

கணவன் கடல்மேல் சென்ற காலத்தில், மனைவி மனைக்கண் இருந்து, பகலெல்லாம் மீன் உலர்த்தலும், அதை விற்று வருதலும் செய்துவிட்டு, மாலையானதும், கடற்கரைக்குச் சென்று, மீன் பிடித்துத் திரும்பும் கணவனை எதிர்நோக்கியிருப்பள்; அவன் கட்டுமரம்

1. நற்றிணை : 392. மதுரை மருதன் இளநாகனர்.

கொடுந்தாள்-பெரியமுயற்சி. புள்-பறவை. இமிழ்-ஒலிக்கும். கொள்ளான்-கொண்டுசெல்லாது. துணையதின்-விரைவாக. தீங்கண்-இனியநீர் உள்ளகண். பாடு-பயனை. பெண்ணை-பனை. உழைகண்-அகன்ற இடம்.

கண்ணிற்குப் புலப்படுகிறதா எனக் கவலேயோடு காத்திருப்பாள்; அவன் தோணி தொலேவில் வரக் கண்டவுடனே, "அவர் வந்துவிட்டார்; அதோ அவர் திமில்" என உரக்கக் கூவி உள்ளம் மகிழ்வாள்.

தாயின் இச்செயல்களை நாள்தோறும் கண்டு பழகிய அம்மகளிரும் அதுவே செய்வர். பகலெல்லாம், உப்பிட்டு உலர்த்திய மீன்களை உண்ணவரும் பறவைகளை ஓட்டிக் காவல் புரிவர்; மாலை வந்ததும் கடற்கரைக்குச் செல்வர். தொலைவில் வரும் தோணிகளைக் காணுமாறு கரையில் மலேபோல் குவித்திருக்கும் உப்புக் குவியல்கள்மீது, குவியலுக்கு ஒருவராக ஏறி எதிர்பார்த்திருப்பர். தோணிகள் கண்ணிற்குப் புலப்படத் தொடங்கியவுடனே, "அதோ என் தந்தை தோணி! இதோ உன் தந்தை தோணி!" எனக் கூறி வரும் தோணிகளை எண்ணிப் பார்த்து இறுமாந்து மகிழ்வர்.

"புலவுமீன் உணங்கல் படுபுள் ஓப்பி
மடநோக்கு ஆயமொடு உடன் உப்பு ஏறி
எந்தை திமில்இது; நுந்தை திமில் என
விளைநீர் வேட்டம் போகிய கிளைஞர்
வண்திமில் எண்ணும்." 2

1. நற்றிணை: 331. உலோச்சனார்.

உணங்கல்-கருவாடு. படுபுள்-உண்ணவரும் பறவை. ஓப்பி-ஓட்டி. ஆயம்-தோழியர். திமில்-படகு. விளைநீர்-உலகை வளைத்துக் கிடக்கும் கடல்.

# 6. கடமைநெறி நிற்கும் கணவன்

"பெருமையும் உரனும் ஆடூஉ மேன" என்றார் தமிழ் மக்களின் வாழ்க்கை முறைக்கு வரம்பு வகுத்த ஆசிரியர் தொல்காப்பியனார். பெருமையாவது, செயற்கரிய செய்தல்; "செயற்கு அரிய செய்வார் பெரியர்" என்பது திருக்குறள். செயற்கு அரியவாவன, மனமொழி மெய்கள் தூயவதால், நல்லனவே சிந்தித்தல், நல்லனவே சொல்லுதல், நல்லனவே செய்தல். செயற்கரிய செய்து பெரியோராதல், அம்மனமொழிமெய்கள், அவ்வாறு நல்லனவற்றின்கண் செல்லாது, அல்லனவற்றின்கண் செல்லுமாயின், அவற்றை அவ்வல்லனவற்றின் நீக்கி நல்லனவற்றின் கண் நிற்கச் செய்யும் அறிவுடையார்க்கே இயலும்; தக்க இன்ன தகாதன இன்ன என்று உணர்ந்து அம்மனமொழி மெய்களை, அவை சென்ற விடத்தால் செலவிடாது, தீதுஒரீஇ நன்றின் பால் உய்க்கும் ஆற்றல் உடைமையால், அவ்வறிவை உரன் எனும் பெயரிட்டு வழங்கினார் தொல்காப்பினார்." உரன் எனும் தோட்டியான்

ஓர் ஐந்தும் காப்பான்" என்ற விடத்தும் உரன் எனும் அச்சொல், தீது ஒரீஇ நன்றின்பால் உய்க்கும் நல்லறிவு எனும் பொருளே உடையதாதல் அறிக. ஆகவே ஆடவர் எனப்படுவார், மன மொழி மெய்களால் தூயராதலோடு அவர்க்கு அத்தூய்மையாவது யாது என அறிவித்து, அவரை அந்நெறிக்கண் நிறுத்தும் நல்லறிவும் உடையராதல் வேண்டும் என்பது, தொல்காப்பியர் போன்ற பெரியோர்கள் கருத்தாதல் புலனும்.

ஆடவர், அப்பெருமையும் உரனும் கொண்டு வாழின், உலகம் வாழும். அவர் அவற்றை மறந்து சிறுமையும் சிறுமதியும் கொள்வராயின் உலகம் கேடுறும்; "பண் புடையார்ப் பட்டுண்டு உலகம்; அதுவின்றேல், மண்புக்கு மாய்வது மன்" என்றார் வள்ளுவர். தமக்கு ஓதிய அவ்வறவழியை மறந்து, அழிவழியிற் செல்வதால், "புருடரே புலையர்; நிலையிலாப் பதடிகள்; இருளடை நெஞ்சினர்; ஈரம் இல் உளத்தர்; ஆணை அவர்க்கு வீணுரை; தந்நயமன்றிப் பின்னென்றறியாக் காதகர்; கடையர்; புருடரோ இவரும்? கருவுறும் குழவிமெய் மென்றிட நன்று எனக் கொன்று தின்றிடுவர்; அவர் அவாவிற்கு அளவில்லை; அன்போ அறியார்; மணமும் அவர்க்கு ஒரு வாணிகம்!" எனப் பெரியோர்களால் பல்லாற்றானும் பழிக்கப் பெறும் இக்கால ஆடவர் போலாது, சங்க காலத்துத் தமிழ் ஆடவர், பெருமையும் உரனும் பெற்றுப் பெரியோராய் வாழ்ந்தனர்; அவ்வாடவர் வாழ்ந்து காட்டிய வாழ்க்கை நெறிகள், நாகரிக வாழ்வை நனிமிகப் பெற்றவர் எனத் தம்மைப் பெருமை பாராட்டிக் கொள்ளும் இன்றைய ஆடவர்க்கு, வழித்துணையாகுக என விரும்பி, அப்பழந் தமிழ் ஆடவர் சிலரைக் கண்டு அறிவு பெறுவோமாக.

**சான்றாண்மை :**

ஆயிரமாயிரம் ஆண்டுகட்கு முன், நம் அருந்தமிழ் நாட்டில் வாழ்ந்த ஆடவர் ஒவ்வொருவரும், உயர்ந்த ஒழுக்கங்களை, இயல்பாகவே பெற்றிருந்தனர். அவ்வாடவருள் ஓர் ஆண்மகன், ஒரு பெண்ணைக் காதலித்து, அக் காதற்பயனைப் பெறமாட்டாது கலங்கிய காரணத்தால் ஆடவர்க்குரிய ஆக்க நெறியிற் சிறிதே தவறிவிட்டான். அதைக் கண்டான் அவன் நண்பன். "நகுதற்பொருட்டன்று நட்டல்; மிகுதிக்கண் மேற்சென்று இடித்தற் பொருட்டு" எனும் குறள் நெறி உணர்ந்தவன் அந் நண்பன். அதனால், நெறிதவறிய அவ்வாண்மகனைக் கண்டு ஆடவர்க்குரிய அறவொழுக்கங்களிற் பிறழ்ந்து வாழ்தல் பெரும் பிழையாம் என எடுத்துக்கூறித் திருத்த முன் வந்தான்; வந்தவன் "நண்ப! நீதியிற் பிறழாமை, நல்லோரை நண்பராகக் கொண்டு அவர் சொல்வழி நிற்றல், அறமல்லாதனவற்றை எண்ணவும், சொல்லவும், செய்யவும் நடுங்கும் நாண், வருவார்க்கு வாரி வழங்கும் வள்ளன்மை, தக்க இன்ன தகாதன இன்ன என அறிந்து ஒழுகும் பண்பு, உலகியல் உணர்ந்து அதற்கேற்ப நடந்துகொள்ளும் அறிவுடைமை ஆகிய இவற்றைக் குறைவறப் பெற்று வாழ்தலன்றோ ஆடவர்க்கு அழகு? இவற்றை மறந்து வாழ்தல் நினக்கு மாண்பாமோ?" என இடித்துக் கூறினான். அது கேட்ட அவ்வாண்மகன். "அன்புடை நண்ப! நீ கூறும் அக்குணங்களை அறியாதவனோ, அவற்றைப் பெறாதவனோ அல்லன் நான்; அக்குணங்களை நீ பெற்றிருக்கும் அளவினும் மிகுதியாகவே பெற்றிருந்தவன் நான்; காதற் கலக்கத்தால், அவற்றை இன்று ஒரு சிறிது மறந்தேன் என்பது உண்மை; ஆனால் அவற்றை என்றுமே மறந்து விடுவன் என எண்ணாதே"

என்று கூறி, ஆடவர்பால் அமைய வேண்டும் அரும் பண்புகள் இவையென அறிவுறுத்தினன்.

" நயனும் நண்பும் நாணும் நன்கு உடைமையும்
பயனும் பண்பும் பாடறிந்து ஒழுகலும்
நும்மினும் உடையேன் மன்னே." 1

" மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள் சொல்வதி லோர் மகிமை இல்லை ; திறமான புலமை எனில் வெளி நாட்டார் அதை வணக்கம் செய்தல் வேண்டும்" என்ப. ஒருவர், தம்பெருமையைத் தாமே பாராட்டிக் கொள்ளுதல் முறையாகாது ; அவ்வாறு பாராட்டிக் கொள்வதைக் கொண்டே, அவர் பால் அப்பெருங்குணங்கள் அமைந் திருப்பதாக நம்பி விடுதலும் கூடாது. ஒருவர்பால் உள்ள பெருமையை, அவர் அல்லாப் பிறர், அதனினும் அவரோடு முற்றிலும் முரண்பட்டவர் பாராட்டின், அவர் பெரியார் என்பது முற்றிலும் உண்மையாம். பழந்தமிழ் ஆடவரின் பெருமை, அக்கால ஆண்மகன் ஒருவன், தன் போலும் பிறிதொரு ஆண்மகன் பால், தன் பெருமையைப் பாராட்டிக் கொள்வதால் மட்டும் உறுதி செய்யப் படுதல் போதாது. அதை, அவ்வாடவரின் வேறுபட்ட மகளிரும் பாராட்டி யிருத்தல் வேண்டும்.

அவ்வாறே, பழந்தமிழ்ப் பெண்ணொருத்தி, தன் காலத்தே வாழ்ந்த ஓர் ஆண்மகனை, அவன், தனக்கும், தன் தோழிக்கும் துன்பம் தந்தவன் என்பதை உணர்ந்து பாராட்டியுள்ளாள் " அவ்வாண்மகன், பேருள் உடைய வன்; பழகற்கினிய நட்புக்குணமுடையவன்; அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை எனும் பல்வகைப்

1. நற்றிணை : 160.

நயன்-நீதி. நண்பு-நட்பு. பாடு அறிந்து ஒழுகல்-உலகியல் அறிந்து அதற்கேற்ப நடந்து கொள்ளுதல். மன்-இடைச்சொல், அது இப்பொழுது இல்லை என்ற கருத்தை உணர்த்த வருவது.

பண்புகட்கும் நிலைக்களனாய சான்றாண்மை உடையவன்; மலைகலங்கினும் நிலைகலங்கா நீதி நெறி நிற்பவன்" என்றெல்லாம் கூறிப் பாராட்டியுள்ளாள் அப் பெண்; பெண்டிரும் பாராட்டும் பெருந்தகையாளர் அக்கால ஆடவர் என அறிய அகம் மகிழ்கிறது எம் உள்ளம்!

"அளிய பெரிய கேண்மை நும்போல்
சால்பு எதிர்கொண்ட செம்மையோர்."[1]

**அருள் உள்ளம்:**

தாய், தந்தை, தன்னுடன் பிறந்தார், மனைவி மக்கள். அவர்களைச் சூழ்ந்து நிற்கும் சுற்றத்தார் என்ற இவர்களிடத்தே காட்டும் பற்று அன்பு எனப்படும்; அவ்வன்பு வேண்டப் படுவதேயாயினும், அது யாதோ ஒரு வகையில் தன்னோடு தொடர்புடையார்பால் செல்வதால், அது தன்னலம் உடையதாகி விடுகிறது. அவ்வன்பே தன்னோடு எவ்வகையிலும் தொடர்பற்ற பிற உயிர்கள்பால் தோன்றுமாயின், அந்நிலையில் அது சிறந்ததாம். தொடர்பற்றவர்பால் தோன்றும் அவ்வன்பை, அருள் என்று பெயரிட்டு அழைப்பர் பெரியோர். தன்னினும் நிலையில் தாழ்ந்த, தன்னினும் ஆற்றலில் குறைந்த, தன்னினும் வாழும் வாய்ப்பிழந்து போன உயிர்களின் துயர் நிலைகண்டு, கண்ணில் நீர்மல்கக் கலங்கி நின்று, அவற்றின் துயர் துடைத்து வாழும் வாழ்வே பண்பட்ட வாழ்வாம். அத்தகைய அருள் உடையார் வாழ்வதினாலேயே உலகம் வாழ்கிறது. இவ்வரும் பெருங் குணத்தைக் குறைவறப் பெற்றிருந்தனர் அக்கால

1. நற்றிணை-345. நம்பிகுட்டுவனார்.

அளிய-அருள் உடைய. கேண்மை-நட்பு. சால்பு-சான்றோர்க்குரிய பண்புகள். எதிர்கொண்ட-விரும்பி மேற்கொண்ட. செம்மையோர்-நடுநிலைமை உடையோர்.

ஆடவர். தன் காதலியைக் காண வேண்டும் எனும் ஆர்வம் உந்த அறிவு திரிந்து ஓடும் அந்நிலையிலும், அக்கால ஆண்மகன் அருளை மறப்பதில்லை.

காதலி, கடலையடுத்துள்ள ஒரு சிற்றூரில் வாழ்கிருள்; அவளைக்காணத் தேர்ஏறிச் செல்கிருன் காதலன்; அவள் ஊருக்குச் செல்ல வேண்டின், தேர், கடற்கரையை ஒட்டியே செல்லுதல் வேண்டும். கடல் அலை, கரை நோக்கி வீசும் தோறும், கணக்கற்ற கடல் நண்டுகளைக் கரைக்கண் ஒதுக்கிச் செல்லும். அவன், ஆங்குச் செல்லும் நேரமோ நிலவொளி வீசும் இராக்காலம். காதலியைக் காணும் ஆர்வம் தேரை விரைந்து ஓட்டத் தூண்டுகிறதாயினும், கடல் நண்டுகள் தேர்க்காலின் கீழ்ச்சிக்குண்டு அழியுமோ எனும் அருள் உள்ளம், அவ்விரைவினைத் தணிக்கிறது நிலவொளியின் துணையால் நண்டுகளை அறிந்து, அவற்றின் மீது தேர் ஏறி விடாதவாறு விலக்கி விலக்கி ஓட்டிச் சென்ருன். அவ்வாண்மகனின் இவ்வருட்டிறத்தை அவன் காதலிக்கு அறிவித்துப் பாராட்டினுள் அவள் தோழி.

> " புணரி பொருத பூமணல் அடைகரை
> ஆழி மருங்கின் அலவன் ஓம்பி
> வலவன் வள்பு ஆய்ந்து ஊர
> நிலவு விரிந்தன்ருல் கானலானே." 1

**ஈகை :**

மண்ணுலகில் பிறந்த மக்கள் ஒவ்வொருவரும் யாதேனும் ஒரு வகையில் புகழுடையராதல் வேண்டும்;

---

1. நற்றிணை-11. உலோச்சனுர்.

புணரி-அலை. பொருத-மோதிய. பூமணல்-புதியமணல். ஆழி-தேர்ச் சக்கரம். மருங்கின்-இடத்தில். அலவன்-நண்டு. ஓம்பி-அகப்பட்டுக்கொள்ளா வண்ணம் விலக்கி. வலவன்-தேர்ப்பாகன். வள்வு-வார். ஊர-செலுத்த, கானல்-கடற்கரை.

புகழிலா வாழ்வு வாழ்வாகாது. அவ்வாழ்வு விலங்கு வாழ்வினும் இழிவுடைத்து. "தோன்றின் புகழொடு தோன்றுக" என்றார் வள்ளுவர். புகழ், பல வழிகளில் வரும் என்றாலும், அவற்றுள், வறுமையால் வாடி வந்து நிற்பாருக்கு வாரிவழங்கி, அவர் வாட்டம் தவிர்த்து வாழவைப்பதால் வரும் புகழ் போல் விழுமியது வேறு இல்லை. ஆகவே, மக்கள் கொடைக் குணம் வாய்க்கப் பெற்றுக் குன்றாப்புகழ் உடையராதல் வேண்டும். அதுவே, அவர் வாழ்வின் குறிக்கோளாதலும் வேண்டும். "ஈதல் இசைபட வாழ்தல், அதுவல்லது ஊதியம் இல்லை உயிர்க்கு." வருந்தி வருவார்க்கு வழங்க மாட்டாது, வறிதேவாழ்வதினும், வாழ்விழந்து மாண்டு மடிதலே மாண்புடைத்து; "ஈதல் இரந்தார்க்கு ஒன்று ஆற்றாது வாழ்தலின் சாதலும் கூடும்" என்றான் ஓர் ஆண் மகன். "சாதலின் இன்னாதது இல்லை; இனிது அதூஉம், ஈதல் இயையாக் கடை" என்றார் வள்ளுவர். பழந்தமிழ் ஆடவர், வறுமையால் வருந்தித், தம்வீடு நோக்கி வரு வாரின் வாட்டம்போக்கி, வாழ்வளித்து வாழத்தெரிந்தவர்; வருவோரின் வாட்டத்தைப் போக்காது வாழும் வகை தெரியாதவர். தன் கணவன் தன்னைத் தனித்திருக்க விடுத்துப் பொருள் தேடிவரப் போகிறான் என்பது உணர்ந்து, அவனைப் பிரிந்து எவ்வாறு வாழ்வது என வருந்தினாள் ஒரு பெண்; அப்போது ஆங்கு வந்த அவள் தோழி, "கணவரைப் போகவிடுத்து வருந்தி வாழ்வதை விடப் போகாவாறே தடுத்து விடுதல் நல்லதன்றோ?" என்று கூறினாள். அது கேட்ட அப்பெண், "தோழி அது என்னால் இயலாது; உன்னாலும் அது இயலாது; கணவர், வறியார்க்கு வழங்காது வாழும் வாழ்வின் வளம் அறியாதவர்; அத்தகைய அவர், நம் வாயிற்கண் வந்து இரந்து நிற்கும் இரவலர்க்கு இல்லையென்னாது தருதற்குத்

துணை செய்யவல்ல பொருளை ஈட்டிவரப் போகாது இரார்; ஆதலின் அவரைப் போகவிடுத்து வருந்தியிருப்பதல்லது, போகவிடாதே தடுத்து நிறுத்துதல் இயலாது" என்றுகூறி, அக்கால ஆடவரின் கொடைக் குணத்தைக் குன்றிலிட்ட விளக்கெனக் காட்டியுள்ளாள்.

"ஏகுவர் என்ப தாமே; தம்வயின்
இரந்தோர் மாற்றல் ஆற்று
இல்லின் வாழ்க்கை வல்லா தோரே." 1

**விருந்தோம்பல் :**

ஊருக்கு வரும் புதியவர்களுக்குக் காசு பெற்றுயினும் உணவளித்துத் துணைபுரியும் உணவில்லங்கள் இல்லாக் காலம் அக்காலம். அதனால், தம்மூர்க்கு வரும் புதியவர்களுக்கு உணவளிக்கும் உயர்ந்த தொண்டினை, அவ்வூரில் உள்ள ஒவ்வொரு குடும்பமும் கடமையாக மேற்கொண்டிருந்தது. விருந்தோம்பும் வாழ்க்கையை வற்புறுத்தினர் அக்கால ஆன்றோர்கள். "இருந்து ஓம்பி இல்வாழ்வதெல்லாம், விருந்து ஓம்பி வேளாண்மை செய்தற் பொருட்டு" என இல்வாழ்வது, வருவிருந்தோம்பும் வாழ்க்கைக்கே என்றார் வள்ளுவர். விருந்தோம்பி வாழும் வாழ்க்கையை, அக்கால ஆடவர் விரும்பி மேற்கொண்டிருந்தனர்; தன் மனைவி, பாராட்டத்தக்க பண்புகள் பல பெற்றிருப்பவும், ஓர் ஆண்மகன், அவள்பால் அமைந்துள்ள விருந்தோம்பி வாழும் வனப்பையே வியந்து பாராட்டி யுள்ளான். விருந்தினர், இரவில் - உண்ணும் பொழுது கழிந்த இடையாமத்தில் - வரினும், விருந்தினர் வருகையறிந்து, அகமும் முகமும் மலர வரவேற்று, அவர்

---

1. நற்றிணை : 84.
ஏகுவர்-செல்வர். தம்வயன்-தம்மிடத்தில். மாற்றல் ஆற்று-அவர் துன்பத்தைப் போக்கமாட்டாத. வல்லாதோர்-வாழத் தெரியாதவர்.

விரும்பும் உணவு வகைகளை விரைவில் ஆக்கிமுடித்து, அன்புரை வழங்கிக்கொண்டே உண்பிக்கும் உயர்ந்த பண்பாடுடையவள் என் மனைவி எனத் தன் மனைவியின் விருந்தோம்பற் சிறப்பினைக் காணும் ஆர்வம் உந்த, விரைந்து வினைமுடித்து மீளும் அக்கால ஆடவரின் விருந்தோம்பற் சிறப்பினை வியந்து பாராட்டுவோமாக.

"அல்லில் ஆயினும், விருந்துவரின் உவக்கும்
முல்லை சான்ற கற்பின்
மெல்லியல் குறுமகள் உறைவின் ஊரே." 1

**பிறர்க்கென வாழ்தல் :**

"நான், என்னுடையது" எனக் கருதி வாழ்வதினாலேயே, நாட்டில் பகைவளர்ந்து, பாழ், இடம்பெறுகிறது. உலகில் வாழ்வார் அனைவருமே அத்தகையராய் விடின், உலகம் என்றோ அழிந்திருக்கும் ; அது அழியாது இன்று வரை நிலைபெற்றிருத்தல், அம்மக்களிடையே, தம்மை மறந்து, தம் நலத்தை மறந்து, பிறர் நலமே கருதி வாழும் பெரியோர் சிலர், அவ்வப்போது தோன்றி, அறநெறி காட்டி வாழ்ந்தமையினாலேயே யாகும். நாடாளும் அரசனுமாய், நல்லறிவு கொளுத்தும் புலவனுமாய் வாழ்ந்த கடலுள் மாய்ந்த இளம் பெருவழுதி எனும் பாண்டிய மன்னன், செய்யும் பணி எதையும், ஈட்டும் பொருள் எதையும் தமக்கோ, தம்மொடு உறவுடையார்க்கோ பயன்தரற்பொருட்டு மேற்கொள்ளாது, தம்மோடு எவ்விதத் தொடர்பும் இல்லாத பிறவுயிர்களின் நலமே கருதி மேற்கொள்ளும் பெரியோரே, உலகை உயிர்

1. நற்றிணை : 142. இடைக்காடனார்.

அல்லில்–இராக்காலம். உவக்கும்–உள்ளம் மகிழும். முல்லை–கற்பு நெறி. கணவன் கூறிய சொற்படி கடனாற்றும் ஒழுக்கம். சான்ற–பொருந்த. மெல்இயல்–மென்மை வாய்ந்த சாயல்.

*வாழச் செய்யும் உயர்ந்தோர்களுள் சிறந்தவராவர் என்று கூறுகிருர். "உண்டால் அம்ம! இவ்வுலகம்...தமக்கென முயலா நோன்தாள் பிறர்க்கென முயலுநர் உண்மை யானே." அவர் கூறும் அந் நெறி நின்று வாழ்ந்த பெரியோன், "தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன்," "பிறர்க்கு அறம் முயலும் பெரியோன்", "தன் உயிர்க்கு இரங்கான் பிறஉயிர் ஓம்பும் மன்னுயிர் முதல்வன்" என்றெல்லாம் பாராட்டப் பெறுவன். இவ்வுயர்ந்த உண்மையை உணர்ந்து, அவ்வழி நின்றவன் பழந்தமிழ் ஆண்மகன். அத்தகையான் ஒருவனைக் கணவனுகக் கைப்பிடித்த காரிகையொருத்தி, "யாம் பெற்ற இவ் வின்பம் பெறுக இவ்வையகம்", "நாடெலாம் வாழக் கேடொன்றும் இல்லை" எனும் பரந்தவுள்ளம் உடைமை யால், உலகத்தில் உள்ள உயிர்கள் அனைத்தும் ஒருங்கே வாழவேண்டும் எனும் அருள் உள்ளம் வாய்க்கப் பெற்று, அவ்வுயிர்களை அவ்வாறு வாழவைக்கும் வல்லமை வாய்ந்தது பொருள் என அறிந்து, அப்பொருளை, அவ் வுயிர்களுக்காக, அவை வேண்டுமளவு முயன்று தேடும் தாளாண்மையுடையவர் எம் கணவர்" எனப் புகழ்ந்து அக்கால ஆடவர்களின், அருளால் அகன்ற உள்ளத்தை நாம் அறியக் காட்டியுள்ளாள்.*

*"பிறர்க்கு என முயலும் பேரருள் நெஞ்சமொடு*
*காமர் பொருட்பிணி போகிய*
*நாம எம் காதலர் சென்ற ஆறே." 1*

**வாய்மை :**

*அறநூல் பல அறிந்து திருக்குறளை ஆக்கியவர் வள்ளுவர் ; அவர் கூறுகிருர்: தாம் அறிந்த அறநூல்கள்*

1. நற்றிணை : 186.

காமர்-அழகிய. பொருட்பிணி-பொருளாசையால். போகிய-போன. நாம ஆறு-அச்சம் பொருந்திய வழி. காதலர் சென்ற நாம ஆறு.

எதிலும், வாய்மை வழங்குதலைக் காட்டிலும், அஃதாவது உண்மை உரைத்தலைக் காட்டிலும் சிறப்புடைய அறம் வேறு இருப்பதாகக் கூறப்படவில்லை என்று; "யாம் மெய்யாக் கண்டவற்றுள் இல்லை; எனைத்தொன்றும் வாய்மையின் நல்ல பிற." அத்துணைச் சிறந்தது உண்மையுரைத்தல். செய்ததைக் கூறுவது, செய்யப் போவதைக் கூறுவது உண்மையெனப்படும்; அதுவே வாயின் தன்மையாதல் வேண்டும்; அதனாலேயே உண்மைக்கு, வாய்மை எனும் ஒரு பெயரிட்டு வழங்கினர் பெரியோர். உண்மையே உரைப்பதும், உரைத்தது பொய்த்துப் போகாவாறு நடத்தலும் நல்லோர்க்கு இயல்பாதல் வேண்டும். இந்தப் பண்பும், பழந்தமிழ் ஆடவரிடத்தில் அமைந்திருந்தது. சொன்ன சொல்லைக் காத்து, அதன் வழியில் நிற்பதால், தன்வாழ்வே பாழாயினும், தான் வாழும், ஊரும் நாடும் ஒருங்கே அழியினும், ஏன் உலகமே அழியினும், அச்சொல் பிழைபடவாழார் அவ்வாடவர். அவர்கள், அவ்வாறு வாய்மை வழுவாது வாழ்ந்தமையால், அவர்கள், "உலகில் தன் கடமையில் ஒரு சிறிதும் வழுவாது விளங்கும் ஞாயிறு அனையர்" எனப் பாராட்டப் பெறுதலோடு, அஞ்ஞாயிறேபோல் உலகமக்களால் வணங்கி வழிபடவும் பட்டனர். "உள்ளத்தால் பொய்யாது ஒழுகின், உலகத்தார் உள்ளத்துள் எல்லாம் உளன்" என்ற வள்ளுவர் உரை, உண்மையுரையாமன்றோ? பழந்தமிழ்ப் பெண்ணொருத்தியின் தோழியாம் தகுதிவாய்ந்த ஒரு பெண், "என் தலைவியின் கணவனும் தகுதிவாய்ந்த அவ்வாண்மகன், உலகமே நிலைகலங்கினும், உரைத்த உரையைப் பொய்யாக்கா உள்ள உரம் உடையவன்; அலைவீசும் ஆழ்கடலிடையே, உலகத்தார் தொழத் தோன்றும் ஞாயிறுபோல் வாய்மையில் வழுவாதவன்; அதனால் வணங்கத் தக்கவனுமாவன்" எனக் கூறிப்

பாராட்டு முகத்தான், அக்கால ஆடவர் உலகிற்கே பாராட்டுரை பகர்ந்துள்ளமையுணர்க.

'காதலர்
நிலம் புடை பெயர் வதாயினும், கூறிய
சொல் புடைபெயர்தலோ இலர்.'' 1

'ஓங்கு திரை
முந்நீர் மீமிசைப் பலர்தொழத் தோன்றி
ஏம் உற விளங்கிய சுடரினும்
வாய்மை சான்ற நின் சொல் நயந்தோர்.''

**பிழை அஞ்சுதல் :**

உலக மக்களுள், முழுவதும் குற்றம் உடையவரோ? முழுவதும் குணமே கொண்டவரோ எவரும் இல்லை. ஒவ்வொருவரிடத்திலும் குணமும் உளது; குற்றமும் உளது. ஆகவே நிறைந்த குணங்களும், குறைந்த குற்றங்களும் கொண்டவரையே குணம் உடையார் என்றும், நிறைந்த குற்றங்களும், குறைந்த குணமும் உடையாரையே குற்றம் உடையார் என்றும் கொள்ளுதல் வேண்டும். "குணம் நாடிக் குற்றமும் நாடி அவற்றுள் மிகை நாடி மிக்க கொளல்" என்றார் வள்ளுவர். குணங்களால் நிறைந்த ஒருவர், குற்றம் உடையராதல், சூழ்நிலை காரணத்தாலாம்; குணம் உடையாரையும் குற்றமுடையவராக்கி விடும் கொடிய சூழ்நிலையில் உளது இவ்வுலகம்;

1. நற்றிணை : 289. மருங்கூர்ப் பட்டினத்துச் சேந்தன்குமரனார்.
புடைபெயர்தல்-தன்நிலையில் திரிந்து அழிதல். சொல்புடைபெயர்தல்-சொல்மாறுதல்.

2. நற்றிணை : 283. மதுரை மருதன் இளநாகனார்.
திரை-அலை. முந்நீர்-கடல். மீமிசை-மேல். ஏம் உற-யாவரும்மகிழ. சுடர்-ஞாயிறு. வாய்மை சான்ற-வாய்மை விளங்கும். நயந்தோர்-விரும்பினவர்.

அதனால் எத்தகையவரும், எளிதில் குற்றம் புரிந்துவிடுகின்றனர்; ஆனால், அவ்வாறு குற்றம் புரிந்தாராயினும் குற்றம் புரிந்து விட்டோம் என்பதை உணர்ந்து, அதைப் பிறர் அறிந்து கொண்டனரோ என அஞ்சும் பண்பு, அக்குற்றம் புரிவோர்பால் அமைந்துவிடுமாயின், அவர் அக்குற்றம் புரிந்த காரணத்திற்காக இகழப்படார். அவ்வச்சம், மீண்டும் அவர் தவறு செய்வதைத் தடுத்து விடும்; பழி கண்டு அஞ்சும் உள்ள முடைமை, நல்லோர்க்கு அணியாம்; அது அவர்களை உயர் நிலைக்கு உய்க்கும்; அவ்வச்சம், இன்று இல்லையாயினும், ஒரு நாள் அவர்களைக் குற்றத்தின் நீங்கிய குணம் உடையோராக மாற்றி விடும். தாம்செய்த தவறு கண்டு அஞ்சும் இவ்வச்சவுள்ளம், அக்கால ஆடவரிடத்தில் அமைந்திருந்தது.

நயன், நண்பு, நாண், பயன், பண்பு, பாடறிந்தொழுகல், வாய்மை, வள்ளன்மை முதலாம் விழுமிய குணங்களால் நிறைந்த குன்று எனப் போற்றப் பெறும் ஆண் மகன் ஒருவன், தமிழகத்தினுள், எவ்வாறோ தவறி நுழைந்து விட்ட பரத்தையர் ஒழுக்கத்திற்கு அடிமையாகி விட்டான், ஆடல் மகள்ஒருத்தியின் அழகால் அறிவிழந்து அவளை அடைந்து, அவளை விட்டுப் பிரியாது, அவள் மனையிலேயே வாழத் தொடங்கி விட்டான். ஒரு நாள் அப்பரத்தை, அவனை நோக்கி, "அன்ப! மனைவியை மறந்து, என்பால் காதல் கொண்ட நின் ஒழுக்கக் குறைபாட்டினை, நின்மனைவி அறியச் செய்து விடுகிறேன்காண்" என விளையாட்டிற்காகக் கூறினாள். விளையாட்டிற்காகக் கூறியதேனும், அது கேட்ட அவன் அறிவு அப்பொழுதே கலங்கிவிட்டது; அவன் உடல் அச்சத்தால் நடுங்கிற்று; தன் மனைவி அறிந்து கொள்ளா வகையில், அவள், அறிந்துகொள்ளா வரை, அஞ்சாது பிழை புரிந்த அவன் தன் தவறு அவளுக்கு அறிவிக்கப் பெறும், தவறிய தன்

ஒழுக்கக் கேட்டினை அவள் உணர்ந்து விடுவள் என்பதை அறிந்தவுடனே அஞ்சினன். அஞ்சிய அவன் நிலையினைத் தன் தோழியிடம் கூறி எள்ளி நகைத்தாள் அப்பரத்தை. அவ்வாறு நகைக்கு முகத்தான், அவன் ஒழுக்கத்தின் உயர்வை, ஒழுக்கத்தில் இழுக்கினமை கண்டு கலங்கும் அவன் உள்ளச் சிறப்பினை உலகிற்கு உணர்த்தினள்.

> " உள்ளுதொறும் நகுவேன் தோழி !...ஊரன்
> தேம்கமழ் ஐம்பால் பற்றி, என்வயின்
> வான்கோல் எல்வளை வெளவிய பூசல்
> சினவிய முகத்துச் சினவாது சென்று, நின்
> மனையோட்கு உரைப்பல் என்றலின்,...முழவின்
> மண்ணார் கண்ணின் அதிரும்
> நன்னராளன் நடுங்கு அஞர் நிலையே."1

**காதல் :**

கூடி வாழும் இயல்புடையவர் மக்கள். அம் மக்களைப் பிற உயிர்களினின்றும் பிரித்துப் பெருமை செய்வதற்குக் காரணமாவது, கூடி வாழும் அவ்வியல்பே. மக்களை அவ்வாறு ஒன்றுகூட்டி வாழவைப்பது அன்பு. அன்பு பல்வேறு தொடர்புகளில் தோன்றும ; பெற்றோர்க்கும் மக்களுக்கு மிடையே நிலவும் அன்பு ; ஆண்டவனுக்கும் அடிமைக்குமிடையே நிலவும் அன்பு ; நண்பர்களிடையே நிலவும் அன்பு எனத்தொடர்பால் அது பலவகைப்படும்.

---

1. நற்றிணை : 100. பரணர்.

உள்ளுதொறும்-நினைக்குந்தோறும். ஊரன்-மருதநிலத்து ஊருக்கு உரிய தலைவன். தேம் கமழ் ஐம்பால்-எண்ணெய் மணம் வீசும் ஐவ்வகையாகப் பின்னப்பட்ட கூந்தல். என்வயின்-என்னிடம். வான்கோல்-சிறந்த வேலைப்பாடமைந்த. எல்வளை-ஒளிவீசும் கைவளை. வெளவிய பூசல்-வளைகழலுமாறு பிரிந்து செய்த துயரம். மண் ஆர் கண் - மண்பூசப் பெறும் முழவின் தோல். அஞர்-துன்பம்.

நிற்கும் நிலையற்று, இயங்கும் இயல்பினவாயகோள்கள், தத்தம் நிலையிற் பிறழாது நின்றே இயங்குதல், பிறிதொரு பொருளைத் தம்பால் ஈர்க்கும் அவற்றின் ஈர்ப்பு ஆற்றலால் ஆதல் போல், இனத்தால், நிறத்தால் இன்னபிற வகையால் பல நிறப்பட்ட மக்கள், ஒன்று கலந்து வாழ்வது, அவர்களிடையே, முற்கூறிய பல்வேறு தொடர்பு குறித்துத் தோன்றி விளங்கும் அன்பின் ஆற்றலால் என அறிக. அப்பலரையும் ஒன்றுபடுத்துவது, அவ் வேற்றுமையுள் ஒற்றுமை காண்பது, அன்பு.

அன்பு எல்லோரிடத்திலும் உளது என்றாலும், அது ஒத்த சிறப்புடையதாதல் இல்லை. பெற்றோர் தம்மக்களிடம் காட்டுமளவு அன்பை, அம்மக்கள் அப்பெற்றோரிடத்துக் காட்டுவதில்லை. பெற்றோர் காட்டும் அன்பு பெரிதாம்; "தாயினும் சிறந்த தயாபரன்;" "பால் நினைந்து ஊட்டும் தாயினும் சாலப்பரிந்து" என அத் தாயின் அன்பு, இறைவன் அன்பினும் சிறந்தது எனும் பொருள்படப் பாடிப் பாராட்டியுள்ளனர் பெரியோர். மக்கள் காட்டும் அன்பு. அளவால், தன்மையால் அப் பெற்றோர் அன்பினும் குறைந்தே தோன்றும். ஆண்டானுக்கும் அடிமைக்கும், நண்பர் இருவர்க்கும் இடையே தோன்றும் அன்பும் அத்தகையதே; ஆனால் கணவன் மனைவியர்க்கிடையே தோன்றும் அன்பு அத்தகையதன்று; கணவன் தன் மனைவியிடத்துக் காட்டும் அன்பினும், மனைவி தன் கணவனிடத்துக்காட்டும் அன்பு மிகுவதோ குறைவதோ இல்லை. அவ் அன்பு ஒத்த பண்புடையதாகும்; அதனாலேயே கணவனையும் மனைவியையும் பற்றிப் பாக்கள் பலபுனைந்து பாராட்ட முன் வந்த பழந்தமிழ்ப் பெரியார்களெல்லாரும், ஒத்த கணவனும் ஒத்த மனைவியும் என ஒருமைப்பாட்டினை விதந்து கூறிச் சென்றனர். அவ்விருவரிடையே உண்டாம் அன்பில் ஒருமைப்பாடு

இன்றேல், அவர்கள் உண்மைக் கணவனும் மனைவியு மாதல் இல்லை.

அவ்வாறு கணவன் மனைவியர்க்கிடையே தோன்றி ஒத்த இயல்புடையதாகும் உயர்ந்த அன்பையே பெரியோர்கள் காதல் எனும் கவின் மிகு பெயரிட்டு அழைத்தனர். அக்காதலும் இயற்கையானதாதல் வேண்டும்; தானே தோன்றித் தன்னளவிலேயே வளர்ந்த தாதல் வேண்டும் ; அவ்விருவரிடையே, அக்காதலைப் பிறர் கொண்டு வந்து புகுத்துதல் கூடாது ; கூடாது என்பது மட்டுமன்று ; அது இயலவும் இயலாது. இரும்பும் காந்தமும் பொருந்தும் தன்மைபோல் இருவர் சிந்தையும் இயல்பாய் உருகி, ஒன்றும் தன்மையாதலே காதலல்லது, அக்காதல் ஒருவரால் ஆக்கப்படுதல் ஆகுமோ ?

காதலின் இவ்வுண்மையியல்பை உணர்ந்தவன் அக்கால ஆண்மகன். தான் விரும்பும் பெண்ணிற்கும் தன்பால் விருப்பம் உண்டாதல் வேண்டும் ; அவ்வாறு தன்னை விரும்பாத ஒரு பெண்ணை, அவள்பால் தனக்கு விருப்பம் உண்டாகி விட்டமையினாலேயே வற்புறுத்தி மணந்துகொள்ளும் மணமுறையினை அவன் அறியான். தான் விரும்பும் ஒரு பெண், தன்னை விரும்பி மணந்து கொள்ளும்வரை பொறுத்திருக்கும் பேராண்மை உடையவன். தன்னிடத்தில் அவளுக்கும் காதல் உணர்ச்சி உண்டாமாறு, அவள்பால் பலமுறை சென்று, அவள் விரும்பும் செயல்களை அவள் ஏவா முன்பே செய்து, அவள் பின்னால் திரிந்து, அவளைப் பணிந்து நிற்பன். அம்மட்டோ ? அவள் காதலைப் பெறவேண்டின், அவள் தோழியின் துணைவேண்டும் என்பதை அறிவனாயின், அத்தோழியைப் பலமுறை சென்றுகண்டு, பணிந்து

குறைகூறி நிற்கவும், அவள் அருளைப் பெறவும் அஞ்சாது அவன் காதல் உள்ளம்.

அழகிய ஒரு மாளிகை; அம்மாளிகையின் முன் புறத்தே நிற்கும் நெடிய அழகிய தேர், அம்மாளிகை வாழ்வாரின் செல்வச் சிறப்பை உணர்த்துவதாய் இருந்தது. மனக்கவலை யற்று மகிழ்ந்து வாழும் அவர் இன்ப வாழ்வினை எடுத்துக்காட்டுமாறு பரந்துகிடந்தது நிலவொளிபோலும் வெண்மணல், அம் மணற் பரப்பில் தன் தோழியோடு பந்தாடிக்கொண்டிருந்தாள் ஒரு பெண். அவர்கள் ஆடிக்கொண்டிருக்குங்கால் ஆங்குவந்த ஓர் ஆண்தகை, செல்வச் சிறப்புத் தோன்ற நிற்கும் அம் மாளிகையையும், தோழியர் பலர்சூழ ஆடிக்கொண் டிருக்கும் அப்பெண்ணையும் கண்டான்; அவள்பால் காதல் கொண்டான்; எவ்வாருயினும் அவளையே தன் மனைவியாக்கிக் கொள்ளுதல்வேண்டும் எனக்கருதினான். ஆனல், அவளோ, அவன் காதலையோ கருதாது, தன் ஆட்டத்திலேயே கருத்தாயிருந்தாள் அப்பெண். அதனல் அவனைப் பொருட்படுத்தாதே, தன் ஆடல் முடிந்ததும் மனைபுகுந்து மறைந்து விட்டாள். அவள் மறைவு அவனுக்குப் பெரிதும் ஏமாற்றமாயிற்று. அவள மறைந்துவிட்டாளாயினும், அவள் தோற்றம் அவன் மனக்கண்ணினின்றும் மறைந்திலது. அவளையே நினைந்து வீடு சென்றான். அந்நினைவு மிகுதியால் உறக்கமும் அற்றுத் துயர் உற்றான். பொழுது புலர்ந்ததும் அவள் மனை நோக்கிச் சென்றான். வழக்கம்போல், அவளும் தன் தோழியரோடு வெளியே வந்து, சிறிது நாழிகை ஆடியும் பாடியும் மகிழ்ந்திருந்து மனை புகுந்தாள். அவள் அன்பைப் பெறுதல், அவனுக்கு அன்றும் இயலாது போயிற்று; இவ்வாறே நாள்பல கழிந்தன. அவள் அன்பைப் பெறமாட்டாக் கவலையால், அவன் உடல்

நலமும் கெட்டது. ஆயினும் அவள்பால் கொண்ட காதலை அவன் மறந்திலன்; அவள் அன்பைப் பெற்றாலல்லாது அவன் நலம் பெறல் இயலாது என்று கருதும்படியாகிவிட்டது அவன் நிலை. அதனால், அவள் மனை நோக்கிச் செல்வதை மறக்காது மேற் கொண்டான். அவன் செயல், அவன் உள்ளத்திற்கே ஒவ்வாதாயிற்று. ஒரு நாள், அவன் மாளிகை நோக்கிச் செல்லக் கருதிய வழி, அவ்வுள்ளம், அவனை நோக்கி, "அன்ப! ஒரு பெண்ணின் பின் சென்று பணிந்து நிற்பது நின்பெருமைக்குப் பொருந்தாது. ஆயினும், பல நாள் சென்று பணிந்து நிற்கின்றனை நீ; ஆனால், அவளோ நின்னைப் பார்ப்பதும் செய்திலள். தான் உண்டு, தன் தோழியர் உண்டு, தன் பாட்டும் பந்தாட்டமும் உண்டு எனச் செல்கிறாள். இவ்வாறு நின்னைப் பாராமுகம் செய்வாள்பால் பரிவுகாட்டுதல் பேரிழுக்காம்; ஆகவே அவளை மறந்து மனந்தெளிவாயாக; என் சொல் கேட்டு, அவண் செல்வதைக் கைவிடக் கருதாயேல், நின் செய்கைக்கு இனியான் இசையேன்" என்று கூறிற்று. அது கேட்ட அவன், "என் நெஞ்சே! நீ கூறுவது அனைத்தும் உண்மை; ஆனால், என் துயர் போக்குவாள் அவள் ஒருத்தியே; என் காதல் நோய்க்குக் கைகண்ட மருந் தாவாள் அவளே; ஆதலின், அவளைக் காணாது ஒரு நாளைக் கழித்தலும் என்னால் இயலாது; அவள் என்னை அருளி ஆட்கொள்ளினும், அல்லது அறவே கைவிடினும் அதை யான் கருதேன்; அவள் இருக்கும் இடம் அடைந்து அவள் பின்சென்று பணிந்து திரிவதையே யான் விரும்பு கின்றேன்; போகும் என் உயிரைப் போக்காது காத்து நிற்பது அச்செயல் ஒன்றே; ஆகவே, என் நல்வாழ்வில் நாட்டம் கொண்டுள நல்ல என் உள்ளமே! அவள் பின் சென்று, திரிதலைச் சினந்து வெறுக்காது, விரும்பி

உடன் வருவாயாக'' என வேண்டிக் கொண்டான். மானத்தையும் மதியா அவன் காதல்மாட்சிதான் என்னே !

'' பெருங்கண் ஆயம் உவப்பத், தந்தை
நெடுந்தேர் வழங்கும் நிலவு மணல் முற்றத்துப்
பந்தொடு பெயரும் பரிவுஇல் ஆட்டி,
அருளினும், அருளாள் ஆயினும், பெரிது அழிந்து
பின்னிலை முனியல், மாநெஞ்சே ! என்னதூஉம்
அருந்துயர் அவலம் தீர்க்கும்
மருந்து பிறிதுஇல்லை யான்உற்ற நோய்க்கே.''1

இவ்வாறு நாள்தோறும் அவளைக் காணச் செல்லும் அவன், அவளைக் காணும் ஆர்வமிகுதியால், ஒருநாள் விரைந்தோடும் தேர் ஏறிச் சென்று காண்பன் ; ஒரு நாள் கால் வலிக்க வலிக்கக் காதல் மிகுதியால், அக்கால் வலியையும் பொருட்படுத்தாது நடந்தே சென்று காண்பன் ; அவளை அவள் மாளிகைக்குச் சென்று காண்பதோடு நில்லாது, அவள் செல்லும் இடந்தோறும் நிழல் போல் சென்று கண்டு மகிழ்வன். அவள் கடற்கரைக்குச் செல்லின், அவனும் ஆங்குச் செல்வன் ; ஆங்கு அவளுக்கும், அவள் தோழியர்க்கும் அடும்பின் மலர்மீது ஆர்வம் எழுதலைக் குறிப்பால் அறியின், அப்பொழுதே அம்மலரைக் கொய்து கொடுப்பன் ; அம்மட்டோடு நில்லாது, அவர் விரும்பா முன்பே, தாழை மலரை ஏறிப் பறித்தும், நெய்தல் மலரை நீந்திப் பறித்தும் தருவன் ;

1. நற்றிணை : 140. பூதங் கண்ணனார்.

ஆயம்-தோழியர் கூட்டம். முற்றம்-மனையின் முன்புறம். தேர்வழங்கும் முற்றம், மணல் முற்றம் எனக் கூட்டுக. பெயரும்-செல்லும். பரிவு இல் ஆட்டி-நம்பால் அன்பின்மையை ஆளும் அவள். அதாவது நம்பால் அன்பு இல்லாதவள். பெரிது அழிந்து-மிகவும் வருந்தி. பின்நிலை-பின்சென்று பணிந்து நிற்கும் இழிநிலை. முனியல்-வெறுக்காதே, என்னதூஉம்-எவ்வளவும். அருந்துயர் அவலம்-கொடிய காமநோயால் யான் உற்ற துயரை.

தந்த மலர்களை, அவர்கள் மறுக்காது ஏற்றுக்கொள்ளக் காணின், அவள் அன்பை அரிய காதலை அடைந்து விட்டாற்போல் அகமகிழ்வன்; அவன் நிலை இது; ஆனால் அவளோ, ஒரு நாளாவது, அவனை அணுகி ஏதும் கேட்டவளல்லள்; அவள் போக்கு அவனுக்கு வியப்பூட்டிற்று; "ஓர் ஆண்மகன், அதிலும் அறிமுகமில்லாதவன், என்பின் திரிகின்றனன்; அதில் அவனுக்கு வெறுப்புத்தட்டுவதாகவும் தோன்றவில்லை; என்னென்பது இவனை; ஏன் இவன் என்னைச் சுற்றித் திரிகிறான்; இவன் செயலுக்கு யாதேனும் காரணம் உண்டுகொல்? அல்லது, அது அவன் அறியாமை வயப்பட்டதுதானோ? என்று அவள் என்றேனும் என்னைப் பற்றி எண்ணிப் பார்ப்பது உண்டுகொலோ என்று எண்ணி ஏங்கிற்று அவன் உள்ளம்; அவ்வேக்கம், அவன் காதற்றூய்மையினைக் காட்டி நிற்றல் காண்க.

" கடுந்தேர் ஏறியும், காலிற் சென்றும்
கொடுங்கழி மருங்கின் அடும்புமலர் கொய்தும்,
கைதை தூக்கியும், நெய்தல் குற்றும்
புணர்ந்தாம் போல உணர்ந்த நெஞ்சமொடு
வைகலும் இனையம் ஆகவும்......
பின்நிலை முனியா நம்வயின்
என்என நினையுங்கொல் பரதவர் மகளே."

நாட்கள் பல சென்றன; அவன் உள்ளத்தை, அவன் காதற்பெருமையை அப்பெண்ணும் அறிந்துகொண்டாள். ஆனால், அவள் பெண்மை அதை மறைத்துவிட்டது;

1. நற்றிணை : 349. மிளைகிழான் நல் வேட்டனார்.

கடுந்தேர்-விரைந்ததேர். கொடுங்கழி-வளைந்து வளைந்து செல்லும் உப்பங்கழி. கைதை-தாழம்பூ. தூக்குதல்-பறிக்கத்தூக்குதல். குற்றும்-பறித்தும். வைகலும்-நாள்தோறும். இனையம்-இத்தன்மையம். முனியா-வெறுக்காத; நம்வயின்-நம்மைப் பற்றி. பரதவர்-நெய்தல் நிலத்து மக்கள்.

அதனால், அவள் அவனை அணுகி ஏதும் வினவிஞளல்லள்; ஆனால், அவன் காதற்றூய்மையைக் கண்டு, அவன் பெருமை அறிந்து, தனக்குள்ளே வியந்த அவள் தோழி, அவனைக் கண்டு பாராட்டவேண்டும் என விரும்பினாள். ஒருநாள் அவன் வழக்கம்போல் வந்து, அப்பெண்கள் விளையாடற்காக வேண்டி மணல் வீடு கட்டித் தந்தான்; அம்மணல் வீட்டை அழிக்கவரும் கடல் அலைகளைக் காலால் உதைத்துத் தடுத்தான்; மலைபோல் உயர்ந்து தோன்றும் மணல்மேட்டின்மேல் ஏறி, ஆங்குப் படர்ந்து கிடக்கும் அடும்பு மலர்களைப் பறித்துக் கொணர்ந்து கொடுத்தான். அந்த அளவோடு நில்லாது அம்மகளிரை அணுகி அவர் விரும்புமாறு இனிய கதைகள் பலவும் கூறினான்; ஆனால், தான் செய்த உதவிக்கு நன்றி தெரிவித்தோ, தன் மொழிக்கு விடையளித்தோ வாய் திறவாது நிற்கும் அவர் செயல்கண்டு உள்ளம் உறுதுயர்கொள்ளத் தளர் நடையிட்டு மெல்ல நடந்து தன்னூர் நோக்கிச் செல்லத் தொடங்கினான். அவனை அந்நிலையில் கண்டு மனம் இரங்கினாள் தோழி; அதனால் அவனை அப்பெண் அறியாவாறு கண்டு பாராட்டு முகத்தான், அவன் முயற்சிக்குத் துணைபுரியத் துணிந்தாள். அவன் காதல் வெற்றிபெற்றது.

“ வண்டல் தைஇயும், வருதிரை உதைத்தும்,
குன்றுஓங்கு வெண்மணல் கொடி அடும்பு கொய்தும்
துனிஇல் நன்மொழி இனிய கூறியும்,
சொல் எதிர் பெறுஆயாகி, மெல்லச்
செலீஇய செல்லும் ஒலிஇரும் பரப்ப !” 1

---

1. நற்றிணை : 254. உலோச்சனார்.

வண்டல்-வண்டல் மண்ணால் கட்டும் வீடு. தைஇ-கட்டி. திரை-அலை. குன்று ஓங்கு-மலைபோல் உயர்ந்த. துனிஇல்-வருத்தம் இல்லாத, இனிய. செலீஇய-செல்லுதற்பொருட்டு.

மகளிர்க்கு, மெல்லியல் நல்லார் எனும் பெயர் சூட்டியவன் தமிழ்மகன்; அக்கால ஆண் மகன், மகளிரின் மென்மைத் தன்மையை உணர்ந்திருந்தான்; மகளிர், மலரினும் மெல்லியர்; வாழ்க்கையில் சிறிது வருத்தம் நேரினும் அவர் உள்ளம் வாடும்; துயர் தாங்கும் உரம் அவர் உள்ளத்திற்கு இல்லை. அதனால், அவர் உள்ளமும் உடலும் ஒரு சிறிதும் தளராவாறு, அவரை ஓம்பி வந்தான்; உள்ளம் வருந்துதற் கேதுவாய நிகழ்ச்சியோ, உடல் வருந்துதற் கேதுவாய உழைப்போ நேர்ந்த வழி, இனிய, உரைபல வழங்கியும், அவர் தம் இனிய பண்புகளை எடுத்துப் பாராட்டியும், அவர் அவ்வருத்தத்தை மறந்து, மகிழ்ந்து வாழுமாறு செய்தான்.

ஓர் ஆண்மகன், தன் இளம் மனைவியோடு வெளியூருக்குச் செல்ல வேண்டியதாயிற்று; கடந்து செல்ல வேண்டிய வழி, நிற்கவும் நிழல் இல்லா வறண்ட பாலைவனங்களைப் பெற்றிருந்தது. வழியின் இவ்வியல்பினை அவள் அறிந்திருந்தாள். அதனால் அவ்வழியைக் கடந்துசெல்ல அவள் உள்ளம் சிறிதே நடுங்கிற்று. அவள் உள்ளநிலையை, ஒருவாறு உணர்ந்து கொண்டான் அவன். அச்சத்தோடு வருவாளை அழைத்துச் செல்லுதல் கூடாது; அவள் மகிழ்ந்து வருதல் வேண்டும்; காதலனோடு வழியைக் கடந்து செல்ல வேண்டும் எனும் ஆசை உள்ளத்தைத் தூண்ட, உவந்து வருதல் வேண்டும் என உணர்ந்தான். அவளை அணுகி, "பெண்ணே! கடந்து செல்லவேண்டிய வழி மரம் செறிந்த காடுகளையும், நிழலின்றி நீண்ட பாழும் பாலை நிலங்களையும் உடைத்து என்பது உண்மை; ஆனால், அக்காடு நீ நினைப்பதுபோல் கொடுமையுடையதன்று; ஆங்குள்ள மரங்கள் புதிய தளிர் ஈன்று தண்ணெனக்

குளிர்ந்திருக்கும் ; வழிநடை வருத்தமே சிறிதும் தோ ருது ; வெய்யிலின் வெப்பம் நம் மேனியில் படாது ; அ மட்டோ ! அம்மரங்களின் மலர்மணம் நம்மை மகி விக்கும் ; மாவின் இளந்தளிரைக் கோதி, மகிழ்ந்து கூவு குயிலின் குரல், காதுகளில் இசைத்தேனைப் பாய்ச் இன்ப வெள்ளத்தில் ஆழ்த்தும் ; அத்தகைய அரி அழகுடையது அக்காடு. காட்டைக் கடந்தால் வரு பாலை நிலனும் நிழலற்ற பாழிடம் அன்று ; வருவார்க் நிழல் தரும் மரங்கள் வழியில் இல்லை என்பது உண்மை ஆனால், அவை இல்லாக் குறையை, அவ்வழியின் இ மருங்கிலும், அடுத்தடுத்துவரும் ஊர்கள்போக்கிவிடும். வ நெடுகச் சிறியவும் பெரியவுமான ஊர்கள் பல ஆங்காங் உள்ளன. வருவாரை விருந்தேற்றுப் பேணும் பேருள்ள வாய்ந்த மக்களின் வாழ்விடம் அவ்வூர்கள் ; வ இத்துணை இனியது, இடர் அற்றது ; ஆதலின், விரைந்து நடக்கவேண்டுவதுமில்லை. நீ விரும்பியவா வேண்டுமிடங்களில் இருந்து இருந்து, நிழல் காணு இடங்கள் தோறும் நீண்டநேரம் இளைப்பாறி, மண பரந்து மகிழ்ச்சியூட்டும் இடங்கள் தோறும் மணல் வீ கட்டி, மண்பாவை புனைந்து விளையாடி மகிழ்ந்து செல் லாம் ; ஆகவே வழியைக் கடக்க வருந்த வேண்டி தில்லை " என்று கூறி, "செல்லும் வழி அவ்வள நல்லதா ? அதில் நாமும் நடந்து மகிழ்வேமோ !" என ஆர்வம் அவள் உள்ளத்தில் எழுப்பண்ணி, உடனழைத்த சென்றான்.

"நிழல் காண் தோறும் நெடிய வைகி,
மணல் காண் தோறும் வண்டல் தைஇ
வருந்தாது ஏகுமதி, வால் எயிற்றோயே !
மாநனை கொழுதி மகிழ்குயில் ஆலும்

நறும் தண் பொழில கானம் ;
குறும்பல்ஊர யாம் செல்லும் ஆறே.''1

காட்டு வழியைக் கடந்து செல்கிறார்கள். காதலி முன்னே செல்ல, அவள் நடை அழகு கண்டு மகிழ்ந்த வண்ணம், அவளைப் பின் தொடர்ந்து செல்கிறான் காதலன். அவ்வாறு செல்வான், அவள் நடையில் சிறிது விரைவு தோன்றக் கண்டான், அவள் நடையழகில் மகிழ்ந்து நினைவிழந்திருந்த அவன், அவ்விரைவு கண்டு அஞ்சினான் ; அவ்விரைவிற்குக் காரணம் யாது என நோக்கினான் ; தலை நிமிர்ந்து, செல்லும் வழியைப் பார்த்தான். செல்வாரின் கால்களைச் சிதைக்கும் கூர்மை வாய்ந்த பரல் கற்கள் பரவிக்கிடந்தன. அலை கொணர்ந்து குவிக்கும் மணல் பரந்த இடத்தில் வாழ்பவள் அவள். அம் மணல் மீது, புன்னை மலர்கள் உதிர்ந்து மணம்வீசும் இடங்களில் மட்டுமே நடந்து பழகியன அவள் அடிகள் ; அவ்வடிகள், பரல் பரந்த இப்பாலை நிலத்தில் படும் துன்பமிகுதியால் துடி துடித்தன. மேலும், வழியின் இரு மருங்கிலும் கண்ணொளி புகாக் காடுகள் ; அக் காட்சி அவள் உள்ளத்தில் அச்சத்தை ஊட்டிவிட்டது. அச்சம் மிக்க அவ்விடத்தை விரைந்து கடக்க வேண்டும் என விரும்பிற்று அவள் உள்ளம் ; இவையே அவள் விரைவிற்குக் காரணமாம் என உணர்ந்தான். உடனே, பின் தொடர்ந்து சென்றவன், விரைந்து முன் வந்து அவளைத் தடுத்து நிறுத்தினான். அவள் காலின் மென்மையைப் பாராட்

---

1. நற்றிணை : 9. பாலைபாடிய பெருங்கடுங்கோ.

வைகி-தங்கி. வண்டல்-மணல்வீடு அமைத்து ஆடும் விளையாட்டு. தைஇ - புனைந்து. வால் - ஒளிவீசும். எயிற்றோய் - பற்களை உடையோய். மாநனை-மாமரத்தின் அரும்பு. கொழுதி-அலகுகளால் கோதி. ஆலும்-கூடி விளையாடும். பொழில-பொழில்களை உடைய. ஆறு-வழி.

டினன். கல்பட்டுச் சிவந்த கொடுமையைக் காட்டினன். "காட்டின்கொடுமை கண்டு அஞ்சாதே; ஆண்மையில் ஆற்றலில், மிக்க யான் உடன் வரவும் நீ அஞ்சுவது ஏன்? அஞ்சவேண்டிய நிலைவரினும் அஞ்சற்க; அச்ச மிகுதியால் விரைந்து செல்லற்க; தளர்ச்சி சிறிதே உண்டாயினும் உடனே, அவ்விடத்திலேயே அமர்ந்து, அத்தளர்ச்சி நீங்கிச் செல்க; இதோ, எதிரில் நிற்கும் ஆலின்கீழ், அதன் அரிய நிழலில், சிறிது தங்கிச் செல்வோம் வருக" எனக் கூறினன். அவன் கூறிய அவ்வின்னுரையே அவள் தளர்ச்சியைப் போக்கிவிட்டது. அவண் நில்லாதே விரைந்து நடந்தாள்.

"ஆலநீழல் அசைவு நீக்கி,
அஞ்சுவழி அஞ்சாது, அசைவழி அசைஇ,
வருந்தாது ஏகுமதி, வால்இழைக் குறுமகள்!
இம்என் பேரலர் நும்ஊர்ப் புன்னை
வீமலர் உதிர்ந்த தேன்நாறு புலவின்
கானல் ஆர்மணல் மரீஇக்,
கல்உறச் சிவந்த நின்மெல்லடி உயற்கு."1

காதலனும் காதலியும் காட்டு வழியில் சென்று கொண்டே உள்ளனர்; ஞாயிறு மறைந்துவிட்டது. இருள் மெல்ல வந்து பரவத் தொடங்கிவிட்டது. சென்று சேர வேண்டிய ஊர் இன்னமும் கண்ணிற்குப் புலப்பட்டிலது. ஆனல், அவ்வூருக்கு முன்பாக உள்ள குன்றுகளில் ஆயர்கொண்டு வந்து மேய்க்கும் அவ்வூர் ஆனிரைகளின் கழுத்திற் கட்டிய மணிகள், அவ்வானிரைகள் புல்

---

1. நற்றிணை : 76. அம்மூவனர்.

அசைவழி–இளைப்பாறுமிடம். இழை–அணி. குறுமகள்–இளையவள். இம் என் பேரலர் – இம் எனும் ஒலி உண்டாக அலர் கூறும் ஊர். வீ–மலர். மரீஇ–நடந்து பழகி. உயற்கு–வருந்தாது இருத்தற் பொருட்டு.

மேய்தலால் ஆடும்தொறும் எழுப்பும் ஒலிமட்டும் கேட்கத் தொடங்கிவிட்டது. அதனால், ஊர் நெருங்கிவிட்டது என்பதையும், சிறிது விரைந்து நடந்தால், இருள் வந்து பரவுவதற்கு முன்னரே ஊர் சென்றடையலாம் என்பதையும் உணர்ந்தான். ஆயினும், நட எனக் கூற அஞ்சிற்று அவன் உள்ளம்; மெல்ல அவள் அருகிற் சென்றான். "காதலி! அதோ கேட்கிறதே மணி ஒலி அது எங்கிருந்து வருகிறது தெரியுமா? அது, ஆனிரையின் கழுத்திற் கட்டிய மணிகளினின்றும் எழுந்ததாகும். அதோ தெரிகிறதே ஒரு சிறுமலை; அங்குத்தான் மேய்கிறது அவ்வானிரை; அவ்வானிரை நாம் செல்லும் எம் ஊரைச் சேர்ந்தது. அவற்றின் மணி ஒலிதான் நீ கேட்பது, ஆகவே ஊர் நெருங்கிவிட்டது; இனி நெடுந் தொலைவு நடக்க வேண்டியதில்லை. மேலும் ஞாயிறு மறைய, இருள் பரவி விடுமாதலின், நின் அழகைக் கண்டு மகிழ்தல் இனி இயலாது. நின் நடை அழகைக் கண்டு மகிழும் வாய்ப்பு இனி எப்போது வாய்க்குமோ? மலர் சூடிய நின் கூந்தலும் அம்மலரும், காற்றில் அலைந்து பறக்குமாறு காட்டி, அவ்வழகைக் கண்டு யான் மகிழுமாறு, நீ சிறிது விரைந்து நடப்பாயாக," என்று கூறினான். அவன் சொல்லில் மயங்கி, அவனை மகிழ்விக்க வேண்டும் எனும் ஆர்வம் மிகுந்து வழி நடை வருத்தத்தையும் பாராது அவள் விரைந்து நடந்தாள்.

"பொழுது போய்விட்டது; ஆகவே விரைந்து நட" என ஆணையிடுதல் அன்பு நெறி ஆகாது என அறிந்து, அவளே விரும்பி விரைந்து செல்லுமாறு இனிய உரை பல வழங்கியும், ஊர் கண்ணிற்குப் புலப்படாத் தொலைவில் உள்ளதாகவும், அது அண்மையில் உள்ளது போலும் என உணர்ந்து, அவ்வுணர்வால் ஊக்கம் மிகுந்து விரைந்து செல்லுமாறு விரும்பும் சொற்களை வழங்கியும்

வழி நடை வருத்தம் தோன்றாமாறு அழைத்துச் செல்லும் அவன் காதல்உள்ளத்தை எவ்வாறு புகழ்வது ?

"நின், வீபெய் கூந்தல் வீசுவளி உளர
ஏகுதி மடந்தை! எல்லின்று பொழுதே ;
வேய்பயில் இறும்பில் கோவலர் யாத்த
ஆபூண் தெண்மணி இயம்பும்
உதுக்காண் தோன்றும் எம் சிறுநல் ஊரே."1

**கடமை :**

உலகில் பிறந்த ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு கடமை விதிக்கப்பட்டுள்ளது. அக்கடமையில் வழுவாது வாழ்பவரே உயர்ந்த வாழ்வினராவர். கடமையை மறந்தவர், மனிதப் பண்புடையவராகார் ; ஆனால் காதலை நோக்கக், கடமை ஆற்றல் வாய்ந்ததன்று; காதல் கடமை எனும் இரண்டனுள் பேராற்றல் வாய்ந்தது காதல். காதல் வெறி, கடமையை மறக்கச் செய்யும்; காதலில் ஊறிய கருத்துடையார், கடமை உணர்ச்சியும் உடையராதல் இயலாது. காதல் அற்றவர் உள்ளத்தில் கனிவு தோன்றாது ; அன்போ, அருளோ அவர் உள்ளத்தில் அரும்பாது. ஆதலின் காதல் உள்ளம் ஒவ்வொருவருக்கும் வேண்டும். ஆனால், அக் காதல், கடமையை மறக்கச் செய்யுமளவு வெறி பிடித்து விடுதல் கூடாது. காதல் உடைமையால், கடமையைக் கைவிடுவார், மக்கட் பிறவியினராகார். காதலும் வேண்டும்; கடமையை மறவாமையும் வேண்டும், அவரே உயர்ந்தோர் ; உலகியல் உணர்ந்தோர் ; அன்பும் அறநெறி நிற்றலும் வாய்க்கப் பெற்ற அறிஞராவர்.

---

1. நற்றிணை : 264. ஆவூர்க்காவிதிகள் சாதேவனார்.

வீ-மலர். பெய்-அணிந்த. வளி-காற்று. உளர-பறந்து அலைய. எல்லின்று-ஒளி மழுங்கியது. வேய்-மூங்கில். பயில்-மிக்க. இறும்பு-சிறு குன்று. யாத்த-கட்டிய. உதுக்காண்-அதோ பார்.

இதை உணர்ந்தவன் நற்றிணை நாட்டு நல்லோன்; கருத்திற்கிசைந்த காதலியை மணந்து மேற்கொண்ட மனையற வாழ்வு, விருந்தினர்க்கு வாழ்வளிக்கும், வறுமையால் வருந்துவார்க்கு வாரி வழங்கும், நட்டோர்க்குத் துணை புரியும்நலம் உடையதாதல் வேண்டும் என விரும்பி அவ்வாழ்வு பெறத் துணைபுரியவல்லது பொருள் என உணர்ந்து, அப்பொருளைத் தேடிப் பெறுதல் வேண்டும் எனும் கடமையுணர்வு வாய்க்கப்பெற்றவன் அவன். காதலால் தான் பெறும் இன்பத்திலும், கடமையை நிறைவேற்றுவதால் பெறும் இன்பம் குறைவுடையதன்று; மாறாகப் பிறர்க்குப் பயனும் பெருமையும் உடைத்து என உணரும் உள்ளம் உடையவன்.

ஒரு வினையைத் தொடங்கி வெற்றிகாணல் அவ்வளவு எளிதன்று; கருமமே கண்ணாயிருப்பவர் மெய் வருத்தம் பாரார்; பசி நோக்கார்; கண் துஞ்சார்; எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்; செவ்வி அருமையும் பாரார்; அவமதிப்பும் கொள்ளார்; இவ்வளவு கட்டுப்பாடாயிருப்பவரே, எடுத்த காரியத்தில் வெற்றி பெறுவர்; இவ்வளவு ஊக்கமும் உறுதியும் காட்டி உழைத்த விடத்தும், காரியம் கைகூடாமல் போதலும் உண்டு; ஒன்றை நினைக்கின் அது ஒழிந்திட்டு ஒன்று ஆகும்; அன்றி அதுவரினும் வந்து எய்தும்; ஒன்றை நினையாத முன் வந்து நிற்பினும் நிற்கும் எனும் உலகியல் உண்மை, எடுத்த வினையில் வெற்றி காணல் எத்துணை இடர்ப்பாடு உடைத்து என்பதை எடுத்துக் காட்டுவது அறிக. உலகியல் நிலை இதுவாக, ஒருவர் ஒரு வினையைப் பலகாலும் எண்ணி எண்ணிப் பார்த்து இறுதியில் தொடங்கி, இடையில் நிகழ்ந்த இடையூறுகளையெல்லாம் எதிர்த்துப் போராடிப் போக்கிக், கடைசியில் முடித்து வெற்றி பெற்றாராயின், அவர் உள்ளத்தில், அக்

காலத்தில் ஊற்றெடுத்துப் பாயும் பேரின்பத்திற்கு ஓர் எல்லை காணல் இயலுமோ? தொடங்கிய வினையில் வெற்றி கண்டார் கொள்ளும் இன்பத்தினை அளவிட்டுக் காணல் இயலாது; அவ்வின்பத்திற்கு இணையான இன்பம் வேறு எங்கும் இல்லை. அவ்வின்பம் ஒப்பும் உயர்வும் அற்ற பேரின்பமாம். அவ்வின்பத்தின் இயல் புணர்ந்த அக்காலத் தமிழ்மகன், அது, தன் மனைவியால் தான் பெறும் இன்பத்திற்கு நிகராம் "வினைக் கண் வெற்றி பெற்ற வழிப் பிறக்கும் பேரின்பத்திற்கு நிகராம் என் மனைவி தரும் பேரின்பம்; கடமை இன்பத்திற்கு நிகராம் காதல் இன்பம்" எனக் கூறிக் கடமையின் பெருமையினைக் காட்டியுள்ளான்;

"வினை முடித்தன்ன இனியோள்."[1]

காதலையும் கடமையையும் ஒப்ப மதித்து, இரண்டனுள் எதையும் கைவிடல் இயலாது கலங்குவன் ஒருவன்; ஒரு நாள் பொருளின் இன்றியமையாமையினை உணர்ந்தான்; இன்பம் அளிப்பது பொருள்; ஈகைக்கு வழி செய்வது பொருள்; புகழைத் தருவது பொருள்; அப்பொருள் வீட்டையும் நாட்டையும் மறந்து சென்று வருந்தித் தேடுவார்க்கே வாய்க்கும் என அறிந்தான். அதனால் பொருள் தேடிப் போகத் துணிந்தான். ஆனால் அவனோ அண்மையில் மணம் செய்து கொண்டவன். கவின் மிக்க காரிகையின் காதலால் கட்டுண்டவன். செவ்வரி பரந்து அன்பு காட்டும் அவள் கண்ணழகிற்கு அடிமைப்பட்டவன். அதனால் அவளைப் பிரிந்து போகத் தயங்கினன். பொருளின் பெருமையை ஒரு சிறிது குறைத்து மதிப்பிடவும் துணிந்தான். அதனால் கடமையில் ஊறிய அவன் உள்ளுணர்வு பொருள்தேடிப்போ

1. நற்றிணை: 3. இளங்கீரனார்.

எனத் தூரத்தவும், அவன் கேளானாயினன். அம்மட்டோ! அவ் வுள்ளுணர்விற்கே அறிவூட்டவும் முன்வந்தான். "நெஞ்சே! காதலியொடு கூடி, இல்லில் இருந்து வாழின், காதலி தரும் இன்பத்தைப் பெறலாம். ஆனால் பொருள் பெறுதல் இயலாது. காதலியைப் பிரிந்து பொருள் தேடிச் சென்றால், திரண்ட பொருள் பெற்றுத் திரும்ப லாம். ஆனால், காதலியோடு கூடி வாழ்வதால் உண்டாம் இன்பத்தைப் பெறுதல் இயலாது. ஆகவே, இவ்விரு நிலையையும் ஒப்பு நோக்கின் இரண்டும் ஒரு தன்மையவே. இரண்டிலும் ஓர் இன்பம் உளது. இரண்டும் ஒவ்வொரு வகையால் நன்மை உடையவே. ஆகவே இரண்டனுள் எதைச் செய்யினும், நீ நல்லதையே செய்தவை ஆகுவை. என்றாலும் மனைவியை மறந்து போய்த் தேடும் பொருள் நிலையற்றது. நீரில் மீன் ஓடிய வழி, சிறிது பொழுதும் நில்லாது மறைந்து அழிதல் போல் தாம் இருந்த இடமும் தெரியாமல் அழிந்துபோகும் இயல்புடையது அப்பொருள். ஆகவே, நீண்ட கடல் சூழ்ந்த இப் பரந்த உலகையே அளவு கருவியாகக் கொண்டு, ஏழுமுறை அளக்கப் பெறும் அளவுள்ள பெரும் பொருளையே பெறுவ தாயினும், யான் அதை விரும்பேன். இவளைப் பிரிந்து வாரேன். அப்பொருள் எவ்வளவு சிறப்புடையதாயினும் ஆகுக என்று கூறி மறுத்து விட்டான். காதல் வேகம், அவன் கடமையுணர்ச்சியையே கலக்கிவிட்டது போலும்!

புணரின் புணராது பொருளே; பொருள்வயின்
பிரியின், புணராது புணர்வே; ஆயிடைச்
சேர்பினும், செல்லாயாயினும் நல்லதற்கு
உரியை, வாழி, என்நெஞ்சே! பொருளே,
வாடாப்பூவின் பொய்கை நாப்பண்,
ஓடுமீன் வழியின் கெடுவ; யானே
விழுநீர் வியல்அகம் தூணிஆக

எழுமாண் அளக்கும் விழுநிதி பெறினும்
கனங்குழைக்கு அமர்த்த சேய்அரி மழைக்கண்
அமர்ந்தினிது நோக்கமொடு செகுத்தனன் ;
எனைய ஆகுக வாழிய பொருளே !''1

அவன், காதல் வெறியால் கடமையை மறந்தானாயினும், கடமையுணர்ச்சி வாய்ந்த அவன் அறிவு, அவனைக் கைவிட்டிலது. அவனுக்கு அறிவூட்டி, அவனைக் கடமையில் சிறந்தவனாக்கும் கருத்தைக் கைவிட்டிலது. அதனால், அவ்வுள்ளுணர்வு அவனை விளித்து, "அன்ப ! இன்ப நுகர்வே உனது கருத்தாயின், காதலியைக் கைவிட்டுச் சென்று தேடிப் பெறும் பொருளும், இன்பம் தரும். ஆகவே அப்பொருள் தேடிப் போகத் தயங்காதே" என்றும், "காதல் மிகுதியால் கடமையை மறப்பினும், வறுமைவருத்த வந்து, உன் வாயில் முன் நின்று இரப்பார்க்கு இல்லை எனக் கூறும் இழிநிலையினை நீ மறத்தல் இயலாது. அந் நிலையினைக் கண்டும் உயிர் வாழ்தல் உன்னால் இயலாது. அந்நிலை உண்டாகாவாறு உன்னைக் காப்பது கடமை. ஆகவே அக்கடமையுணர்ந்து, பொருள் தேடிப் போவாயாக" என்றும் அறிவுரை கூறிற்று. அவ்வறிவுரை கேட்ட அவன், அதற்கு மேலும் தயங்காது, அழகும், அன்பும் வாய்ந்த தன் ஆருயிர் மனைவியைப் பிரிந்து, பொருள் தேடி வருவான் வேண்டி, வேற்றூர் நோக்கிப் புறப்பட்டு விட்டான்.

---

1. நற்றிணை : 16. சிறைக்குடியாந்தையார்.

புணரின்-தலைவியொடு கூடி வாழின். புணராது-சேராது. ஆயிடை-அவ்விரண்டிற்கும் இடையில். நாப்பண்-நடுவே. வழியின்-வழி அழிவதைப் போல். விழுநீர்-கடல். வியல்அகம்-அகன்ற உலகம். தூணி-அளக்கும் மரக்கால். எழுமாண்-ஏழுமுறை. சேய்அரி-செவ்வரிபரந்த. மழைக்கண்-அன்பொழுகும் கண். அமர்ந்து - பொருந்தி. செகுத்தனன் - பார்வையால் அழிந்து போனேன். எனைய-எத்தன்மைய.

கடமையைக் கருதிக் காதலியை மறந்து காட்டு வழியிற் சென்று விட்டானேனும் அவளை மறந்து விடுதல் அவனால் இயலாது போயிற்று. பிரியுங்கால் அவன் கண்ட அவள் பேரழகுத் தோற்றம், அவனைப் பிரிந்து வாழ மாட்டாது அவள் கொண்ட பெருந்துயர் நிலை ஆகிய இவ்விரண்டும், அவன் உள்ளத்தை விடாது பின் தொடர்ந்தன. அவனோ இளைஞன்; காலமோ மனைவியோடிருந்து இன்புற்று வாழவேண்டிய காலம். அவளோ பேரழகுடையாள்; இந்நிலையில் அவன் உள்ளம் அவள் அழகிற்கு அடிமையாகி விட்டது.

அடிமைப்பட்ட உள்ளம், சென்று கொண்டிருந்த அவனை மேலே செல்லாவாறு தடுத்துவிட்டது. "அன்பும் அழகும் உடையாளைப் பிரிந்து வந்தது தவறு. தன் அன்பாலும் அழகாலும் இன்பம் தந்தாளைப் பிரிந்து வந்தது தவறு; அதிலும், அவள், நின்பிரிவினைத் தாங்க மாட்டாது துயர் கொண்டு வருந்துமாறு விடுத்துவருவது பெருந்தவறு. ஆகவே, உன் இன்பம் கருதியும், அவள் துன்பம் துடைத்தல் கருதியும், மேலே செல்லாது மீண்டு ஊர் செல்வாயாக" எனக் கூறியது. அவன் இயல்பாகவே காதலால் நிறைந்தவன். காதலியின் கண்ணீர் காணின், கலங்கா அவனும் கலங்குவன். அத்தகையனாதலின், தன் காதலியின் துயர் நிலையினைப் பிறர் எடுத்துக் காட்டிய பின்னரும், அவள்பால் சென்று, அவள் துயர் துடைக்காது, கருதிவந்த கடமை மேற்கொண்டு மேலே செல்வது இயலாது போயிற்று. அதனால் விரைந்து சென்று கொண்டிருந்தவன், இடைவழியில் நின்று விட்டான். அவன் கால்கள் மேலே செல்ல மறுத்துவிட்டன.

கடமை மேற்கொண்டு வந்த அவன், அவன் காதற் சிறப்பு, காதலையும் கடமையையும் கைவிட மாட்டாது

அவனுற்ற கலக்கம், உள்ளம் அவனுக்கு உரைத்தது, அது கேட்டு அவனுற்ற தடுமாற்றம், மீண்டு ஊர் செல்லத் துணிந்து நிற்கும் அவன்நிலை ஆகிய இவை யனைத்தையும் அவன் அறிவு கண்டது. உடனே அவ னுள்ளத்தை நோக்கி, "உள்ளமே! எவ்வினையையும். எண்ணின் துணிதல் வேண்டும். ஒன்றைத் தொடங் காமல் இருப்பது நன்று;தொடங்கினால் அதுவே நினைவாய் அதை முடித்தல் வேண்டும். அதன் பின்னரே வேறு வினையை எண்ணுதல் வேண்டும். அதற்கு மாறாக, ஒன்றைத் தொடங்கி, அதை இடையிலேயே கைவிட்டு, வேறு ஒன்றைக் கருதுதல் கூடாது. அது கயவர் செய்யும் செயலாம். காதலியைப் பிரிந்து வந்திருத்தல் கூடாது. வந்து விட்டோம்; வந்த வினையை வெற்றிபெற முடிக்காது, இடையே கைவிட்டு வீடு திரும்புதல் அறி வுடையோர்க்கு அழகாகாது. அஃது அறியாமை என்பது மட்டுமன்று; பிறர் கண்டு பழிக்கத்தக்க பயனில் செயலு மாம். ஆகவே, உன்னை உடையானை உயர்நிலைக்குக் கொண்டு செல்வதற்கு மாறாக, இழிநிலைக்கு இட்டுச் செல்லும் இவ்வெண்ணத்தை ஈண்டே விட்டொழிக! கடமை மேற்கொண்டு செல்வான் கால்களைக் கட்டி விடாதே" என அறிவுறுத்திற்று.

உள்ளுணர்வு உரைத்த அவ்வறவுரையினைக் கேட் டான் அவ்வாண்மகன். உள்ளம் கூறியன கேட்டு ஊர் நோக்கிப் புறப்பட்ட அவன் கால்கள், அந்நிலையே நின்று விட்டன. காதல் உள்ளம் பின்புறம் ஈர்ப்ப, கடமை யுணர்வு முன்புறம் உந்தக் கால்கள் அசையமாட்டா வாயின. அவன் செய்வதறியாது திகைத்தான். முன் னோக்கிச் செல்வதோ, பின்னோக்கி மீள்வதோ செய்யாது, அவ் விடைவழியிலேயே இருந்து விட்டான். உள்ளம் எடுத்துக் காட்டிய காதலியின் அழகும் அன்பும், பிரிவுத்

துயர் பொறுது கண்ணீர் பெருக நிற்கும் அவள் கலங்கிய நிலையும் அவனை ஊர் நோக்கித் துரத்தின; அறிவு எடுத்துக்காட்டிய கடமையுணர்ச்சி, வினை மேற்கொண்டார் ஒருவர், அவ்வினையை முடிக்கும் வகை, அதைக் குறைவறச் செய்து முடிப்பதால் அவருக்கு உண்டாம் புகழ், எடுத்த வினையை இடையே கைவிடுவார்க்கு உண்டாம் பழி ஆகிய இவைகள், அவனை வினைமேற் கொண்டு செல்க எனத் தூண்டின. காதலுக்கும் கடமைக்கும் நடைபெறும் இப் போராட்டத்தை ஒதுங்கி நின்று பார்ப்பதல்லது, அவற்றுள் எதன்பால் நிற்பது என்பதை அவனால் துணிய இயலவில்லை. அப் போராட்டம், தன் உடலையும், உயிரையும் ஒருங்கே அழித்து விடுமோ என அஞ்சினான். அந்நிலையில் பண்டு காட்டில் கண்ட காட்சியொன்று அவன் மனத்திரையில் காட்சி தந்து அவனை மேலும் நிலைகலங்கப் பண்ணிற்று.

இரண்டு பெரிய மதயானைகள் ஒன்றோடொன்று பகை கொண்டு போரிடத் தொடங்கின. அவற்றின் போராட்டிற்குக் காரணமாயது ஒரு சிறிய கயிறு. அவ்யானைகள் இரண்டும் கயிற்றின் இரு முனைகளையும் பற்றிக்கொண்டு ஈர்க்கின்றன. ஆற்றல், ஆண்மை, ஆண்டு இவற்றில் யானைகள் இரண்டும் ஒரு தன்மைய. கயிற்றைப் பெறும் ஆசை களிறுகள் இரண்டின் உள்ளத்திலும் ஆழப் பதிந்துவிட்டது. அதனால் ஒன்றற்கொன்று ஒரு சிறிதும் விட்டுக்கொடாது பற்றி ஈர்க்கத் தொடங்கின. அந்நிலையில் அவற்றின் கைகளுக்கிடையே, புதிய வலிய பெரிய கயிறே சிக்குறினும், வலிவற்றுச் சிதைந்துபோம். ஆனால் யானைகளுக்கிடையே அகப்பட்டு ஈர்க்கப்படும் அக்கயிறோ, ஒரு பழங்கயிறு. யானைகள் வெற்றி தோல்வி காணும் வரை அழியாது நிற்பது அரிது. அவற்றின் ஈர்ப்பைத் தாங்கவல்ல திண்மை அதற்கு இல்லை. நைந்து தேய்ந்து

போன புரிகளைக் கொண்டது அது. யானைகளின் கையிற் பட்டவுடனே அறுந்து அழிந்து போயிருக்க வேண்டியது இதுகாறும் இருந்து ஈடுகொடுத்ததே அரிது. அது சிறிது சிறிதாக அறுந்து அழியவும் தொடங்கி விட்டது. இன்னும் சிறிது நாழிகையில் அடியோடு அறுந்து அழிந்து போவது உறுதி. இதுவே அவன் கண்ட காட்சி.

காதல்உள்ளமும், கடமையுணர்வும் ஒன்ருேடொன்று மாறுபட்டுச் செய்யும் போராட்டத்திற்கு நிலைக்களமாய் அமைந்த தன் உடலும், யானைகளால் ஈர்ப்புண்டு அழிந்து போன அக்கயிறேபோல் அழிந்துவிடுமோ என அஞ்சி ஞன். அஃது ஏற்கெனவே அழியத் தொடங்கி விட்டதற் கான அறிகுறிகள் கண்டு நடுங்கிற்று அவன் உள்ளம்.

காதல் கடமை ஆகிய இரண்டையும் ஒப்ப மதித்து, அவற்றுள் எதையும் கைவிடக் கருதாது, இரண்டையும் ஒருங்கே பெறுதல் வேண்டும் என்ற உயர்ந்த எண்ணத் தால், காதலியைப் பிரிந்து, பொருள் சேர்க்கும் கடமை மேற்கொண்டு வந்து, இடைவழியில் காதலியின் கண்ணீர் கண்டு கலங்கி, மீண்டும் கடமை நினைந்து மேற்சென்ருன். காதலாலும் கடமையாலும் மாறி மாறிக் கட்டுண்டு, அப் போராட்டத்தால் அவன் உடல்தளர, காதல் உள்ளத் தால் கடமையை விரைவில் முடித்து விழுமிய புகழ்பெற விரும்பும் அவ்வாண்மகன் வாழ்க! அவன் கடனறி உணர்வு வளர்க என வாழ்த்துவோமாக.

"புறந்தாழ்வு இருண்ட கூந்தல், போதின்
நிறம்பெறும் ஈரிதழ் பொலிந்த உண்கண்,
உள்ளம் பிணிக் கொண்டோள்வயின் நெஞ்சம்
செல்லல் தீர்க்கம் செல்வாம் என்னும் ;
செய்வினை முடியாது எவ்வம் செய்தல்

*எய்யாமையோடு இளிவுதலைத்தரும் என*
*உறுதி தூக்கத் தூங்கி, அறிவே*
*சிறிதுநனி விரையல் என்னும்; ஆயிடை*
*ஒளிறு ஏந்து மருப்பின் களிறு மாறு பற்றிய*
*தேய்புரிப் பழங்கயிறு போல*
*வீவது கொல் என்வருந்திய உடம்பே.''1*

---

1. நற்றிணை : 284. தேய்புரிப் பழங்கயிற்றினார் : காதல் கடமை போராட்டத்தால் அழியும் உடலிற்கு, யானைப் போராட்டத்தில் அழியும் தேய்ந்த பழைய கயிற்றனை உவமை கூறியதனால் இவர்க்கு இப்பெயர் வந்தது.

போது-மலர். ஈர்இதழ் - நீர் நிறைந்த இதழ். பொலிந்த-அழகு பெற்ற. செல்லல்-பிரிவுத்துயர். எவ்வம்-கைவிட்டுப் போதல். எய்யாமை-அறியாமை. இளிவு-இழிவு. தூக்க-ஆராய. தூங்கி-தங்கி. மருப்பு-யானைக்கோடு. வீவதுகொல்-அழியும் போலும்.

# 7. மனையற மாட்சி மிக்க மனைவி

ஒருவர், ஊரும் உலகமும் புகழும் உயர்ந்தோரா வதும், பெற்றோரும் உற்றாரும் பழிக்கும் இழிந்தோரா வதும், அவர், அவர்தம் இளமையில் பெறும் உணர்ச்சி களால் ஆம். இளமையில் ஒருவர் பெறும் உயர்ந்த ஒழுக்கம், வாழ்க்கையில் அவரை உயர்ந்தோராக்கும்; அக்காலத்தில் அவர் பெறும் ஒழுக்கக் கேடுகள், பிற் காலத்தே அவரை இழிந்தோராக்கும். ஒருவர் வாழ்வின் தகுதியை வகுப்பது அவர் இளமைக் காலமேயாதலின், அவ்விளமைக் காலம், நல்லதன் நலனையும், தீயதன் தீமையையும் உணர்ந்து கொள்ளும் அறிவு வாய்க்கப் பெறாக் காலமாம்; அதனால், இளமைப் பருவம் உடையார், உயர்ந்த நெறியிது, தாழ்ந்த நெறியிது எனத் தாமே, உணர்ந்து கோடல் இயலாது. ஆதலின் அவ்விளமைக் காலத்தில அவர் அருகில் இருந்து அவரை வளர்ப்பவர் ஒழுக்க நெறி யுணர்ந்த உயர்வுள்ள முடையராதல் வேண்டும்.

மக்களின் இளமைப் பருவத்துப் பெரும் பகுதி, தாயின் அணைப்பில் கழிவதாகும்; மக்கள், தம் இளமைக் காலத்தைத் தாயோடிருந்தே கழிப்பர்; ஆதலின், அத் தாய்க்குலம், ஒழுக்க நெறியுணர்ந்து, உயர்ந்த பண்பு களால் நிறைந்ததாதல் வேண்டும். இவ்வுண்மையை உணர்ந்து வாழ்ந்தவர் தமிழர்; அதனாலேயே, அத்தாய்க் குலமாம் மகளிர் குலம், மாண்புடையதாதல் வேண்டும் என்பதில் பெரிதும் விழிப்புடையராயினர்; மகளிரை, மணிகளிற் சிறந்த மாணிக்கமென மதித்துப் போற்றினர். அவர் போற்றுதலுக்கேற்ப, பழந்தமிழ் மகளிரும், மாண்பு மிக்க, மனமாட்சி வாய்ந்த நல்லோராக வாழ்ந்து வழி காட்டிச் சென்றனர்.

மகளிர், பிறப்பால் பெண்டிர் எனும் பொதுவியல் புடையரேனும், சிறப்பால் அவர் ஒருவரல்லர்; தாய் எனவும், மனைவி எனவும் நிலையால் வேறுபடுவர் சிலர்; தோழி எனவும் செவிலி எனவும் தொழிலால்பிரித்துணரப் படுவர் மற்றும் சிலர்; பழந்தமிழ் மகளிர், மகளிர்குலம் அனைத்திற்கும் ஏற்புடைய பொதுப் பண்புகளைப் பெற்றி ருந்ததோடு, வாழ்க்கையில் அவரவர் நின்ற நிலைக்கேற்ற சிறப்பியல்புகளையும் சிறக்கப் பெற்றிருந்தனர். மகளிர்க் குரிய பொதுப் பண்பும், மனைவியர்க்குரிய காதல், கற்பு எனும் மாண்பும் ஒருங்கே பெற்றுப் பெருமையுற்றுள் மனைவியாம் நிலைபெற்ற தமிழ் மகள்; அன்பு காட்டியும், அறிவு ஊட்டியும், ஒழுக்க நெறி நிறுத்தியும் மக்களை வளர்க்கும் மாண்புடையவளாய் விளங்கினள் தாயாம் தகுதியுடைய தமிழ்க்குலப் பெண்; உலகியல் உணர்ந்து, உற்ற துணைபுரிந்து, உயர்ந்த வழிகாட்டியாய் வாழ்ந்தாள், தோழி எனும் தூயநிலை பெற்ற தமிழ்ப் பெண்; நற்றிணை வழங்கும் நாட்டில் வாழ்ந்த அம்மகளிருள் சிலரைக் கண்டு, அவர்தம் மாண்புணர்ந்து மகிழ்வோமாக.

அமைதி நிறைந்து இன்பம் பொங்கும் வாழ்வை வேண்டுவார், மனையற மாண்பு வாய்ந்தாளொருத்தியை மனைவியாகப் பெறத்தக்க பேறுடையராதல் வேண்டும்; அவர் வாழ்வே மனக் கவலையற்று, மகிழ்ச்சி நிறைந்து விளங்கும். ஆண்டுகள் பல கழியவும் நரைதிரை பெருமைக்கான காரணங்களுள் சிறந்தது, மனைமாட்சி மிக்க மனையாளைப் பெற்றதே எனக் கூறினார், பிசிராந்தையார் எனும் பெரியார்: "யாண்டு பல ஆகியும் நரை இல ஆகுதல், யாங்கு ஆகியர்? என வினவுதிராயின், மாண்ட என் மனைவியொடு மக்களும் நிரம்பினர்"1, "'இல்லது என், இல்லவள் மாண்பானால்?"2 என்று கேட்கிறார் வள்ளுவப் பெருந்தகையார். காதல் கற்பு எனும் இருபேரொழுக்க நெறியிலும் கலங்காது நின்று, தமிழ்க்குல மகளிரின தனிச் சிறப்பை உலகிற்கு உணர்த்தியுள்ளனர், மனைவியாம் நிலைபெற்று வாழ்ந்த தமிழ் மகளிர்.

**கணவன் தகுதி கண்டவள் :**

மனைவியின் வாழ்க்கையில் இரண்டறக் கலந்து விளங்குபவன் கணவன்; கணவன் வேறு, மனைவி வேறாகப் பிரித்துக் காணல் இயலாது. கணவனின் உயர்வு தாழ்வுகள் மனைவியையும், மனைவியின் உயர்வு தாழ்வுகள் கணவனையும் சார்ந்தே காணப்படும். கணவன் வடிவை மனைவியிடத்திலும் மனைவி வடிவைக் கணவனிடத்திலும் காணலாம். ஆகவே, இருவரும் இயல்பால் ஒத்தவராதல் வேண்டும். இருவருள் ஒருவர் உயர்ந்து, ஒருவர் தாழ்ந்து விளங்குவராயின், அவர் வாழ்க்கை

---

1. புறநானூறு : 191. பிசிராந்தையார்.

யாங்கு ஆகியர்-எப்படி ஆயினீர். மாண்ட-மாட்சிமைப்பட்ட. நிரம்பினர்-அறிவால் நிரம்பினர்.

2. திருக்குறள் : 53.

வண்டி இனிது செல்லாது. "ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப" எனக் கணவனும் மனைவியும், பிறப்பாலும் சிறப்பாலும் ஒப்ப உயர்ந்தோராதல் வேண்டும் என விதிவகுத்துச் சென்றார், ஆசிரியர் தொல்காப்பியனார்.

இதை உணர்ந்தவள் தமிழ்ப்பெண். கணவனைக மேற்கொள்ளத் தக்கவனிடத்தில் காணலாம் தகுதி, தகுதியின்மைகளை உணர்ந்து கொள்ளும் அறிவினை, அவள் நிறையப் பெற்றிருந்தாள். அதனால், அவள் பெற்றோர் அவளுக்குரிய கணவனைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பை அவளிடத்திலேயே ஒப்புவித்திருந்தனர்; அவள் தேர்வில் தவறு நேர்ந்துவிடாது என உறுதியாக நம்பினர்; அவளும், அவர் நம்பிக்கை வீண்போகாவாறு நடந்து கொண்டாள்; தன்னைக் காதலிக்கும் ஆண் மகனின் ஒழுக்க நெறியினை உணர்ந்துகொண்ட பின்னரே, அவள், அவன் காதலை ஏற்றுக்கொண்டாள்.

தனக்கேற்ற கணவனைத் தேர்ந்து எடுத்துக்கொண்டாள் ஒரு பெண்; அதை அறிந்த அவள் தோழி, "நின் கணவன் தகுதி யாது? நல்லவன்தானா? நம்பிக்கைக்கு உரியவன்தானா?" என்றெல்லாம் கேட்டாள். அதற்கு அவள் கூறியது இது: 'தோழி! என் கணவர் சொன்ன சொல் தவறாதவர்; வாய்மை வழுவாதவர்; 'காதல் கொண்டேன் கைவிடேன்' என்ற அவர்சொல், என்றும், எக்காலத்தும் தவறாது; எத்தகைய இடையூறுவரினும் சொன்னசொற்படி வாழ்ந்து காட்டும் வன்மை வாய்ந்தவர்; அவர் கொண்ட அன்பு, இன்று இருந்து, நாளை அழிந்துவிடும் நிலையற்ற தன்மை உடையதன்று. அஃது, எம் வாழ்நாள் அளவும் வளர்ந்து விளங்கும்; அவர்பால் காணலாம் இனிய பண்புகள் நாள் ஆக ஆக, பெருகுவதல்லது குறையா;

என்னைக் கைவிட்டு வாழும் எண்ணம், அவர் கனவிலும் தோன்றாது ; அவர் குற்றமற்றவர் ; தோழி ! தேன், எல்லா மலரிலும் கிடைக்கும் ; தேனடைகள் எங்கும் கட்டப் பெறும் ; ஆனால் அவையெல்லாம் சிறந்தனவாகி விடா ; வண்டொன்று தாமரை மலரில் உள்ள தேனை மட்டும் தேர்ந்தெடுத்துச் சென்று, மணம் நாறும் சந்தன மரத்தில் கட்டிய தேனடையில் சேர்த்துவைக்க, அத் தேனடையை அழித்துப் பெற்ற தேன் ஒன்றே, கலப்பற்ற சுவைவாய்ந்த, தனிச்சிறப்புடையதாகும். என் கணவரும் அத்தேனைப்போன்ற, இனிமையும் தூய்மையும் உடைய ராவர் ; ஆகவே அவரோடு நான் கொண்ட காதலும் தூய்மை உற்றது ; துயர் அற்று விளங்குவதாகும்." இவ்வாறு கூறி, அத்தகைய நல்லோனைத் தேர்ந்து கொண்ட தன் அறிவுத்திறனை உணர்த்தினாள் அப்பெண்:

"நின்ற சொல்லர் ; நீடுதோன்று இனியர் ;
என்றும் என்தோள் பிரிபு அறியலரே ;
தாமரைத் தண்தாது ஊதி, மீமிசைச்
சாந்தில் தொடுத்த தீங்தேன் போலப்
புரைய மன்ற ; புரையோர் கேண்மை."1

**கணவனே எல்லாம் :**

நல்லோன் ஒருவனை, அவன் நல்லோன் என்பதை அறிந்து கணவனாக ஏற்றுக்கொண்ட பின்னர், மனைவி அவன் வயத்தளாகி விடுதல் வேண்டும் ; அவன் வேறு, தான் வேறு என வேறுபட்டு வாழ்தல் கூடாது ; அவன்

1. நற்றிணை : 1. கபிலர்.

நின்ற-நிலைமை தவறாத. நீடு - நெடுங்காலம். தாது-தேன். ஊதி-உண்டு. மீமிசை-மேலே, சாந்தில்-சந்தன மரத்தில். தொடுத்த-சேர்த்து வைத்த. புரைய-தூய்மை உடைய. மன்ற-உறுதியாக. கேண்மை-நட்பு.

வாழ்வு தன்வாழ்வு, அவன் தாழ்வு தன் தாழ்வு எனக் கொள்ளுதல் வேண்டும் ; தன்வாழ்வின் நிலைக்களம், தன் உயிரின் பற்றுக்கோடு அவனே எனக் கருதுதல் வேண்டும் ; அவன் இல்லையேல் தான் இல்லை ; எனக் கூறத்தக்க ஒன்றிய நிலையினளாதல் வேண்டும். அதுவே காதல் வாழ்வும், கற்பு நெறியுமாம்.

இதை உணர்ந்திருந்தாள் தமிழ்ப்பெண். தனக்கும், தன் கணவனுக்கும் உள்ள தொடர்பு எத்தகையது என்பதைத் தன் தோழியிடம் கூறும் ஒருத்தி, "தோழி! உலகத்தில், உயிர்கள் அழியாது வாழ்வது, தண்ணீரின் துணையால் ; நீர் இல்லையேல், அவ்வுயிர்கள் வாழா. உலகமே இயங்காது ; உலகிற்கும், நீருக்கும் எத்தகைய உறவோ, அத்தகைய உறவே, எனக்கும் என் கணவர்க்கும் ; எதற்கும் என் கணவரையே எதிர்நோக்கி வாழ்வேன் நான் ; என் கணவர் இல்லாமல் நான் வாழ்தல் இயலாது ; அவர் இல்லையேல் நான் இல்லை ; என்னை வாழ்விப்பவர் அவரே" என்று கூறி, கணவன் மனைவியர் தொடர்பு, எத்தகையதாதல் வேண்டும் என்பதை எடுத்துக் காட்டியுள்ளாள் :

> "நீர் இன்று அமையா உலகம் போலத்
> தம் இன்று அமையா நம் நயந்தருளி."1

**காதல் இன்றேல் சாதல் :**

மகளிர்க்குக் கணவனோடு கூடி வாழும் காதல் வாழ்வே, வாழ்வின் குறிக்கோள் ; அதுவே அவர் வாழ்வின் பயனுமாம். அக்காதல்வாழ்வை அடைய

1. நற்றிணை : 1. கபிலர்.

இன்றி என்பது இன்று எனத் திரிந்துளது. நீர் இன்று-நீர் இல்லாமல். அமையா-வாழமாட்டாத. நயந்தருளி-விரும்பி.

விடாது இடைநிற்பர் எவரே ஆயினும், அவரை அழித்து, அக்காதல் வாழ்வை அடைவர் மகளிர். காதல் வாழ்வு வேண்டும் அம்மகளிர், அதற்குத் தடையாக நாண் நிற்பின், அதை அழிப்பர்; நாண் தாயினும் சிறந்தது, தாம்பிறந்தபோது பிறந்து, தம்மோடு வளர்ந்து வாழ்வது எனக்கருதார். தாய் தடைசெய்யின், தம்மை உயிரினும் ஓம்பிய அத்தாயை இழக்கவும் துணிவர்; அந்நிலையிலும் தம் காதலைப் பெறுதல் இயலாதாயின், அதற்குமேலும் இருப்பதால் பயன் இல்லையாதலின், தம் உயிரையும் இழக்கத் துணிவர். காதலற்ற வாழ்வு உயிரற்ற நடைப் பிணவாழ்வு போலாம்; ஆதலின், காதல் கைகூடப் பெறாத காரிகையர் சாதலை நாடுவர்.

ஓர் இளைஞன் ஒரு பெண்ணைக் காதலித்தான். அவள் அன்பைப் பெற அரிதின் முயன்றான்; அவன் சான்றாண்மை உடையன்; மணக்கத் தக்க மாண் புடையன் என அறிந்து, அப்பெண்ணும் அவனைக் காதலித்தாள். ஆனால் அக் காதல் நிறைவேறவில்லை. அவள், அவனை மணப்பதால் தமக்கும், தம் குடிக்கும் பழிவரும் எனப் பெற்றோர் மறுத்தனர்; அதை அறிந்த அப் பெண் தன் தோழிபால் சென்று, "தோழீ! காதலர் நம்மீது அன்புடையர்; நம்மால் அன்பு செய்யவல்ல நல்ல பண்புடையர் என்பதை நாம் அறிந்துகொண்டதை அறியாத ஊராரும் உறவினரும், அவரைக் காதலித்தால் பழி வரும் எனக்கூறி மறுக்கின்றனரே, என் செய்வேன்? அவரால் என் காதல் கருகிவிடும்போலும்; காதல் நிறை வேறப் பெறாமல், காலமெல்லாம் கண்ணீர்விட்டுக் கலங்கி, உறக்கம் ஒழிந்து, உள்ளத்துயிர்மிக்கு வாழ்வதினும், உயிரிழந்து போதலே உயர்நெறியாம் என எண்ணுகிறது என் நெஞ்சம்." எனக்கூறிக், காதல் அற்றவர்க்குச் சாதலே உற்ற துணை என உரைத்து உயர்நெறி காட்டினாள்.

'நாடல் சான்றோர் நம்புதல் பழி எனின்
பாடுஇல கலுழும் கண்ணொடு சாஅய்ச்
சாதலும் இனிதே, காதலம் தோழி !''1

**நாணிலேன் நான் :**

காதல் உணர்வு பெற்ற மகளிரின் உள்ளத்தில், ஓர் ஒடுக்கம் இயல்பாக உண்டாகும் ; அவ்வொடுக்கத்திற்கு நாண் எனப் பெயரிட்டனர் பெரியோர். பெண்மைக் குணங்களுள் பெரிதும் போற்றப்படுவது அந் நாண் ; மகளிர்க்கு நல்ல அணியாய் அமைந்து அழகுசெய்வதும் அந்நாணே. நாணிலா மகளிர், உயிரிலா மண்பாவை போல்வர். நல்ல பெண்கள், நாணைத் தம் உயிரினும் சிறந்ததாகக் கருதுவர். நாணின் பெருமை உணர்ந்த அவர்கள், அந்நாணைக் காக்க வேண்டித் தம் உயிரையும் இழக்கத் துணிவர். நாணை இழந்து உயிர்வாழும் வாழ்வை, அவர்உள்ளம் விரும்பாது ; நாணுடையார், தம் காதல் ஒழுக்கத்தைப், பெற்ற தாயும் அறியாவாறு மறைத்தே மேற்கொள்வர். தன் மகள் கொண்ட காதல் ஒழுக்கத்தை, உண்ணும் வகையிலும், உறக்க நிலையிலும், ஏனைய ஒழுக்க முறையிலும் அம்மகள் பால்காணலாம் மாறுபாடு கண்டு, குறிப்பால் உணர்தல் அல்லது, அம்மகள் உரைக்க உணர்தல் தாய்க்கு இயலாது.

பெண்ணொருத்தி, ஒருநாள், தன் வீட்டை அடுத்து வளர்ந்திருந்த புன்னைமரத்தின் நிழலில் நின்றுகொண்டிருந்தாள். அப்போது அங்கு வந்து சேர்ந்தான் அவள் காதலன் ; வந்தவன், அவளோடு அம் மரத்தடியிலேயே காதல் விளையாட்டு விளையாடத் தொடங்கிவிட்டான்.

---

1. நற்றிணை : 327. அம்மூவனார்.

நாடல்-நம்மை விரும்பி நம்பின்திரியும். நம்புதல்-விரும்புதல். பாடு-உறக்கம். கலுழும்-அழுகின்ற. சாஅய்-வருந்தி.

அவ்விளையாட்டில் அவளுக்கும் விருப்பம் உண்டேனும், அதை, அம்மரத்தடியில் மேற்கொள்ள நாணினள்; அவள் நாணுவது கண்ட காதலன், "கண்ணே! நம்மையும், நம் காதல் விளையாட்டையும் காண்பார் எவரும் இங்கு இல்லையாகவும், நீ நாணுவது ஏனோ?" என்று கேட்டான்; அதற்கு அவள் "காதல! இங்கு எவரும் இல்லை என எண்ணுவது தவறு; நம் காதல் விளையாட்டை, என் தமக்கை பார்த்துக்கொண்டிருக்கிறாள். அவள் காண, உம்மோடு நகைத்து விளையாட நாணுகிறது என் உள்ளம்" என்றாள்; அது கேட்ட அவன், நாற் புறமும் சுற்றி நோக்க, எவரும் ஆங்கு இல்லாமை கண்டு, "கண்ணே காதலி! எவரும் இங்கு இல்லையே; மனிதர் வாடையும் வீசவில்லையே இங்கு! எங்கே உள்ளாள் உன் தமக்கை?" என்று வினவினன். அதற்கவள், "அன்ப! என் தமக்கை நாம் காண நம் கண் முன்னரே நின்றுகொண்டுள்ளாள்; அவள் வேறுயாரு மில்லை, இதோ நிற்கிறதே, நமக்கு நிழல் தந்து கொண்டு புன்னை, அதுதான் என், தமக்கை; அது என் தமக்கை என்பதை, என் தாய் அறிவிக்க அறிந்தேன். 'மகளே! ஒருநாள் நானும் என் தோழியரும், இங்கு வந்து விளையாடிக் கொண்டிருந்தோம்; முற்றி உதிர்ந்த புன்னைக் காய்களை, மணலுள் மறைத்து அழுத்திக் கண்டெடுக்கும் ஆடல் மேற்கொண்டு, மகிழ்ந்திருந்தோம். அவ்வாட் டத்தில் யான் புதைத்த ஒருவிதை, என் மறதியால் மண்ணுள்ளேயே நின்றுவிட்டது. அதை அறியாது நாங்கள் வீடு திரும்பிவிட்டோம். சின்னாட்களில், அவ் விதை வேரூன்றி முளைத்து வெளிப்பட்டு விட்டது. அதைக் கண்டு மகிழ்ந்த நான், என் தாய் எனக்குத் தந்த நெய்கலந்த பாலை, நாள்தோறும் அதன்மீது ஊற்றி வந்தேன். நாள் ஆக ஆக, அது வளர்ந்து பெரிய

மரமாகித் தழைத்தது. அதற்கிடையில், யானும் வளர்ந்து மணவாழ்வு மேற்கொண்டு நின்னையும் பெற்றேன். ஆகவே, அன்று நான் வளர்த்த இப் புன்னை மரம் நினக்குத் தமக்கையாம் முறையுடையதாகும், என்று இப்புன்னை வளர்ந்த வகையையும் அவளே கூறினாள். அன்று முதல் யானும் இப்புன்னையை என் முன் பிறந்தாளாகவே மதித்து வந்துளேன். ஆகவே, இப்புன்னை காண, உன்னோடு நகைத்து விளையாட நாணுகிறேன்" என்று கூறினாள். நாணை மதிக்கும் அந்நாளின் மாண்பு தான் என்னே!

"விளையாடு ஆயமொடு வெண்மணல் அழுத்தி
மறந்தனம் துறந்தகாழ் முளை அகைய,
நெய்பெய் தீம்பால் பெய்து இனிதுவளர்ப்ப
நும்மினும் சிறநதது; நுவ்வை ஆகும் என்று
அன்னைகூறினள் புன்னையது சிறப்பே;
அம்ம! நாணுதும் நும்மொடு நகையே."1

**இறப்பினும் நாணை இழக்கேன்:**

நாண், நற்குடி மகளிர்க்கு உயிரினும் சிறந்ததாகும். அன்னார், தம் உயிரை இழந்தும் நாண் நெறி நிற்பர்; காதலித்த கணவன் கைவிட்டுச் சென்று மறந்து வாழக், காதல் நோய் மிகுந்து, உள்ளமும் உடலும் ஒருங்கே வருந்தினும், அவ்வருத்த மிகுதியால் அவன்பால் தாமே வலியச் சென்று, தம் காமநோயை வாய்விட்டுக் கூறி வருந்துதல் அவர் வாழ்க்கையில் இல்லை "உடம்பும் உயிரும் வாடியக் காலும், என்னுற்றன கொல் இவை எனினல்லது, கிழவோன் சேர்தல் கிழத்திக்கு இல்லை"2

1. நற்றிணை: 172.
ஆயம்-தோழியர் கூட்டம். துறந்த-விட்டுச் சென்ற. காழ்-விதை. அகைய-தோன்றி வளர. பெய்து-வார்த்து. நுவ்வை-நும்தமக்கை.
2. தொல்-பொருள். 203.

இது தொல்காப்பியர் விதித்த வாழ்க்கை விதி. உயர் குடிப் பிறப்பினளாய ஒரு தமிழ்ப் பெண்ணின் பால், தான் கண்ட இப் பண்பாட்டினைப் பலர் அறியக் கூறிப் பாராட்டியுள்ளாள் அவள் தோழி.

காதலன், யாது காரணத்தாலோ, சில நாட்களாக வந்திலன்; அதனால், அவனைக் கண்டு மகிழ்வதும் இயலாது போகவே, காதலி வருந்தினாள். அவள் கலக்கம் பெரிதாயிற்று. அதனால் அவள் உடல் நலனும் குன்றிற்று, நெற்றி ஒளி இழந்து; கை வளை கழன்றோடு மாறு தோள்கள் மெலிந்தன. இம்மாற்றங்களால், அவள் காதல் விளையாட்டை அறிந்துகொண்ட ஊரார், அவளை அவள் முன்பாகவே பழிக்கத் தலைப்பட்டனர். அதனால் அவள் துயர் மேலும் அதிகமாயிற்று; அந் நிலையை அவள் காதலன் அறியின், உடனே விரைந்து வந்து வரைந்து கொள்வன். ஆனால், அவன் பால் சென்று அதை உரைக்க அவள் விரும்பவில்லை. அவ்வாறு சென்று உரைப்பதை அவள் நாண், இடை நின்று தடுத்து விட்டது. உயிர் போகவும், ஊரார் பழிக் கவும், உடல் நலன் இழக்கவும் நேர்ந்த விடத்தும் நாணைக் கைவிட மறுக்கும் அவள் நலத்தை நாவாரப் பாராட்டினாள் அவள் தோழி.

'பிறைவனப்பு இழந்த நுதலும், யாழநின்
இறைவரை நில்லா வளையும், மறையாது
ஊர் அலர்தூற்றும் கௌவையும், நாண் இட்டு
உரை அவற்கு உரையாம்.''1

---

1. நற்றிணை : 263. இளவெயினனார்.

பிறைவனப்பு-மூன்றாம்பிறைத் திங்கள் போலும் வடிவும், வனப்பும் வாய்ந்த அழகு. யாழ-அசை. இறை-முன்கை. வரை-அளவில். மறை யாது-வெளிப்படையாக வந்து. கௌவை-பழிச்சொல். நாண்இட்டு-நாண் காரணமாக.

**கணவன் துயர்உறக் களித்து மகிழாள் :**

தான் இன்புற்று வாழப் பிறர் துன்பத்தில் உழல வேண்டும் என எண்ணுவது பேதையோர் பண்பு. தான் இன்புற்று வாழ்தற் பொருட்டுக், கணவன் கடுந்துயர் உறினும் கலங்காதாள், பெண் அல்லள்; பேய். காதலால் கனிந்த உள்ளம் உடைய உயர்குல மகளிர், கணவன் இன்பதுன்ப மிரண்டிலும் பங்குபெற எண்ணும் பண்பா டறிந்தவராதலின், அவர்கள், தாம் இன்ப நிலையில் இருத்தற்பொருட்டுக், கணவன் கடுந் துன்பத்திற்குள் ளாவதை விரும்பார். கணவன் தொல்லை மிகுந்த தொழில் மேற்கொள்வதால் வரும் இன்பத்தை அவர் ஏற்றுக் கொள்ளார். அவர் அத்தொழிலை மேற்கொள்ளாமை யால், தாம் துயர்உற வேண்டிவரினும், அதையே விரும்புவர்.

காதலன் வரவை எதிர்நோக்கிக் காத்திருந்தாள் ஒரு பெண். காலம் இரவின் இடையாமம். அதுகாறும் அவளோடு உறங்காது விழித்திருந்த அவள் தோழி உறங்கி விட்டாள். ஆனால், காதலனைக் காணவேண்டும்; அவன் தரும் இன்பம் பெற்று மகிழவேண்டும் எனும் ஆசை, அவள் கண்கள் உறக்கம் மேற்கொள்வதைத் தடுத்துவிட்டது. அதனால், தனியே அமர்ந்து காத்துக் கிடந்தாள். திடுமென இயற்கையில் ஒரு மாறுதல் ; காட்டில் காற்றுப் புகுந்து வீசுவதால் எழும் பேரொலி அடங்கிவிட்டது. சிறு அரவமும் கேட்டிலது ; விண் மீன்கள் விளங்க மறுவற்றுக் கிடந்த வானத்தில் கரு மேகம் படர்ந்து விட்டது. இடியோசை இடைவிடாது எழத் தொடங்கிவிட்டது. அடுத்துள்ள குறுங்காட்டில், வலியவேழத்தை வீழ்த்திய புலி, அவ்வெற்றிக் களிப்பு விளங்க முழங்கும் ஒலி, ஒருபால் வந்து ஒலித்தது.

இவற்றைக் கேட்டாள்; அவள் உள்ளம் நடுங்கிற்று. இவ்வியற்கைத் திருவிளையாடல் எதையும் அறியாது, அயர்ந்து உறங்கிக்கொண்டிருந்த தோழியைத் தட்டி எழுப்பினாள். துணுக்குற்றெழுந்த தோழி, 'காதலர் வந்திலரோ? நீ இன்னமும் உறங்கவில்லையோ?' என வினவினாள். அது கேட்ட அப்பெண், "தோழி! அவர் இன்னமும் வந்திலர். இப்பொழுது வாராமையால் வருந்துகின்றேனல்லன். அவர் வந்துவிடுவரோ என்றே, அஞ்சுகிறேன். எழுந்து பார் இயற்கைத் திருவிளையாடலை. காட்டைப் பார்; கருத்து எழுந்து மின்னி இடிக்கும் மேகத்தைப் பார்; காட்டில் எழும் புலியின் முழக்கத்தைக் கேள்; இக் காட்டையும் மலையையும் கடந்தன்றோ காதலர் வருதல் வேண்டும். இந் நிலையில், அவர் அவ்வழியில் வருதல் நல்லதன்றே; அவர் அவ்வழியைக் கடந்து வந்து விடுவரோ? வந்து இடியாலும் புயலாலும், கொடிய புலியாலும் அவருக்கு என்ன ஏதம் நேருமோ என அஞ்சுகிறது என் உள்ளம். அந்நினைவால் கொதிப்பேறிவிட்டது என் நெஞ்சம். இந் நேரத்தில் யாரேனும் வந்து, அவர் இன்று வந்திலர் எனும் வார்த்தை வழங்கின் எவ்வளவு நன்றும் என ஏங்குகிறது என் உள்ளம். நெருப்பை அவிக்கும் நீரேபோல், என் நெஞ்சக்கொதிப்பைத் தணிக்கும் நல்ல மருந்தாகி மாண்புறும் அவர் வார்த்தை; அவ்வார்த்தையைக் கேளாமோ? தோழி!" என்று கூறிக் கலங்கி நின்றாள்.

'கானமும் கம்என்றன்றே; வானமும்
வரைகிழப்பு அன்ன மைஇருள் பரப்பிப்
பல்குரல் எழிலி பாடு ஓவாதே;
மஞ்சுதவழ் இறும்பில் களிறு வலம்படுத்த
வெஞ்சின உழுவைப் பேழ்வாய் ஏற்றை
அஞ்சுதக உரறும் ஓசை கேளாது

*துஞ்சுதி யோவில தூவிலாட்டி !*
*பேரஞர் பொருத புகர்படு நெஞ்சம்*
*நீரடு நெருப்பில் தணிய, இன்று அவர்*
*வாராராயினோ நன்றே.'' 1*

**நான் வருந்தினும் அவர் வாரற்க :**

காதலன் வாரான் ஆகுக எனக் கூறக் கேட்ட தோழி, "பெண்ணே ! காதலனைக் காணாயாயின் கவலை மிகுந்து வருந்துவை. காதலர் நோயால் உன் மேனி வாடும். நெற்றி ஒளி இழந்து அழகு குன்றும். பருத்த தோள்கள் சிறுத்துவிடும். அதை எவ்வாறு தாங்கிக்கொள்வாய் !" என்று கேட்டாள். அது கேட்ட அப்பெண், "தோழி ! அவர் வாராமையால், எனக்கு வந்துறும் கேடு அத்துணைப் பெரியதன்று. நீ கூறிய வாறே, நுதல்பசலை படர்ந்து பாழாயினும் ஆகுக. தோள் மெலிந்து தளரினும் தளருக. இந்நிலையில் அதைத் தாங்கிக் கொள்ளுதல் என்றால் இயலும், ஆனால், காதலர் கொடிய காட்டு வழியைக் கடந்து வருதலை என்றால் தாங்கிக் கொள்ளுதல் இயலாது. அவர் வரும் வழி எவ்வளவு கொடுமை வாய்ந்தது என்பதை நீ அறிவையோ ? தன்னைக் கொல்லவல்ல ஆற்றல் வாய்ந்த பெரிய புலியைத் தாக்கிக் கொன்ற களிறு, அதைக் குத்தியதால் இரத்தம் படிந்து கறைப்பட்ட தன் கோடுகளை, மலையினின்றும் வீழ்ந்தோடும் அருவியில்

---

1. நற்றிணை : 154. நல்லாவூர்கிழார்.

கம்எனல் - ஒலி அடங்குதல். வரைகிழிப்பு - மலைப்பிளப்பு. இங்கு அப்பிளப்பில் குடிகொண்டிருக்கும் கரிய இருள். மை-கரிய. எழிலி-மேகம். பாடு-இடித்தல். ஓவாது-ஓயாது. மஞ்சு-மேகம். இறும்பு-குறுங்காடு, குன்றுமாம். வலம்படுத்த-வலமாக வீழ்த்திக் கொன்ற. உழுவை-புலி. பேழ்வாய் - அகன்ற வாய். உரறும் - முழங்கும். தூவிலாட்டி-வலியிலாதாய். அஞர்-துன்பம். புகர்படு-துன்பம் மிக்க.

கழுவிச் செல்லும் கொடுமையுடையது காதலர் வரும் அக்காட்டு வழி. அதனால், காதலர் வந்திலரே எனும் ஏக்கத்தால் நான்படும் துயரினும், அவர் வரும் வழி, இவ்வளவு இடையூறு நிறைந்ததாயிற்றே எனும் எண்ணத்தால் எழும் துயரே எல்லையற்றதாம். ஆகவே, காதலர் வாராமையால், அவர் தரும் இன்பம் அடையப்பெறாது நான் வருந்தி அழியினும், அவர் இன்று வாராதிருக்க வழிச் செய்வாயாக " என வேண்டிக்கொண்டாள்.

" நன்னுதல் பசப்பினும், பெருந்தோள் நெகிழினும்
கொல்முரண் இரும்புலி அரும்புழைத் தாக்கிச்
செம்மறுக் கொண்ட வெண்கோட்டு யானை
கல்மிசை அருவியல் கழூஉம் சாரல்
வாரற்க தில்ல தோழி !"1

## வறுமையே ஆயினும் கணவனோடு வாழ்வேன் :

கணவன் மனைவியர் இருவருள், செல்வநிலையில், மனைவி உயர்ந்துவிடுவாளாயின், அவ்விருவர் வாழ்க்கையில் அன்போ, அமைதியோ இடம் பெறாது. தாய்வீட்டு வாழ்வினும், தன் கணவன் வீட்டு வாழ்வு, சிறிதே தாழ்ந்திருப்பினும், மனைவி கணவனை மதியாள். அவன் வீட்டை விட்டு வெளியேறித் தாய்வீடு சென்று விடுவாள். கணவன் வீட்டு வறுமை வாழ்வைப் பலர் அறியக் கூறிப் பழிப்பாள். தாய்வீட்டுப் பெருமையினைப் பாராட்டி மகிழ்வாள். இது பெண்களின் பொதுப் பண்பாதல் அறிந்தே, கணவனும் மனைவியும் ஒத்த நிலையினராதல் வேண்டும். மனைவி எவ்வகையாலும் உயர்ந்தவளாதல்

---

1. நற்றிணை : 151. இளநாகனார்.

நெகிழினும் – தளரினும். கொல் – கொல்லும். முரண் – பகைமை வாய்ந்த. இரும்புலி-பெரிய புலி. புழை-குகை அருகில். செம்மறு-சிவந்த கறை. கழூஉம்-கழுவும்.

கூடாது என விதிவகுத்தார் ஆசிரியர் தொல்காப்பியனார். "மிக்கோன் ஆயினும் கடிவரை இன்றே."[1]

ஆனால், அக்கட்டுப்பாடு, மகளிர் எல்லோர்க்கும் வேண்டுவதில்லை. மனையறத்திற்கேற்ற மங்கலமாய், மனையற மாண்புகளால் நிறைந்திருக்கும் மகளிர்க்கு அக்கட்டுப்பாடு வேண்டுவதில்லை. அவள் மாண்புடையவளானல், கணவன்வீடு வறுமையால் வாடினும், அது செல்வம் கொழிக்கும் செழுமனைபோல் சிறந்து விளங்கும். கணவன் வளம் அறிந்து, அவன் வருவாய்க்கேற்ப வாழ்க்கை நடத்தும் விழுமிய குணம் வாய்க்கப் பெற்றவள் தன் கணவன்வீட்டு வறுமை கண்டு கலங்குவதோ, அது குறித்து அவனை வெறுத்து விடுத்துச் செல்வதோ செய்யாள். கணவனின் வாழ்க்கைத் துணைவியே மனைவி எனும் கருத்துடையளாயின், அவன் செல்வம் தன் செல்வம், அவன் வாழ்வு தன் வாழ்வு, அவன் தாழ்வு தன் தாழ்வு எனக் கருதி அமைந்து இருப்பள். அத்தகையாள் தன் கணவன்வீட்டு வறுமை வாழ்வை வெறுப்பதோ, தன் தாய்வீட்டுப் பெருவாழ்வைப் பாராட்டுவதோ செய்யாள். மாறாகத் தாய்வீட்டுச் செல்வத்தை மதியாது கணவன்வீட்டு வறுமை வாழ்வில் இன்பம் காண்பாள். இப்பண்பாட்டினைப், பழந்தமிழ்ப் பெண்டிர், பெருமளவில் பெற்றிருந்தனர்.

செல்வம் கொழிக்கும் வீட்டில், அவ்வீட்டார் மகப்பேறின்றி ஆண்டுபல வருந்தி; அரியபல தவம் ஆற்றிய பின்னர் வந்து பிறந்த ஒரே பெண் அவள். அவளை அவள் பெற்றோர், அன்பு காட்டி, தம் வளத்திற்கேற்ப வளர்த்து வந்தனர். அவள் வளர்ப்பை, நரைதோன்றுமளவு முதிர்ந்து, உலகியல் அறிவால் நிரம்பிய, அன்பே

1. தொல். களவு : 2.

உருவாய செவிலியர்பால் ஒப்படைத்திருந்தனர். அவர்களும், அவளை அன்பு காட்டி, அறிவு ஊட்டி வளர்த்தனர்.

ஒரு நாள், செவிலி, ஒரு கையில் தேன் கலந்து இனிக்கும் சுவைமிக்க பால் நிறைந்த பொற் கிண்ணத்தையும், மற்றொரு கையில் பூங்கொடிபோலும் மெல்லிய ஒரு கோலையும் ஏந்தி வருகிறாள். முத்துப்பரல் இட்ட சிலம்புகள் ஒலிக்க ஆடிக்கொண்டிருக்கிறாள் அப்பெண்; செவிலி அவளை நெருங்கிப் பாலை உண்ணுமாறு வேண்டுகிறாள்; அவள் மறுக்கிறாள். கையில் உள்ள சிறு கோலை ஓச்சி, "பாலைக் குடித்துவிடு; இல்லையேல் அடித்துவிடுவேன்" எனச் சிறிதே மருட்டினாள். அவ்வாறு அச்சுறுத்தவும் அஞ்சி உண்ண எண்ணாது மறுத்து ஓடுகிறாள் அப்பெண். அவளைப் பின்பற்றி ஓடுகிறாள் செவிலி. ஓடி ஓடி மேலும் ஓடமாட்டாது தளர்ந்து ஓரிடத்தே நின்றுவிடுகிறாள். மனையின் முற்றத்தே ஒரு முல்லைப் பந்தல்; ஓடி அங்கு நின்றவாறே, "பாலுணவு வேண்டேன்" என மறுத்துவிட்டு விளையாடச் சென்றுவிடுகிறாள் அப்பெண்.

இவ்வாறு வளர்ந்தவள், மணப்பருவம் உற்று, மனம் விரும்பும் ஓர் ஆண் தகையைக் காதலித்து, அவனையே மணந்து கொண்டாள். அவன் மனைபுகுந்து மனையறமும் மேற்கொண்டாள். ஆனால், அவள் கணவன் வீடு செல்வச் செருக்குடையதன்று. வளம் இழந்து வறுமையில் திகழ்வது; முப்பொழுதும் உண்ணும் உணவிற்கும் அங்கு வழியில்லை. அதனால், ஒருபொழுது உணவுண்டு, ஒரு பொழுது உணவொழிந்து வாழத் தொடங்கினர்; மகளின் வறுமைநிலை அறிந்து வருந்திய அவள் தந்தை அவளுக்கென, அளவிறந்த பொருள் தர முன் வந்தான்; ஆனால், தாமே முயன்று தேடும் பொருள் பெற்று வாழும் வாழ்வே

பெருமையுடைத்து; அப்பொருள் சிறிதே யாயினும், அதுவே பேரின்பம் நல்கும் பெரும் பொருளாம் எனக் கருதும் பேருள்ளம் வாய்ந்த அப்பெண், தந்தை தந்த பெரும்பொருளை மறுத்துவிட்டாள். கணவன் வறுமை வாழ்விலேயே இன்பம் கண்டாள். அதை உள்ளம் நிறைந்த நல்வாழ்வாக மதித்து மகிழ்ந்தாள். பெண்ணின் பேரறிவு கண்டு மகிழ்ந்து பாராட்டினுள் அப்பெண்ணின் தாய் :

"பிரசம் கலந்த வெண்சுவைத் தீம்பால்
விரிகதிர்ப் பொன்கலத்து ஒருகை ஏந்திப்,
புடைப்பின் சுற்றும் பூந்தலைச் சிறுகோல்
உண் என்று ஓக்குபு புடைப்பத், தெண்ணீர்
முத்து அரிப் பொற்சிலம்பு ஒலிப்பத், தத்துற்று
அரிநரைக் கூந்தல் செம்முது செவிலியர்,
பரீஇ மெலிந்தொழியப், பந்தர் ஓடி
ஏவல் மறுக்கும் சிறுவிளையாட்டி,
அறிவும் ஒழுக்கமும் யாண்டு உணர்ந்தனள் கொல்!
கொண்ட கொழுநன் குடி வறன் உற்றெனக்,
கொடுத்த தந்தை கொழும் சோறு உள்ளாள்,
ஒழுகுநீர் நுணங்கு அறல் போலப்
பொழுது மறுத்து உண்ணும் சிறுமதுகையளே."1

## அவன் இல்லையேல் அழகு இல்லை :

உயர்ந்த காதலும் உள்ளன்பும் உடைய மகளிர், தாமும் தம் உடைமையும் தம் கணவர்க்கே உரியவாம்

---

1. நற்றிணை : 110. போதனூர்.

பிரசம்-தேன். விரிகதிர் - ஒளிவீசும். ஓக்குபு - ஓச்சி. புடைக்க- அடிக்க. அரி-பரல்கள். தத்துற்று-குதித்து ஓடி. அரிநரை-சிறுநரை. செம்முது செவிலி-அறிவால் முதிர்ந்த செவிலி. பரீஇ-பின்தொடர்ந்து ஓடி. வறன்-வறுமை. கொழும் சோறு-பெருஞ்செல்வம். உள்ளாள் - மதியாள். நுணங்கு அறல்-நுண்ணிய மணல். மேடும் பள்ளமுமாகத் தோன்றும் மணல். மதுகையள்-உள்ள உறுதி உடையாள்.

என எண்ணுவர். தம் இயற்கை எழிலும், அதை ஆடை அணிகளால் மிகுதிப்படுத்திக் காட்டும் செயற்கை அழகும் அவன் கண்டு மகிழவே எனக் கருதுவர். அவ்வெண்ணம் அவர் உயிரோடு ஒன்றுகலந்து விடுவதால், கணவன் தம்மைவிட்டுப் பிரியாது கலந்து வாழும் காலத்தில் தம்மை ஆடையாலும், அணியாலும், மலராலும், மணப் பொருளாலும் அழகு செய்து மகிழ்வதும், அவன் பொருள் தேடல் முதலாம் காரணம் காட்டித் தம்மைப் பிரிந் திருக்கும்போது, அத்தகைய அழகு எதுவும் மேற் கொள்ளாமையும் செய்வர்; அம்மட்டோ! அவர் ஆற்ற லுக்கு அப்பாற்பட்டதும், இயற்கை விளைவும் ஆய, தோளின் பெருமையும், நுதலின் ஒளியும் தம் இயல்பு கெட்டுத் தளர்ந்தும், குன்றியும் அழகிழந்துபோம்.

கணவன் இல்லாக் காலத்தில், தம்மை அணிசெய்து கொள்ளா அந்நிலையோடு நின்றுவிடவில்லை; அவன் இல்லாதபோது, இயல்பாகப் பெற்றிருக்கும் தம் அழகை இழந்துவிடவும் துணிந்து முன்வந்தனர். "கணவன் மகிழ்தற்கு இல்லாத என் அழகு கெட்டு, பேய் போலும் வடிவுடையேனாகுக" என வேண்டி, அப்பேய் வடிவு பெற்றாள் ஒரு பெண்; கடல் கடந்து போன கணவன் வருமளவும், அழகு முகம் இழந்து குரங்கு முகம் பெற்று வாழ்ந்தாள் ஒரு பெண்; என்னே அவள் காதல் உள்ளம்!

பொருள் தேடிப்போயிருந்த காதலன், வினை முடித்து மீண்டு வந்துகொண்டிருந்தான். மீள்வோன், தன் வரவை எதிர்நோக்கிக் காத்துக் கிடக்கும் காதலி, "வருவதாக வாக்களித்துச் சென்ற காலம் வரவும் காதலன் வந்திலனே" எனக் கலங்குவள்; வினை முடித்து வீடு நோக்கி வந்து கொண்டிருப்பதை அவள் அறியின், அவள், கவலை நீங்கி மகிழ்வள்; வரவை எதிர் நோக்கி

இருப்பவள், சேய்மைக் கண்வரும் தன் தேரைக் காணுது போயினும், அத்தேரில் கட்டிய மணியொலி கேட்டு வரவுணர்ந்து மகிழ்வள் ; ஆனல் மணியொலி கேட்பதோ இப்போது இயலாது - கார் காலத்துப் புது மழை பெய்யக் கண்டுகளித்திருக்கும் தவளைகள், அக் களிப்பு மிகுதியால் ஓயாது கத்தி எழுப்பும் ஒலி, அம்மணியொலியைக் கேளாவாறு செய்துவிடுமே எனக் கலங்கினன் ; உடனே பின் தொடர்ந்துவரும் ஏவல் இளையர் சிலரை அழைத்து, தன் வருகையை விரைந்து சென்று அறிவிக்குமாறு அனுப்பினன். அவர்களும், காதலன் வருகையை எதிர் நோக்கிக் காத்துக் கிடப்பாள் பால் சென்று, அவன் வருகையை அறிவித்தனர் ; அச்செய்தி கேட்டு மகிழ்ந்தது உள்ளம் ; மலர்ந்தது முகம் ; மயிரின் மாசுபோக நீராடுவதும் செய்யாது, அவன் வருகையை எதிர் நோக்கியிருந்தவள், அவன்வருகிறுன் எனும் செய்திகேட்ட அக்கணமே விரைந்து சென்று நீராடினள் ; மாசு நீங்கிய மயிரில், எண்ணெய் தடவி, வாரி முடித்தாள் ; முற்றத்தில் உள்ள செடியில் மலர்ந்திருக்கும் மணம் வீசும் மலர்கள் சிலவற்றைப் பறித்துத் தன் கூந்தலில் சூட்டிக்கொண்டாள்; அந்நிலையில் அவனும் வந்து விட்டான்; காதலனைக் கண்ட மகிழ்ச்சி கட்டுக்கடங்காததாயிற்று ? தன்னை மறந்தாள் ; மயிர் முடித்து மலர் சூட்டி நிற்பதையும் மறந்தாள்; அப்படியே, உடல் குழைய, கூந்தல் குலைய ஓடி அவனைத் தழுவிக் கொண்டாள் ; மனைவியின் இவ்வரவேற்புக் காட்சி அவனை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தியது ; அது அவன் மனத்திரையை விட்டு மறைந்திலது ; அந்நிகழ்ச்சியைத் தன் தேர்ப்பாகனிடம் கூறி மகிழ்ந்தான் அக்காதலன்,

" மறத்தற்கு அரிதால் பாக ! பன்னுள்
அறத்தொடு பொருந்திய உலகு தொழில் கொளீஇய
பழமழை பொழிந்த புதுநீர் அவல

நாநவில் பல்கிளை கறங்க,, நாவுடை
மணியொலி கேளாள் வாணுதல்; அதனால்
ஏகுமின் என்ற இளையர் வல்லே
இல்புக்கு அறியுநராக,, மெல்லென
மண்ணாக் கூந்தல் மாசறக் கழீச்
சில்போது கொண்டு, பல்குரல் அழுத்திய
அந்நிலை புகுதலின், மெய் வருத்துறு
அவிழ்பூ முடியினள் கவைஇய
மடமா அரிவை மகிழ்ந்து அயர்நிலையே.'' 1

காதலன் வினை கருதி வேற்றூர் சென்றிருந்தான்; அவன் பிரிவால் வருந்தியிருந்தாள் அவன் மனைவி; அவ் வருத்த மிகுதி, அவள் மேனி நலத்தைக் கெடுத்து விட்டது; நாட்கள் பல கழிந்தன; அவள் அழகு நாள் தோறும் குறைந்துகொண்டே வந்துவிட்டது; அழகிழந் திருக்கும் அவள் நிலை கண்டு கலங்கினாள் தோழி; சில நாட்கள் சென்றதும், போன கணவன் வந்து சேர்ந்தான்; அவள் பண்டே போல் பேரழகு பெற்று விளங்கினாள். அவன் வந்த மறுநாட்காலை, அவளை அவள் தோழி கண்டாள். இயல்புக்கு மாறாக, அவள் பேரழகு பெற்று விளங்குவதை அறிந்தாள் அத்தோழி; ஆனால், அவளுக்கு அவன் வந்து சேர்ந்த செய்தி தெரியாது; என்றாலும், அப்பெண்ணின் அழகுக் காட்சி அவன் வந்து விட்டான் என்பதை உறுதியாக உணர்த்தி விட்டது; தான் கருதி யதை உறுதி செய்ய, ''தோழி! வினை மேல் சென்ற

---

1. நற்றிணை : 42. கீரத்தனார்.

கொளீஇய-மேற்கொள்ளும் வண்ணம். பழமழை-வழக்கமான மழை. அவல-பள்ளங்கள் தோறும். நாநவில்பல்கிளை - தவளைக்கூட்டம். கறங்க-ஒலிக்க. நா-மணி நா. வல்லே-விரைவாக. மண்ணா-மாசுபோக நீராடாத. சில்போது-சில மலர். குரல்-கூந்தல். மெய் வருத்துறூஉ-மெய் தளர்ந்து. கவைஇய-தழுவிக்கொண்ட. மா-சிறந்த. அரிவை-அரிவைப்பருவத்தளாய மனைவி. மகிழ்ந்துஅயர்-மகிழ்ந்து கொண்டாடும்.

விருப்பதால், உன்னை மறந்து மனையில் விடுத்துச் சென்ற மலை நாடனாகிய உன் கணவன், வினையை விரைவில் முடித்துக் கொண்டு, உன்னை விரும்பி வந்துவிட்டான் போலும் ? பிரிந்த கணவனைப் பெற்றுப் பெருமை யுற்றனை நீ என்பதை, நின்நெற்றி அழகே நின்று தெரிவிப்பதாகக் கருதுகிறேன்; யான் கருதுவது சரிதானே ?" என வினவினாள். காதலி காண்பார் மகிழும் பேரழகு பெற்று விளங்குவது, அவள் கணவனோடு கூடி வாழும் காலத்தில் மட்டுமே உண்டாம் என்பதை, அக்காலத் தோழியரும் உணர்ந்திருந்தனர் ; என்னே அம்மகளிர் மாண்பு !

கணவன் இருப்பினும் இல்லாவிடினும், அது குறித்துக் கவலைகொள்ளாது, எக்காலத்தும், எடுப்பாக அணிபெய்துகொண்டு, எவரும் காண, எங்கும் திரிவதே நாகரிகமாம் எனக் கருதும் மகளிர்க்குப் பழந்தமிழ் மகளிர் பால் காணலாம் இப்பண்பாடு நல்லறி வூட்டுமாக,

" மாமலை நாடன் நயந்தனன் வரூஉம்
பெருமை உடையள் என்பது
தருமோ தோழி ! நின் திருநுதல் கவினே."

## அவன் இல்லா இடத்தில் இன்பம் இல்லை :

பொருள்கள், இன்ப துன்பச் சுவைகளை இயல்பாகவே பெற்றுள்ளன எனினும், அவை அச்சுவை உடையவாதல் அவற்றை நுகர்வாரின் மன நிலைக்கு ஏற்பவே அமையும். ஒருவர்க்கு இன்பமாதல், மற்றொருவர்க்குத் துன்பமாம் ; ஒருவர்க்குத் துன்பமாய்த் தோன்றும் ஒரு பொருள், மற்றொருவர்க்கு இன்பமாய்த் தோன்றும், ஒருவர்க்கு, ஒரு காலத்தே இன்பமாய்த் தோன்றிய ஒரு பொருள், பிறிதொரு காலத்தில், அவருக்கே, துன்பமாய்த்

1. நற்றிணை : 399. தொல்கபிலர்.
நயந்தனன்–விரும்பி. திருநுதல்–அழகிய நெற்றியின். கவின்–பேரழகு.

தோன்றுவதுமுண்டு ; ஒரு பொருளின் சுவையினை நுகர்வார், அதை நுகர்தற் கேற்ற உள்ளமுடைய காலத்தில் மட்டுமே, அஃதுஅச்சுவை உடையதாகத் தோன்றும் ; அவரால் அச்சுவையினை அனுபவித்தல் அக்காலத்தில் மட்டுமே இயலும் ; அச்சுவையினை நுகரும் மனநிலை இல்லாதபோது, அவருக்கு அப்பொருள் அச்சுவை உடையதாகத் தோன்ருது ; மாருக, அச்சுவையோடு மாறுபட்ட சுவையுடையதாகவே தோன்றும்.

மணந்து, மனையற வாழ்வு கொண்ட மகளிர்க்குக், கணவனைப் பிரியாது ஒன்று கூடி வாழும் வாழ்வே, மனம் நிறை வாழ்வாம் ; அவ்வாழ்வினும் இன்பம் மிகுந்த ஒரு பொருள், உலகில் வேறு உடையதாக அவருக்குத் தோன்ருது. அக்காலத்தில் அவர் உள்ளம், இன்ப வெள்ளத்தால் நிறைந்து விடுமாதலின், அந்நிலையில் அவர்கள் காணும் ஒவ்வொரு க்ாட்சியும், கேட்கும் ஒவ்வொரு ஒலியும் இன்பம் நிறைந்து வரத் தோன்றும். யாதேனும் ஒரு காரணத்தால், கணவனோடு கூடிவாழும் வாழ்வு இல்லாகிவிடின், அப்போது, அவர் வாழ்வில் இன்பம் மறைந்துவிடும் ; அவர் உள்ளத்தில் இன்பம் அழிந்துவிடும், அவர் உள்ளத்தில் இன்ப ஊற்று அடைபட்டுவிடும் ; துன்ப வெள்ளம் பெருக்கெடுத்தோடும் ; அந்நிலையில் எதையும் அத்துன்பக் கண்கொண்டே காணத்தலைப்படுவர் ; மகிழ்ந்து வாழ்வாரைக் காணினும் அவர் துன்பம் பன்மடங்காம் ; மகிழ்ந்திருப்பார்மீதும், அவர்க்கு மகிழ்ச்சி தரும் பொருள்மீதும் கடுங்கோபம் கொள்வர். இது மகளிர் மன இயல்பு.

வேனிற்காலம், மக்கள் மகிழ்ந்து வாழும் காலம், மக்கள் மகிழும் வண்ணம் இயற்கையின் எழில் விளங்கும் காலம் ; அக்கால இன்பத்தைக், கணவனும் மனைவியு

மாய்க் கூடியிருந்து அனுபவிப்பர் மக்கள். பொருள் தேடிப் போன ஒரு காதலன், அவ் வேனிற்காலம் தொடங்குவதற்கு முன்பே வந்து விடுவதாக வாக்குறுதி யளித்துச் சென்றிருந்தான் ; சென்று திங்கள் பல ஆயின ; அவ்விளவேனிற் பருவமும் வந்துவிட்டது ; ஆனால் அவன் வந்திலன் ; காதலன் வந்துவிடுவன் எனும் நம்பிக்கையால் வீட்டினகத்தே அடைபட்டுக் கிடப்பாள் காதுகளில், இளவேனிற்பருவ வரவுகண்டு மகிழ்ந்து கூவும் குயிலின் குரல் வந்துபுகுந்தது ; அக் குரல், கணவன் வாராமையால் கலங்கியிருக்கும் அவள் துன்பத்தை மேலும் அதிக மாக்கிற்று ; பன்னெடும் காலத்திற்கு முன்னே உண்டாகி, அதுகாறும் ஆறுதிருந்த பழம் புண்ணில், கூரிய வேற்படையைப் பாய்ச்சினாற் போலும் பெருந்துன்பத்தைத் தந்தது அக்குரல் ; வெளியே வந்து ஊர்ப்புறத்தே ஓடும் ஆற்றை நோக்கி னாள் ; பளிங்குபோல் தெளிந்த நீர் நிறைந்தோடும் காட்சி யையும், அந்நீரில், காதலனும் காதலியுமாய் இணைந்து நின்று ஆடுவார் அழகையும் கண்டாள். குயிலின் குரல் கேட்டுத் துயர் உற்ற அவள் உள்ளம், ஆற்றுக் காட்சி களால் மேலும் துயர் உற்றது ; தெருவை நோக்கினாள் ; மாலைக் காலத்தில் மகளிர் சூடிக்கொள்வதற்கேற்ற, குருக்கத்தி மலரும் சண்பக மலரும் விரவித் தொடுக்கப் பெற்ற கதம்ப மாலையை, மலர்மகள் விற்றுவருவதைக் கண்டாள் ; அவளும், அவள் வட்டிலில் வண்டுகள் சூழக் கிடக்கும் மாலையும், அம் மாலையை விலைகூறி விற்கும் அவள் குரலும் பெருந்துயர் தந்தன ; குயிலினும் ஆற்றினும் கொடியவள்போல் தோன்றினாள் அம் மலர் மகள்.

குயிலின் குரல் கேட்டு மகிழ்ந்தவள் அவள் ; அக் குரல் கேட்காதா என ஏங்கியிருந்தவள் ; அவள், இப்

போது அக்குரல் கேட்டு வருந்துகிறாள். கொடிது அக்குயில் எனக் கோபிக்கிறாள்; ஆற்றில் நீர் தெளிந்தோடும் அழகிய காட்சியைக் கண்டு மகிழ்ந்தவள்; காணத் துடித்தவள்; அதை இப்போது கண்டு கண்ணீர் விட்டுக் கலங்குகிறாள்; ஆற்றவும் கொடிய ஆறே! என அதைப் பழிக்கிறாள். மாலையில் மலர்மகளை எதிர்நோக்கி மணிக்கணக்காகக் காத்துக் கிடந்தவள்; அவளைக் கண்டு அவள்பால் மலர்பெற்று மகிழ்ந்தவள்; இப்போது மலர் விற்கும் அவள் குரல் கேட்கவும் வெறுக்கிறாள். இவ்வளவு மாறுதலுக்கும் காரணம், கணவன் அருகில் இல்லாமையே; என்னே அம்மகளிர் மாண்பு!

"இன்று நல்ல படம்; நாளைக்கு அது இல்லையாம்; இன்று உங்களால் வர முடியாது; அதற்காக, நான் அதை இழந்துவிடக் கூடாது; நான் மட்டும் சென்று பார்த்து வருகிறேன்" எனக் கூறும் மங்கையர் எங்கே! கணவன் இல்லாத காலத்தில், தெருவழியாகச் செல்லும் மலர்மகளைக் காணவும் வெறுக்கும் அம்மகளிர் எங்கே!

அழுந்துபடு விழுப்புண் வழும்பு வாய்புலரா
எவ்வ நெஞ்சத்து எஃகு எறிந்தாங்குப்,
பிரிவில புலம்பி நுவலும் குயிலினும்
தேறுநீர் கெழீஇய ஆறுநனி கொடிதே;
அதனினும் கொடியாள் தானே, மதனில்
துய்த்தலை இதழ பைங்குருக்கத்தி யொடு
பித்திகை விரவுமலர் கொள்ளீரோ என
வண்டுசூழ் வட்டியள் திரிதரும்
தண்டலை உழவர் தனிமட மகளே."1

1. நற்றிணை: 97. மாறன்வழுதி.

அழுந்துபடு விழுப்புண் – ஆழ்ந்த பெரிய புண். வழும்பு – நிணம். எவ்வம்–துன்பம். எஃகு-வேல். புலம்பி–வருந்தி. நுவலும்-கூவும். தேறு நீர்–தெளிந்த நீர். கெழீஇய–நிறைந்த. மதனின்–அழகுடைய. துய்த்தலை–மெல்லிய. வட்டி–மலர்க்கூடை.

**கணவன் புகழ் விரும்பும் காதலி :**

தானும் தன் காதலனும் பிறர் புகழ வாழ்தல் வேண்டும் ; தன் இல்லற வாழ்வு இறவாப்புகழ் உடைய தாதல் வேண்டும் என விரும்புவாள் எவளோ, அவளே சிறந்த மனைவியாவாள் ; அத்தகையாளை மனைவியாகப் பெற்றவன், புகழால் நிறைந்த பெருவாழ்வு வாழ்வன் ; ஆகவே மனைவியாவாள், அத்தகைய புகழ் விரும்பியாதல் வேண்டும் ; "புகழ் புரிந்த இல் இலோர்க்கு இல்லை, இகழ்வார்முன் ஏறுபோல் பீடுநடை" என்றார் வள்ளுவர். கணவன் புகழ் நிறைந்த பெருவாழ்வு வாழவேண்டும் எனும் ஆர்வம் உடையவள் அக்காலத் தமிழ்ப்பெண் ; ஒருவன் ஒரு பெண்ணைக் காதலித்தான் ; ஆனால் விரைந்து வந்து மணம் செய்து கொண்டிலன் ; அதனால் அப்பெண் வருந்தினாள். அந்நினைவு மிகுதியால், அவள் உடல் நலம் கெட்டது ; ஒருநாள் தன் தோழியை அழைத்தாள் ; "தோழி ! அவரை மணந்து, அவரோடு மனையறம் மேற்கொண்டு வாழ்ந்து, அக்காலை, அவர் எம் வீடு நோக்கி வரும் பரிசிலர்க்கு வாரி வாரி வழங்க, அவர்பால் பெரும் பொருள்பெற்ற அப் பரிசிலர், 'பண்பு களால் நிறைந்தவர் அவர் ; பேரன்பு வாய்ந்தவர் அவர்' என அவரைப் புகழ்ந்து கூறும் புகழ் உரைகளைக் கேட்க விரும்புகிறது என் உள்ளம் ; ஆனால், அவர் வந்து வரைந்து கொள்ளவில்லையே என்ற வருத்தத்தின் விளைவாய்த் தோன்றிய என் உடல்நலக் கேடு, என்னை அதுவரை வாழவிடாதுபோல் தோன்றுகிறது ; வேனிற் காலத்தில், தேரைகள் காணக் கிடைக்காததுபோல், அவர் புகழைக் காணமாட்டாதே யான் இறந்து விடுவேனோ ?" எனக் கூறி வருந்தினாள் ; காதலன் புகழில் காதலி காட்டும் ஆர்வம்தான் என்னே !

'நாடன், இன்ன நிலையன்; பேரன்பினன் எனப்
பன்மாண் கூறும் பரிசிலர் நெடுமொழி
வேனில் தேரையின் அளிய
காணவிடுமோ தோழி என் நலனே?'' 1

**கடனறிந்த கணவனை விரும்புவாள்:**

இல்லற வாழ்வு, தம்மால் இயன்ற அளவு பிறர்க்குப் பயன்பட வாழும் வள்ளன்மை உடையார்க்கே உரியது; தம்வீடு நோக்கி வருவாரை விரும்பி வரவேற்று, விருந்தளித்து அனுப்பும் வாழ்வே இல்வாழ்வாம்; இல்வாழ்வின் இயல்பு அதுவே. "இருந்து ஓம்பி இல்வாழ்வதெல்லாம் விருந்தோம்பி வேளாண்மை செய்தற் பொருட்டு.'' அவ்வாறு வருவார்க்கெல்லாம் வாரி வழங்கி வாழ்தல், வற்றாப் பெருஞ்செல்வம் வாய்த்தார்க்கு மட்டுமே வாய்க்கும். அப் பெரும் பொருள், தளரா முயற்சி உடையார்க்கே உண்டாம்; ஆகவே விருந்தோம்பி வாழும் இல்லற வாழ்வு, இடையறா முயற்சி உடையார்க்கே ஆகும். "தாளாண்மை என்னும் தகைமைக்கண் தங்கிற்றே வேளாண்மை என்னும் செருக்கு.''

மனைவியாவாள், மனையற மாண்புகள் மிக்க மாட்சிமையுடையளாவள்; அறவோர்க்கு அளித்து, அந்தணர் ஓம்பி, துறவோரைப் பேணிவாழும் பெருவாழ்வே இல்வாழ்வின் பண்பும் பயனுமாம் என அறிந்தவளாதல் வேண்டும்; அவ்வறவாழ்வு பெறத், தன் கணவன் தளரா முயற்சி உடையனாதலை விரும்பி, அவன், அம்முயற்சி மேற்கொண்டு செல்ல விரும்பியவழி, அவனுக்கு விரும்பி விடை அளித்தனுப்பி, அவன் வருங்காறும் ஆற்றி

1. நற்றிணை: 347. பெருங்குன்றூர்கிழார்.
பன்மாண்-அவனுடைய மாண்புகள் பலவற்றை. நெடுமொழி-புகழ்ச்சொல். தேரை-தவளை.

யிருத்தல் அவளுக்கு அறநெறியாம்; இவ்வறநெறி நின்றவள் தமிழ்ப்பெண்.

ஓர் ஆண்மகன் பொருளீட்டிவர வெளிநாடு செல்லக் கருதினன். ஆனல், மனைவியைப் பிரிந்து செல்ல அஞ்சிற்று அவன் உள்ளம்; அதனல் அவள்பால் கூறி விடைபெற்றுச் செல்லத் தயங்கினனாயினும், பொருளின் இன்றியமையாமை, போகாமல் நிற்பதையும் தடை செய்தது. அதனல் போகத் துணிந்தான்; துணிந்தவன், தன் மனைவியின் தோழியை அழைத்து, அவள்பால் தன் கருத்தை அறிவித்தான்; உலகியல் உணர்ந்த அத்தோழி, அவன் போக உடன்பட்டாள்; அவனுக்கு இசைவைத் தந்தவள் அவன் மனைவிபால் சென்றாள். அவள்கணவன் கருத்தையும், அதற்குத் தான் இசைந்ததையும் அஞ்சி அஞ்சி அறிவித்துவிட்டு, அது கேட்டு அவள் வருந்துவளோ என நடுங்கி, அவளையே நோக்கி நின்றாள். ஆனல், அப்பெண்ணே அவள் எதிர்பார்த்தவாறு, கணவன் பிரிவறிந்து கலங்கின ளல்லள்; மாறாக மகிழ்ந்தாள். தோழியை அன்போடு தழுவிக்கொண்டு, "தோழி! ஊக்கம் கொண்டு உழைக்காது ஓய்ந்திருத்தல் ஆடவர்க்கு அழகாகாது; என்றும் வினையே விரும்பும் உள்ளம் உடையராய், ஓயாது உழைப்பதே ஆடவர்க்கு உயிராம்; ஆகவே, கணவர், 'பொருள் தேடிப் போக எண்ணுகிறேன்' என்றதும், அதற்குத் தடைகூறாது, 'சென்று வருக' என விடையளித்துவந்த நின்செயல் நன்று. அந்நன்று புரிந்த உன்னை வாழ்த்துகிறேன்; வணங்குகிறேன். கணவர் பொருள் தேடிப் போவதும், மனைவியர் அவ்வாறு போவாரை, வாழ்த்தி வழியனுப்புவதும் உலகியலா மன்றே?" என்று கூறி மகிழ்ந்தாள்; என்னே அவள் கடனறி உள்ளம்!

"வேற்றுநாட்டு ஆரிடைச்
சேறும் நாம் எனச்சொல்லச், சேயிழை !
நன்று எனப் புரிந்தோய் நன்று செய்தனையே
செயல்படுமனத்தர், செய் பொருட்கு
அகல்வர் ஆடவர் அது அதன் பண்பே."1

**மறுபிறப்பு உறினும் கணவனை மறவாள் :**

காதலன் நினைவு காதலி உள்ளத்தில் என்றும் மங்குவதில்லை. எப்பொழுதும் அது அவனையே நினைந்து கொண்டிருக்கும். அவன் அழகு, ஆண்மை, அவன் மேற்கொண்டவினை, அதனால் அவனுக்குண்டாம் புகழ் என எப்பொழுதும் அவனைப் பற்றிய எண்ணங்களினாலேயே அவள் நெஞ்சு நிறைந்திருக்கும். இது, அவன் அவளைப் பிரியாது உடன்வாழும் காலத்தினும், வினைமுதலாயின குறித்து அவன் வெளிநாடு சென்று வாழும் காலத்தில் அதிகமாம். கணவனைப் பிரிந்த காதலி உள்ளத்தில், அக் கணவனைப் பற்றிய நினைவல்லது வேறு நினைவு நிற்காது. நிற்றல் இயல்பன்று. அஃது அவர்க்குப் பண்புமாகாது. அவள் நெஞ்சம், அவனை இமைப்பொழுதும் மறவாது, அவனைப் பற்றிய எண்ணச் சூழலிலேயே சுழன்று கொண்டிருக்கும் ; இந் நற்பண்பு, நம் பழந் தமிழ்நாட்டு நற்குடி மகளிர்பால் அமைந்து, அவர் அன்பிற்கு அழகு தந்து நின்றது.

காதலன் பொருள்தேடிப் போய்விட்டான் ; நாள் பல கழிந்தன. அவன் குறித்துச் சென்ற காலக் கெடுவும் கடந்துவிட்டது ; ஆயினும் அவன் வந்திலன் ; நாள் ஆக

---

1. நற்றிணை : 24.

ஆர்இடை – கடத்தற்கு அரிய வழி. சேறும் – செல்லத் துணிந்தேம். சேய்இழை-சிறந்த அணிகள் அணிந்தவளே ! புரிந்தோய்-விரும்பி இசைந்தோய். செயல்படு மனம்-பொருள் ஈட்டும் முயற்சி மேற்கொண்ட மனம். அது-போவாரைத் தடுக்காது போ என விடை அளித்தது. அதன் பண்பு-அதற்கு உரிய இயல்பாம்.

ஆக அவள் உள்ளத்தில் அவன் நினைவு அதிகமாயிற்று; அவன் நினைவன்றி வேறு நினைவு அவள் நெஞ்சில் இடம் பெறவில்லை; காதலன், காதலன்சென்றகாட்டுவழி, அவன் மேற்கொண்ட வினை, அதை அவன் முடிக்கும் வகை, முடித்து மீளா அவன் கொடுமை என அவனைப் பற்றிய நிகழ்ச்சிகளையே எண்ணிக்கொண்டிருந்தது அவள் நெஞ்சம்; அவள் நெஞ்சு அவனை மறந்தது. அவனைப் பின்பற்றிச் சென்றுவிட்டது. அந் நினைவு மிகுதியால் அவள் உடல் நலம் கெட்டது; அவள் மேனி அழகிழந்தது; பொன் போலும் நிறம் வாய்ந்த பசலை அவள் உடல் முழுதும் பரவிவிட்டது; அந்நிலையில் ஆங்கு வந்த தன் தோழிபால், "தோழி! காதலனைப் பின்தொடர்ந்து போன என் நெஞ்சு, ஆங்கு அவர்க்குத் துணையாய் இருந்து, மேற்கொண்ட வினையை முற்றுவித்து அவருடன் ஒருங்கு வர எண்ணி உளதோ? அல்லது அவரோடு சென்ற அந்நெஞ்சு, ஆங்கு அது எவ்வளவு கூறியும் விரைவில் வீடு திரும்ப அவர் இசையாமையால், மீண்டு இங்கு வந்து, அவரும் அதுவும் பிரியுங்கால் இருந்த பேரழகு கெட்டுப் பசலை நோய் படர்ந்து கிடக்கும் என்னைக் கண்டு, இவள் நம் தலைவி அல்லள்; வேறு எவளோ என்று எண்ணி வருந்தி, எங்கேனும் சென்று அலைகிறதோ? அறியேன்" எனக் கூறி வருந்தினாள்.

"சென்ற நெஞ்சம் செய்வினைக்கு உசாவாய்
ஒருங்குவரல் நசையொடு வருந்தும் கொல்லோ?
அருளாறுதலின், அழிந்து, இவண்வந்து,
தொன்னலன் இழந்த என்பொன்னிறம் நோக்கி,
'ஏதிலாட்டி இவள்' எனப்
போயின்று கொல்லோ நோய்தலை மணந்தே."1

---

1. நற்றிணை : 56. பெருவழுதியார்.

உசாவாய்-அறிவு கூறி வழிகாட்டும் துணையாய். ஒருங்கு வரல்-கூடி வருதல். நசை-விருப்பம். அழிந்து-வருந்தி. தொன்னலன்-முன்னிருந்த அழகு. பொன்னிறம் - பசலைநோய். ஏதிலாட்டி - வேறு ஒருத்தி; உறவு இல்லாதாள். தலைமணந்து-மிகக் கொண்டு.

பொருள் தேடிப்போன காதலன் வரவை எதிர் பார்த்து எதிர்பார்த்துக் காதலி ஏமாற்றமடைந்தாள்; அவள் துயரம் பெருகிற்று; அவளைத் தேற்ற முன் வந்தாள் தோழி; அத் தோழிக்கு அவள் கூறுகிறாள்: "தோழி! காதலர் வாராமை கண்டு வருந்திய என் தோள்கள் தளர்ந்தன; அவன் வரும் வழியைப் பல காலும் பார்த்துப் பார்த்துப் பார்வை இழந்தன என் கண்கள்; அவன் நினைவே கொண்டு வருந்தியதால், என் அறிவும் மயங்கிற்று; பித்தேறினேன் நான்; உயிர் போகும்பொழுது, தான் அதுகாறும் இருந்து வாழ்ந்த உடலின் நோயையும் உடன்கொண்டு போய்விடுமாதலின், இறக்கும் நிலை பெற்றுள்ள என்னைப்பற்றி வருத்திய நோயும் என்னைவிட்டுப் பிரிந்துபோய்விட்டது; அம்மட்டோ! பிரிந்திருப்பாரை வருத்துவதே விருப்பமாய்க் கொண்ட மாலையும் வந்துவிட்டது; இனி என்நிலை என்னும்? தோழி! நான் இவ்வாறெல்லாம் கூறுவதால், நான் இறப்பைக் கண்டு அஞ்சுகிறேன் என்று நினையாதே; நான் சாவதற்கு அஞ்சவில்லை; ஆனால், இறந்து மறு பிறப்படைந்தால், அப்பிறப்பில், இப்பிறப்பில் என் அன்பைப் பெற்ற, என்பால் பேரன்பு வாய்ந்த என் காதலனை மறந்துவிடுவேனோ என்றே அஞ்சுகிறேன்;" காதலனை மறுபிறப்பிலும் மறக்காதிருக்க விரும்பும் அவள் மாண்புதான் என்னே!

'தோளும் அழியும், நாளும் சென்றென;
நீள் இடை அத்தம் நோக்கி, வாள் அற்றுக்
கண்ணும் காட்சி தௌவின; என் நீத்து
அறிவும் மயங்கிப் பிறிது ஆகின்றே;
நோயும் பேரும்; மாலையும் வந்தன்று;
யாங்காகுவென் கொல் யானே? ஈங்கோ,
சாதல் அஞ்சேன்; அஞ்சுவல், சாவில்

*பிறப்புப் பிறிது ஆகுவதாயின்,*
*மறக்குவேன் கொல் என் காதலன் எனவே.''1*

**காதலன் வினைமுடித்து வருக என விருப்புவாள் :**

எடுத்த வினையை இடையே விடுத்து வருவான், வாழ்க்கையில் வெற்றி காணுன். ஒரு தொழிலைத் தொடங்கி, அதை முடிவு காண முடித்து, அம்முயற்சியாலாம் பயனை நுகர மாட்டாது, இடையில் கைவிட்டு வருவானை உலகம் பழிக்கும் ; அத்தகையான், எத்தொழிலும் மேற்கொள்ளாது வாளா மடிந்திருப்பானினும் இழிவுடையன் ; எடுத்த வினையை எவ்வகையாலும் முடித்து வெற்றி காணல் வேண்டும் ; அது முடியுங்காறும் அவன் செயலும் சிந்தனையும், தொழிலை வெற்றி பெற முடிப்பதிலேயே நிற்றல் வேண்டும்; வேறு வினையில் செல்லுதல் கூடாது ; சென்ருல், எடுத்த வினை கெட்டு விடும் ; அதனுல் அவனுக்குப் புகழ்க் கேடு உண்டாம்.

பழந்தமிழ்ப் பெண், தன் காதலன், தன்னை விட்டுப் பிரியாதிருப்பதையே பெரிதும் விரும்புவள் ; அவன் பிரிய நேரின் பெரிதும் வருந்துவள் ; ஆனல், பொருளின் இன்றியமையாமை உணர்ந்தோ, உற்ருர்க்கு உதவி புரிய வேண்டுவதன் சிறப்புணர்ந்தோ, நாடு காவல் நலம் குறித்தோ பிரிதல் வேண்டும் என உணர்ந்து, அவன் பிரிந்துபோய் விடுவனுயின், அந்நிலையில் தமிழ்ப் பெண், அவன் அவ்வினையை முடித்து வெற்றி காணவேண்டும் என்பதில் பெரிதும் கவலை கொள்வாள். சென்றவன் வேறு

1. நற்றிணை : 397. அம்மூவனுர்.

நாளும் சென்றென என்பதை முன்னே கூட்டுக: அத்தம்-வழி. வாள்-ஒளி. தௌவின-இழந்தன. நீத்து-கைவிட்டு. பிறிது-அறிவுக்கு மாறுபட்ட மயக்கம். பேரும்-விட்டு ஓடும். யாங்காகுவென்-என்ன ஆவேனே ? பிறிது-மக்கட் பிறப்பல்லாத வேறு பிறப்பு.

சிந்தனைகளால் செய்வது மறந்து, வினை வாய்க்காது வந்து விடுவனோ என்று அஞ்சும் அவள் உள்ளம்; அவன் அதை வெற்றி காண முடிக்க வேண்டுவதில் காலம் நீட்டிப்பினும், அதனால் தன் துயர் பெருகினும் கலங்காள்; அவன் வெற்றி ஒன்றே அவள் குறிக்கோளாய் விளங்கும்.

காதலன் பொருள் தேடிவர, வெளிநாடு போயிருக்கிறான்; வீட்டில் அவன் பிரிவைப் பொறுது வருந்தியிருக்கிறாள் அவன் காதலி; இயல்பாக இன்பந் தரும் பொருள்கள் காதலரைப் பிரிந்து தனித்திருப்பார்க்கும் பெருந்துயர் தரும்; மாலைக் காட்சியும் அக்காலத்து நிகழ்ச்சியும் அவர்க்குக் கொடியவைபோல் தோன்றும்; அவ்வின்பத்தைக் கூடியிருந்து அனுபவிப்பதற்கில்லையே எனும் ஏக்கத்தைத் தரும்; ஒருநாள் மாலை, காதலி வீட்டைவிட்டு வெளியே வந்து பார்த்தாள்; காலையில் தம் இளம் பார்ப்புக்களை விடுத்து இரை தேடிப்போன பறவைகள், தம் பார்ப்புக்களை நினைந்து அவையிருக்கும் கூடு நோக்கிப் பறந்தன; முல்லைக் காட்டில், கலைமான், தன் காதலியாய பிணையைத் தேடி அடைந்தது; முல்லைக் கொடிகள் மலர்ந்து மணம் வீசின. காணும் இடம் தோறும் மணிவிளக்கு ஏற்றி வைத்தாற்போல் காந்தள்கள் மலர்ந்தன. தம் வரவை எதிர்நோக்கி வீட்டிலிருக்கும் கன்றுகளைநினைந்து வீடடைந்தன ஆனிரைகள்; அவை விரைந்து வருங்கால், அவற்றின் கழுத்தில் கட்டிய மணிகள் ஆடி ஆடி எழுப்பும் ஓசை, ஆனிரையின் பின் வரும் கோவலர் ஊதும் குழலோசையோடு கலந்து வந்து வீதியில் ஒலித்தது.

இம்மாலைக் காட்சியினைக் கண்டாள் அப்பெண்; பிரிவுத் துயர் பெரிதாயிற்று; சிறிது நாழிகைக்கெல்லாம் அது மறைந்துவிட்டது; வேறு கலக்கம் அவள் உள்ளத்தில் குடிகொண்டது; இம்மாலை இன்பத்தைக் கண்டு

நான் வருந்துகிறேன்; செயலற்றுக் கிடக்கிறேன்; அதனால் எவர்க்கும் எக்கேடும் இல்லை; ஆனால், இது போலும் மாலைக்காலம், வினைகருதிச் சென்று வாழும் அந்நாட்டிலும் உண்டாக, அதைக் காணும் அவர், என்னைப் போன்றே வருந்தத் தொடங்கின், எடுத்துச் சென்ற வினை என்னாம்? மாலைக் காட்சிகளைக் கண்டு, "என்னைப்போல் என் காதலியும் கலங்குவளே; அவளை அங்கே கலங்க விடுத்து இங்கே வந்து நாம் மேற்கொண்டிருக்கும் வினையோ பெரிது?" என எண்ணி, வினை விடுத்து வந்துவிடுவரே; அவர் அவ்வாறு வந்துவிடுவாராயின், வினைக்குறை உண்டாகி பழிவந்து வாய்க்குமே! அவர்க்குப் பழிவரக் கண்டு, அதுவும், அவர் என்மீது கொண்ட காதல் காரணமாக வரக் கண்டு, நான் உயிர் கொண்டு வாழேன்; மனதை மருட்டும் இம்மாலை, அங்கு இல்லாயின் எவ்வளவு நன்றாம்; அது அங்குத் தோன்றாதிராதோ!" என இவ்வாறு சென்றன அவள் கருத்தும் கலக்கமும். என்னே அவள் மனைமாட்சி!

"பறவை பார்ப்புவயின் அடையப், புறவில்
மா எருத்துஇரலை மடப்பிணை தழுவ,
முல்லைமுகை வாய்திறப்பப், பல்வயின்
தோன்றி தோன்றுபு புதல் விளக்கு உருஅ,
மதர்வை நல்லான் மாசில் தெண்மணி
கொடுங்கோல் கோவலர் குழலோடு ஒன்றி
ஐது வந்து இசைக்கும் அருள்இல் மாலை
ஆள்வினைக்கு அகன்றோர் சென்ற நாட்டும்
இனைய ஆகித் தோன்றின்
வினைவலித்து அமைதல் ஆற்றலர் மன்னே." 1

1. நற்றிணை : 69. சேகம்பூதனார்.

பார்ப்பு-குஞ்சு. புறவு-காடு. மா எருத்து இரலை-கருத்த கழுத்தினை உடைய கலைமான். முகை-அரும்பு. வாய்திறப்ப-மலர. தோன்றி-காந்தள். புதல்-புதர்களில். விளக்கு உருஅ-விளக்கேற்றினாற்போல் மலர. மதர்வை-கொழுகொழென வளர்ந்த. தெண்மணி-தெளிந்த மணி ஓசை. ஒன்றி-கலந்து. ஐது - மெல்லிதாக. இனையவாகி - இவ்வியல்புடையவாகி. வினை வலித்து-வினையை உறுதியாக மேற்கொண்டு. அமைதல் ஆற்றலர்-தங்கியிருப்பாரல்லர்.

**கணவனை நம்புவாள் :**

மக்கள் கூடி வாழும் இயல்புடையவர் ; அவ்வியல்புடையார் ஒருவரை யொருவர் நம்பி வாழ்தல் வேண்டும் ; அந்நம்பிக்கை இல்லையேல், அக்கூட்டு வாழ்க்கை பயனற்றுப் போகும் ; பகையுணர்ச்சி வளரும்; ஒரு நாட்டில் வாழ்பவர், ஓரினத்தைச் சேர்ந்தவர் என்ற தொடர்புடையார்க்கே அஃது இன்றியமையாதது என்றால், ஈருடலும் ஓருயிருமென ஒன்றி வாழக் கடமைப் பட்டார்க்கு அஃது எத்துணை இன்றியமையாததாகும் ! காதலன் காதலியின் ஒவ்வொரு சொல்லையும், ஒவ்வொரு செயலையும் நம்புதல் வேண்டும் ; அவ்வாறே, அவளும் அவனை முழுக்க முழுக்க நம்புதல் வேண்டும் ; அதற்கு மாறாக, அவர் ஒருவரை யொருவர் ஐயுறத் தொடங்குவரேல், அவர் வாழ்வு பாழாம் ; தெளிந்தான்கண் ஐயுறவு தீரா இடும்பை தருமன்றோ ?

பழந்தமிழ்ப் பெண், தன் காதலன் அன்பில் பெரு நம்பிக்கை வைத்திருந்தாள் ; அவன் சொல்லில் அசைக்க முடியாத நம்பிக்கை, அவளுக்கு இருந்தது. நீர் சூழ்ந்த நிலம், தன் நிலையில் திரிவது இல்லை ; அது தன் நிலை மாறினும் மாறும் ; காதலன் கூறிய சொல் மாறாது என அக்கணவன் சொல்லில் நம்பிக்கை வைத்து வாழ்ந்தாள்.

காதலன் பொருள்தேடிப் போய்விட்டான் ; போகும் பொழுது, கார்காலம் தொடங்குவதற்கு முன்பே வந்து விடுவதாக வாக்களித்துச் சென்றான் ; அவன் சொல்லில் நம்பிக்கை வைத்துக் காத்துக் கிடந்தாள் காதலி. நாட்கள் பல சென்றன ; கார்காலம் தொடங்கி விட்டது ; நீருண்ட மேகம், வானம் முழுதும் நிறைந்து, இடிக்கத் தொடங்கி விட்டது ; கார்மேகத்தைக் கண்டும், அதன் இடியோசை

கேட்டும், கார்காலம் அதுவெனக் கொண்டு, மயில்கள், தம் தோகை விரித்து மகிழ்ந்தாடத் தொடங்கின. இவற்றைக் கண்டாள் அப் பெண்ணின் தோழி ; கார் காலம் வரவும் காதலன் வந்திலனே எனக் கவலை கொண்டாள் ; தோழியின் கவலையைக் கண்டாள் அப் பெண் ; அவள் அருகிற் சென்று, "கார்மேகமே ! காதலர் கார்காலத் தொடக்கத்தே வருவேன் எனக் கூறிச் சென்றுளார் என்பது உண்மை ; ஆனால் இது கார்காலம் அன்று ; அவ்வாறாகவும், அவர் கூறிச் சென்றதை அறிந்த நீ, என்னை வீணே வருத்தி, என் துயர் நிலை கண்டு மகிழும் ஆசை கொண்டு, காலமல்லாக் காலத்தில் தோன்றி இடிக்கத் தொடங்கி விட்டனை ; என்பால் உனக்கு அன்பில்லை ; அதனால் கார்காலம் தொடங்குவ தற்கு முன்பே தோன்றி என்னை மருட்டத் தொடங்கி விட்டாய். ஆனால் மேகமே ! நான் மலை நாட்டு மயில் அல்லள் ; இது காலமல்லாக் காலத்தில் எழுந்த மேகம் ; காலமல்லாக் காலத்தில் இடித்த இடி என்பதை அறிந்து கொள்ள மாட்டாது கார்காலத்து மேகமும் இடியுமாம் எனக் கருதி மயங்கும் மயில்போல் நானும் மயங்கிவிட மாட்டேன் ; உன் வருகை இயற்கைக்கு மாறானது ; என் பால் அன்பின்மை காரணத்தால் எழுந்தது என்பதை அறிவேனாதலின், உன்னைக் கண்டு மயங்குவே னல்லன். இது, உண்மையில் கார்காலமாயின், காதலர் வந்திருப்பர்; அவர் கார்காலத்தே வருவேன் என்றுகூறிச் சென்றுளார் ; அவர் உரை பொய்யாகாது ; ஆகவே அவர் வரும் காலமே கார்காலமாம் ; அவர் வந்திலர் ; ஆகவே இது கார்காலமன்று" என்று மேகத்தை நோக்கிக் கூறுவாள்போல், தோழிக்கு உரைத்துக், காதலன்பால் தான் வைத்துள்ள தளரா நம்பிக்கையின் திறம் இது என்பதைத் தெளிவாக உணர்த்தினாள்.

இயற்கை பொய்யாம்; என் காதலன் சொல் பொய்யாகாது எனக் கருதும் காதலியின் நம்பிக்கை வாழ்க.

"கார் வரு பருவம் என்றனர்மன், இனிப்
பேரஞர் உள்ளம் நடுங்கல் காணியர்
அன்பு இன்மையின் பண்பில பயிற்றும்
பொய்இடி அதிர்குரல் வாய்செத்து ஆலும்
இனமயில் மடக்கணம் போல
நினை மருள்வேனோ! வாழியர் மழையே!"1

அவள் இவ்வாறு கூறத், தோழி அவளை நோக்கி "பெண்ணே! காதலர் சொல் பிழை படாது; ஆகவே நில்லாது வருவர் என்று கூறுகின்றனையே, உன் உடல் நிலையைச் சிறிது உற்று நோக்குவாயாக; காதலனைக் காணு முன்பு, அவனோடு உறவு கொள்ளாத முன்பு நீ பெற்றிருந்த பேரழகு எங்கே? தளராத் தோளின் பெருமை என்னாயிற்று? இன்று அந்நிலை இழந்து, இவ்வாறு உடல் தளர்ந்து உருக்குலைந்து வாட விடுத்துச் சென்ற கொடியவரன்றோ உன் காதலர்; அத்தகையார் சொல் பிழை படாது என நம்பும் நின் அறியாமையை என்னென்பேன்?" எனக்கூறி எள்ளி நகைத்தாள்; அவள் நகை மொழி கேட்ட அப்பெண், "தோழி! நீ கூறியன அனைத்தும் உண்மை; ஆனால் அவரைப் பற்றி நீ அறியாத ஒன்றை நான் அறிந்துள்ளேன்; அதனாலேயே அவர் வருவர் என உறுதியாக நம்புகிறேன்; தோழி! நட்பின் திறம் தெரிந்தவர் நம் காதலர்; கெட்ட காலத்து விட்டோடும் வகை அறியாதவர்; நண்பர்க்கு, இன்பக் காலத்தில்

---

1. நற்றிணை: 248. காசிபன்கீரனார்.

அனர் – துன்பத்தால் துயர்உறும். காணியர் – காணும் பொருட்டு. பண்பில்–இயற்கைக்கு மாறான. பயிற்றும்–மேற்கொள்ளும். வாய்செத்து–உண்மையாகக் கருதி. ஆலும்–களித்து ஆடும். மடக்கணம்–அறிவில்லாக் கூட்டம். மருள்வேனோ–மயங்குவேனோ?

உதவாதுபோயினும், துன்பக் காலத்தில் தவறுதுசென்று துயர் துடைத்தல் வேண்டும் என அந் நட்பின் இயல் பறிந்தவர்; அத்தகையார், அவர் உயிரோடு ஒன்றி வாழும் உயர்ந்த நட்பு உடையேனுய என் துயரைப் போக்க, விரைந்து வாராது, மறந்து அவண் வாழ்வரோ? வாழார் காண்'' எக்கூறினுள்.

> "தொல்கவின் தொலையத் தோள்நலம் சாஅய்
> நல்கார் நீத்தனராயினும், நல்குவர்
> நட்டனர் வாழி தோழி!''1

காதலி, "காதலர் சிறந்த நண்பர்; விரைந்து வருவர்'' எனக் கூறக் கேட்டும் அமையாத தோழி, அப் பெண்ணை நோக்கி, "பெண்ணே! காதலர் நட்பின் திறம் அறிந்தவர் என்பது உண்மையே. ஆனல் அவர் ஒரு பெரிய புகழ்விரும்பி; அப்புகழ் தேடும் பணிமேற் கொண்டிருக்குங்கால், அவர் தம்நண்பரையும் மறந்து விடுவர்; அம்மட்டோ! அவர், ஒருகால் உன்னை மறவாது மனதில் நினைந்திருந்து வருவதாயினும், நீ கூறுமாறு இக் கார்காலத்தில் இவண் வருதல் இயலாது; அவர் சென்று வாழும் நாடு மிகமிகச் சேய்மைக்கண் உளது. ஆதலின் அவர் வாரார்'' எனக் கூறினுள். காதலர்புகழாசை கொண்டு சேய்நாட்டில்வாழ்கிருர் எனத் தோழி கூறக் கேட்ட அப்பெண். "தோழி! காதலர் புகழின்பால் கொண்ட ஆசையின் அளவினும், அவர் என்பால் கொண்ட அன்பின் அளவு அதிகமாம்; அவ் வன்பு, அப்புகழாசையை வென்றுவிடும்; அவர் எவ் வளவு சேய்நாட்டில் வாழினும், அவரைத் தூரத்திக்

---

1. நற்றிணை: 14. மாமூலனுர்.

தொல்கவின்-பண்டைப் பேரழகு. நலம்-அழகு. சாஅய்-கெட்டு. நல்கார்-அன்பு செய்யாது. நீத்தனர்-பிரிந்தனர். நட்டனர்-நட்பு வைத்துள்ளார்.

கொண்டு வந்து இவண் சேர்த்துவிடும். ஆகவே அவர், உரிய காலத்தில் வந்துவிடுவர் ; வருந்தற்க" எனக் கூறினள். காதலன் சொல்லின் உறுதியில், நட்பின் நலத்தில், அன்பின் பெருமையில் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டு, மாறு இயல்பினவாய இயற்கை நிகழ்ச்சிகளையும் நம்ப மறுக்கும் பழந்தமிழ்ப் பெண்ணின் பெருமையைப் புலவர்கள், பாக்கள் பலபாடிப் பாராட்டிச் சென்றனர்.

'கார் எதிர்ந்தன்றால் காலை, காதலர்
தவச் சேய் நாட்டினராயினும், மிகப்பேர்
அன்பினர் வாழி தோழி ! நன்புகழ்
உலப்பின்று பெறினும் தவிரலர்.''1

**அவள் நடத்தும் இல்லறம் :**

" இருந்தோம்பி இல்வாழ்வதெல்லாம், விருந்தோம்பி வேளாண்மை செய்தற்பொருட்டு" என்றார் வள்ளுவர். பலர்க்கும் பயன்பட வாழ்தலே வாழ்வின் பயனும்; தம்பால் உள்ளது சிறிதளவே ஆயினும், அதிலும் ஒரு பகுதியைப் பிறர்க்கு அளித்து வாழும் பேருள்ளம் வாய்ந்து வாழவேண்டும் ; ஒருவரின் உள்ளம் விரிய விரிய அவர்க்கு நேரும் துன்பத்தின் எல்லை சுருங்கும்; அதனால் விருந்தோம்பி வாழும் வாழ்வை வற்புறுத்தினர், பழந் தமிழ்ப் பெரியோர் ; விருந்தோம்பி வாழ்ந்தனர் அக்கால மக்கள். அவர் வழிவந்த பழந்தமிழ் மகளிர் விருந்தோம்பி வாழும் விழுமிய வாழ்வு பெறுதற்கே மனையறவாழ்வு மேற்

---

1. நற்றிணை : 115.

எதிர்ந்தன்று-தொடங்கி விட்டது. காலை-காலையில். தவச்சேய் நாடு-மிகமிகச் சேய்மைக்கண் உள்ள நாடு. உலப்பின்று-அளவின்றி. தவிரலர்-வாராது அவண் நில்லார்.

கொண்டனர்; வருவார்க்கெல்லாம் விருந்தளித்து வாழும் வாய்ப்பை அளிக்கும் என்ற ஆசையினாலேயே அவர்கள் தம் கணவரைப் பலநாள் பிரிந்திருக்கவும் துணிந்தனர்; அக்கணவர் செய்யும் தவறுகளையும் அது காரணமாய் மறந்தனர். அதனால், அக்கால மகளிர் நல்ல இல்லறத் தலைவியராய் விளங்கினர்.

ஒரு பெண், பொருள்வளம் நிறைந்த பெருவாழ்வு வாழ்ந்து கொண்டிருந்தாள்; பலதூண் நாட்டிக் கட்டிய பெரிய வீடு அவள் வீடு. அவ்வீட்டின் ஒவ்வொரு தூணிலும் ஒவ்வொரு எருமை கட்டப்பெற்றிருக்கும். நலம் வாய்ந்த நல்லுடல்; சிவந்த மேனி; காதில் குழை; கைவிரல்களில் சிறு சிறு மோதிரம்; அழகிய மெல்லிய ஆடை; இது அவள் கோலம்; இத்தகையாள், சோறு ஆக்குதல் முதலாம் இல்லறப் பணிகளைப் பணிப் பெண்கள்பால் ஒப்புவித்திலள். விருந்தினர் விரும்பி உண்ணும் வண்ணம், உணவைத் தானே சமைக்க முனைந்தாள். சமயலறையுள் புகுந்தாள்; கண்ணில் புகை படிதலையும் கருதினாளல்லள்; பிறைத் திங்கள்போல் பேரொளி வீசும் நெற்றியில் வியர்வைநீர் கொட்டுவதையும் பொருட்படுத்தினாளல்லள்; சோறு, கறி, குழம்பு முதலிய வற்றை வகை வகையாகப் பண்ணினாள்; வாழை இலையை எடுத்தாள்; அதன் அடிக்காம்பை அறுத்தெறிந்தாள். எல்லாம் முடிந்தது; விருந்ினரை அழைத்து, உண வளிக்க வேண்டியதே; உடனே, கரிபடிந்தும், வியர்வை நீர் வழிந்தும் மாசுபட்டிருக்கும் முகத்தைக் கழுவி முன்தானையால் துடைத்துக் கொண்டாள்.

வந்த விருந்தினர் உள்ளே நுழைந்தார்; அவரைப் பின்தொடர்ந்து அவள் கணவனும் நுழைந்தான். அவன் பரத்தைவீடு சென்றிருந்தவன்; அப்பொழுதுதான்

வீட்டிற்கு வந்துளான்; விருந்ினரோடு சென்ருல், மனைவி தன்னை வெறுத்துத் துரத்தாள்; மாருக மகிழ்ந்து வரவேற்பள் என அறிந்து விருந்தினரோடு நுழைந்து விட்டான். கணவன் பரத்தையர் ஒழுக்கம் கண்டு, அவன் மீது கடுஞ்சினம் கொண்டு, அவனை வெறுத்தவள். அவன் வந்தால், வீட்டினுள் நுழையவிடாதே வாயில் அடைத்து வழிமறுக்கக் கருதியிருந்தவள், அவன் விருந் தோடு புகுந்துவிடவே எதுவும் செய்திலள்; விருந்தினர் முன்னிலையில், கணவனெடு ஊடியிருத்தல் கற்புநெறி யாகாது என உணர்ந்தவளாதலின், அவனையும் நகை முகம் காட்டி விரும்பி வரவேற்ருள். இருவரையும் அமர்த்தி, அறுசுவை உணவிட்டு உபசரித்தாள். தன் மனைவியின் மனையற மாண்பு கண்டு மகிழ்ந்ததோடு, தன்பால் உள்ள தவற்றினை, விருந்தோம்பும் விருப்பத் தால் மறந்துபோன அவள் மனத்தூய்மை கண்டு மகிழ்ந்து பாராட்டினன் கணவன். தன் இல்லத்தில், அவ்வின்பச் சூழ்நிலையே என்றும் நிலைபெற, விருந்தினர் நாள்தோறும் வருவாராக என வேண்டிக்கொண்டான். இவ்வாறு, விருந்தோம்பும் விருப்பத்தால், கணவன் செய்யும் கொடிய பிழையையும் மறக்கும் மனையறத் தலைவி யாய் வாழ்ந்தாள் பழந்தமிழ்ப் பெண். வாழ்க அவள் மனையறம்!

"தடமருப்பு எருமை மடநடைக் குழவி
தூண்தொறும் யாத்த காண்தகு நல்இல்,
கொடுங்குழை பெய்த செழும் செய் பேதை,
சிறுதாழ் செறித்த மெல்விரல் சேப்ப,
வாளை ஈர்ந்தடி வல்லிதின் வகைஇப்
புகைஉண்டு அமர்த்த கண்ணள்; தகைபெறப்
பிறைநுதல் பொறித்த சிறுநுண் பல்வியர்
அந்துகில் தலையில் துடையினள், நப்புலந்து

*அட்டிலோளே அம்மா அரிவை ;*
*எமக்கே, வருகதில் விருந்தே, சிவப்பாளன்று*
*சிறியமுள் எயிறு தோன்ற*
*முறுவல் கொண்ட முகம் காண் கம்மே.'' 1*

---

1. நற்றிணை : 120. மாங்குடி கிழார்.

தடமருப்பு-வளைந்த கொம்பு. மடநடை-இளமைப் பருவம் உடைய. யாத்த-கட்டிய. கொடுங்குழை-வளைந்த காதணி. பெய்த-அணிந்த. செழும் செய்பேதை-நல்லுடலும் செந்நிறமும் உடையாள். தாழ்-மோதிரம். தடி-இலை. தகைபெற-அழகுபெற. அந்துகில்-அழகிய ஆடை. நப்புலந்து-நம்மை வெறுத்து. அட்டிலோள்-சமையல் அறை புகுந்தாள். தில்-விருப்பப் பொருள் குறிக்கும் ஓர் இடைச் சொல். சிவப்பாள்-கோபம் கொள்வாள். எயிறு-பல.

# 8. உலகியல் உணர்ந்த தோழி

**ப**ழந்தமிழ்ப் பெரியோர்கள், தாம் பெற்ற மக்கள், அறிவும் ஒழுக்கமும் வாய்ந்த ஆன்றோராதல் வேண்டும் என விரும்பினர். விரும்பியதோடு நின்றனரல்லர். கற்பன கற்று, கற்றவழி ஒழுகும் வகையில் அவரை வளர்த்தனர். ஒருவரை, ஒழுக்கநெறி மிக்க உயர்ந்தோராக்குவனவும், ஒழுக்கக்கேடு மிக்க இழிந்தோராக்குவனவும், அவர் இளமைப் பருவத்தில் பெறும் பழக்க வழக்கங்களே யாகும். அப்பருவத்தில், அவர் நல்ல பழக்கவழக்க முடையராயின், பிற்காலத்தில், அவர், பல்லோர் போற்றும் பெரியோராய் வாழ்வர். அப் பருவத்தே, அவர் தீயொழுக்கநெறி செல்வராயின், பிற்கால வாழ்வில் பலரும் பழிக்கும் இழிந்தோராவர். இளமையின் இவ்வாற்றல் உணர்ந்த பழந்தமிழ்ப் பெரியோர்கள், தம் இளம் சிறுவர்களின் பழக்கவழக்கங்களை வகுப்பவர், அவ்விளமைக் காலத்தில் அவரோடு சேர்ந்து வாழ்வோரே என்பதையும் உணர்ந்திருந்தனர்.

நல்ல நிலத்தில் நிற்கும் நீர், நன்னீராதல் போலவும் உவர் நிலத்தில் நிற்கும் நீர் உப்பு நீராதல் போலவும், நல்லோரை நண்பராகப் பெற்றவர் நல்லோராதலும்,

தீயோரை நண்பராகப் பெற்றவர் தீயோராதலும் உலகியற்கை. நண்பர்களின் நல்லொழுக்கம், ஒருவரின் தீயொழுக்கத்தை அழித்து நல்லோராக்கும். அந் நண்பர்களின் தீயொழுக்கம், ஒருவரின் நல்லியல்புகளைக் கெடுத்து, தீயோராக்கும். "நிலத்தியல்பால் நீர் திரிந்தற்றாகும்; மாந்தர்க்கு இனத்தியல்பதாகும் அறிவு" என்றார் வள்ளுவரும். அதனால், நண்பர் நல்லோராயின் அவரும் நல்லோராவர். அந்நண்பர் தீயோராயின் அவரும் தீயோராவர். ஒருவரைச் சேர்ந்து வாழும் நண்பர்களின் இயல்பைக்கொண்டு அயர் இயல்பையும் அறிந்து கொள்ளலாம்; "இனத்தான் ஆம், இன்னான் எனப்படும் சொல்."

ஒருவரை நல்லோராக்குவதும், தீயோராக்குவதும் நண்பர்களின் இயல்பைப் பொறுத்து ஆம் என்பதை அறிந்த அக்காலப் பெரியோர்கள், தம் மக்களோடு தொடர்புகொண்டு வாழும் நண்பர்கள் நல்லோராதல் வேண்டும் என்பதில் பெரிதும் விழிப்புடையராய் இருந்தனர். அதனால் தம் மகளிரின் விளையாட்டுத் துணையாய் வரும் தோழிப் பெண்கள், அறிவால் நிறைந்தவராய், ஆன்றோர் கூறிய அறநெறி நிற்பவராய், உலகியல் உணர்ந்த உயர்வுடையராய் விளங்குதல் வேண்டும் என எண்ணித், தம் மகளிர் அத்தகையோரையே சேர்ந்து வாழக் கண்டு மகிழ்ந்தனர். தோழி எனும் தகுதி பெற்ற அவ்விளையாட்டுத் துணைவியும், பெற்றோர் நம்பிக்கை வீண் போகாவாறு, அவர் மகளிரின் நல்வாழ்வில் நாட்டமுடையவராய் விளங்கினர்.

**கடமையில் தவறேன் :**

தினைப்புனம் காத்திருந்த ஒரு மலைநாட்டுப் பெண், ஓர் ஆண் மகனைக் கண்டு காதலித்தாள். அவன் கூட்

டுறவால் அவள் உடலழகும் சிறிதே மாறித்தோன்றிற்று. அவனைப் பற்றிய நினைவு மிதியால், கதிர்களைக் கவர்ந்து செல்லும் கிளிகளை ஓட்டவேண்டும் என்பதையும் மறந்தாள்; அப்பெண்ணின் தோழி இதை உணர்ந்தாள்; தன் காதல் ஒழுக்கத்தை அப்பெண் தானே உணர்த்துவாள் என எண்ணினாள் தோழி.; அவள் உணர்த்தவில்லை. தோழிக்குச் சிறிது கோபம் உண்டாயிற்று ; ஒருயிரும், ஈருடலுமாகப் பழகும் என்னிடத்தில் உண்மையை உரைக்கவில்லையே என எண்ணினாள் ; அதனால் அவளுக்கு அறிவு வரச் செய்தல் வேண்டும் என விரும்பினாள்; உடனே அவள்பால் சென்று, அவள் கண்களை நோக்கினாள்; அவை சிவந்திருப்பதைக் கண்டாள்; "பெண்ணே! நம் தினைப்புனத்தைக் காத்துவரும் நம்மவர், தினைக் கொல்லையை அழிக்கவரும் பன்றி முதலாம் விலங்குகளைக் குத்திக் கொன்று ஏந்திய அம்பு, அவ் விலங்குகளின் இரத்தக்கறை படிந்து சிவந்து தோன்றுவதுபோல் செவ்வரி பரந்து சிவந்து தோன்றும் உன் கண்களின் அழகை எவ்வாறு பாராட்டுவேன் !" என முதலில் அவள் அழகைப் பாராட்டினாள். பின்னர் அவளை அழைத்துச் சென்று, தினைப்புனத்தைக் காட்டி, " பெண்ணே ! கதிர்களைக் கிளிகள் கவர்ந்து செல்லும் அழகைப் பார்; அவை கவர்ந்து செல்வதை, மலையுச்சிகளில் அமர்ந்து மயில்கள் பார்த்துக் கொண்டிருப்பதையும் பார் ; கதிர்களைக் கவர்ந்து செல்லும் தம் செயலை, மயில்கள் அறிந்தில என எண்ணி ஏமாறும் கிளிகளின் அறியாமையை என்னென்பது !" என்று கூறி நகைத்து மகிழ்ந்தாள்.

தோழி இவ்வளவே கூறினாள் ; அதைக் கேட்ட அப்பெண்ணின் அறிவு எதை எதையோ எண்ணத் தொடங்கிற்று. " என் கண்களை மாவீழ்த்துப் பறித்த அம்பிற்கு ஒப்பிடும் தோழியின் கருத்து யாது ?

'ஆண்மகன் ஒருவனைக் கண்டு, அவன் உள்ளத்தில் பாய்ந்து, அவனுக்குக் காதல் நோய் அளித்து மீண்ட கண்கள் உன்கண்கள்' என்று என் காதலொழுக்கத்தைக் கண்டு கடிந்து கூறிய சொற்களன்றோ அவை? மயில்கள் பார்த்துக்கொண்டிருக்கவும், அவை பார்க்கவில்லை என எண்ணிக் கிளிகள் கதிர் கவர்ந்து செல்லும் காட்சியை எனக்குக் காட்டிய அவள் கருத்து யாது? 'நீ கொண்டுள்ள காதலொழுக்கத்தை நான் அறிவேன்; அதை நான் அறியேன்' என எண்ணி, என்னை ஏமாற்ற எண்ணுறு கின்றனை நீ என என்னை நோக்கி எள்ளி நகைத்துக் கூறியனவன்றோ அவை?'' என இவ்வாறு பலப்பல எண்ணிற்று அப்பெண்ணின் உள்ளம்.

'' தினைப்புனத்தைக் காக்கவேண்டியது உன் கடமை அதில் நீ தவறிவிட்டாய்; கிளிகள், கதிர்களைக் கவர்ந்து செல்லவும், வாளா இருக்கின்றனை; களவு போகிறது என்பதை அறியவோ, அதைத் தடுக்கவோ உன்னால் முடியவில்லை; நீதான் இவ்வாறு கடமையில் தவறிவிட்டாய் என்றால், என்னையும் கடமையில் தவறுபவள் எனக் கருதிவிட்டனை; கடமையில் தவறேன்; உன்னைக் காக்கும் கடமையுடையவள் நான்; அதனால் உன் காதலொழுக்கத்தையும் அறிந்துளேன்; நீ கடமையில் தவறியதையும் அறிந்துளேன்; உன் காதல் வாழ்வில் பிழை நேராவண்ணம் உன்னைக் காக்கக் கடமை பூண்டுள்ளேன்' என்பதைக் கூறாமல் கூறி விளங்க வைக்கும் அத்தோழியின் கடமையுணர்ச்சியைக் கண்டு பாராட்டுவோமாக.

'ஏனல் காவலர் மாவீழ்த்துப் பறித்த
பகழி அன்ன சேயரி மழைக்கண்
நல்ல பெருந்தோ ளோயே! கொல்லன்
எறிபொன் பிதிரிற் சிறுபல் காய

வேங்கைவீ உகும் ஓங்குமலைக் கட்சி
மயில் அறிபு அறியா மன்னோ
பயில்குரல் கவரும் பைம்புறக் கிளியே."1

தோழி கூறிய சொற்கள், அப்பெண்ணின் உள்ளத்தில் ஒரு பெரிய புயலைக் கிளப்பிவிட்டன ; "நான் என் காதலொழுக்கத்தை ஒருவரிடமும் உணர்த்திலேன் ; அதை, நானும் என் காதலனுமே அறிவோம் ; வேறு எவரும் அறியார் ; அவ்வாருகவும், இத்தோழி எவ்வாறு அறிந்தாள் ?" என எண்ணிற்று அப்பெண்ணின் உள்ளம் ; அவள் மனக் குறிப்பை, அவள் முகக் குறிப்பால் அறிந்துகொண்ட தோழி, "பெண்ணே ! நீயும் நானும் ஓருயிரும் ஈருடலும்போல ஒன்றி வாழும் உரிமை உடையமல்லமோ ? அதனுல், உன்பால் உண்டாம் சிறு மாறுதலையும் நான் அறிவேன் ; அத்தகைய நெருங்கிய தொடர்புடைய நான், உன் உடல், அழகு கெட்டுப் பகலில் ஏற்றிய விளக்கொளிபோல் மங்கித் தோன்றுவதையும், பேரழகு தரும் உன் நெற்றி, பாம்பு உண்ட திங்கள் ஒளி குன்றுவதுபோல் பசலை படர்ந்து பாழுற்றுத் தோன்றுவதையும் அறியாதிருப்பேனே ? அவை உன் உள்ளக் கலக்கத்தையும், அதற்குக் காரணமாய உன் காதல் ஒழுக்கத்தையும் உணர்த்திவிட்டன ; அதனுல், அதை நீ அறிவிக்கவேண்டாதே, அறிந்துகொண்டேன்; என்னையும் ஏமாற்றும் ஆற்றல் உனக்கு உண்டோ ?" என்ருள் ; தன்பால் ஒப்படைக்கப்பட்டாளின் உடல் நலத்தில் உண்

1. நற்றிணை : 13. கபிலர்.

ஏனல்-தினைப்புனம். வீழ்த்து-கொன்று. பகழி-அம்பு. சேய்அரி-செவ்வரி பரந்த. மழைக்கண்-அருள் நிறைந்தகண். எறிபொன் பிதிரில்-காய்ச்சி அடிக்கும் இரும்பினின்றும் தெறிக்கும் பொறிகள் போல். வீ-மலர். உகும்-உதிரும். கட்சி-கூடு. அறிபு-அறிதலை. பயில்குரல்-பருந்த தினைக் கதிர்களை.

டாகும் சிறு சிறு மாறுதல்களையும் ஊன்றி நோக்கிக் காக்கும் தோழியின் கடமையுணர்ச்சி போற்றுதற்குரிய தன்றோ ?

" பகல் எரி சுடரின் மேனி சாயவும்
பாம்பு ஊர் மதியின் நுதல் ஒளி கரப்பவும்,
எனக்கு நீ உரையா யாயினை ; நினக்கு யான்
உயிர் பகுத்தன்ன மாண்பினேன் ஆகலின்,
அது கண்டிசினால் யானே."1

**அவள் கூறும் அறிவுரை :**

தன்பால் ஒப்படைக்கப்பட்ட பெண்ணின் நல்வாழ்வில் நாட்டம் உடையவள் தோழி ; பெண் பெரிய இடத்தில் பிறந்தவள் ; செல்வத்தில் சிறந்தவள் ; அதனால் அவள் விரும்பியதையே தானும் விரும்புதல் வேண்டும் ; அவள் கருத்திற்குத் தான் அடங்கிப் போதல் வேண்டும் ; அவள் போக்கிற்குத் தடை விதித்தல் கூடாது என எண்ணாள். அப்பெண்ணின் செயலில் பிழை காணின் அதை எடுத்துக்காட்டி, இடித்துக் கூறித் திருத்த, அவள் சிறிதும் தயங்காள் ; பெண் பிழை புரியும்வரை பார்த்திருந்து, அதன் பின்னர் அவளைத் திருத்தும் இயல்பும் அவள்பால் இல்லை. பெண் பிழை புரிவதற்கு முன்னரே, அவளுக்கு வேண்டும் அறிவுரை வழங்கி, அப்பிழை நேராவண்ணம் காப்பாற்றுவள். பெண்ணின்பால் பேரன்பும், அவளைப் பெருவாழ்வில் வாழ்வித்தற்கு வேண்டும் பேரறிவும் அவள்பால் பொருந்தியிருந்தமையால், அவள் துணைபெற்ற அப் பெண்ணும் நல்வாழ்வு வாழ்ந்தாள்.

---

1. நற்றிணை : 128. நற்சேந்தனார்.

சுடரின்-விளக்குபோல். சாயவும்-ஒளி கெடவும். பாம்புஊர்-பாம்பினால் மறைக்கப்பட்ட. நுதல்-நெற்றி. கரப்பவும்-மறையவும். பகுத்தன்ன-ஒன்றை இரண்டாக்கினால் போன்ற. கண்டிசின்-அறிந்து கொண்டேன். ஆல்-ஆசை.

**காதலன் தகுதி அறிந்து கணவனைக் கொள் :.**

மலைநாட்டு மகன் ஒருவன், ஒரு பெண்ணைக் கண்டு காதலித்தான். அவளும் அவனைக் காதலித்தாள். அவர்கள் காதல் வாழ்வைப் பெண்ணின் பெற்றோர் அறியார்; அதனால் அவர்கள் காதல் அப்பெற்றோர் அறியாவாறே வளர்ந்து வந்தது. அக்களவு வாழ்வை அப்பெண் விரும்பவில்லை. பெற்றோர் தரப், பலர் அறிய மணந்து வாழும் வாழ்வையே விரும்பிற்று அவள் மனம்; ஆனால், அவன் அது குறித்துச் சிந்தித்திலன்; களவு வாழ்வில் பேரின்பம் இருக்கக் கண்டு, அவ்வாழ்வில் மேலும் சிலநாள் வாழ விரும்பிற்று அவன் உள்ளம்; அதனால் பெண் பெரிதும் கவலை கொண்டாள்; அதை அறிந்தாள் தோழி; அவன் அப்பெண்ணைக் காதலிக்கின்றானாயினும், அவனுக்கு அவள்பால் உண்மை அன்போ, அருளோ இல்லை. இருக்குமாயின், காதலியின் கவலை கண்டு கலங்காதிரான்; அவன் அது செய்திலன்; அருளுடையார், தம்மோடு எவ்விதத் தொடர்பும் இல்லாதார் துயரைக் காணவும் கலங்கிக் கண்ணீர் விடுவர்; இவனோ, தன் காதலியின் கண்ணீர் கண்டும் கலங்குவதிலன்; அன்போ, அருளோ உடையார் அவ்வாறு இரார்.

அவன்பால் அன்பில்லை; அருள் இல்லை என்பது மட்டுமன்று, அவன்பால் உயர்ந்த ஒழுக்கமும் இல்லை. அறிவறிந்த பெரியோர்கள், களவொழுக்கத்தை விரும்பார். களவைக் கைவிட்டுப் பலர் அறிய மணங்கொள்ளும் வாழ்வையே விரும்புவர். அத்தகைய உயர்ந்த ஒழுக்கத்தையே அவர் உள்ளம் நாடும்; ஆனால்பெண்ணின் காதலனோ, அவ்வொழுக்க நெறி நிற்க விரும்பவில்லை. இவ்வாறு அன்போ, அருளோ, ஆன்றோர் ஒழுக்கநெறி

நிற்கும் அறிவோ இல்லாத ஒருவனை, அப்பெண் காதலிப்பதுகண்டு தோழி வருந்தினாள், வருந்தியதோடு நில்லாது, அப்பெண்பால், அவன் இயல்பு இன்னின்ன என்பதை எடுத்துக்கூறி, "இத்தகையானைக் காதலித்து, ஏற்றுக் கொள்வதன் முன்னர், அவன் இத்தகையன் என்பதை அறிந்துகொள்வது நல்லதன்றோ" என நயமாகக் கூறினாள்.

ஒரு பெண்ணின் காதலைக் கொள்ளை கொண்ட ஒருவன் குறைபாடுகளை, அப்பெண்ணிடத்தே கூறுவதால் பயன் இல்லை என எண்ணி அடங்கி விடாது, அவள் அறிய எடுத்துக்கூறும் துணிவும், நல்லுள்ளமும் வாய்க்கப்பெற்ற அத்தோழியின் செயல், சிறந்தோர் போற்றும் செம்மையுடைத்தன்றோ!

"நாடனை அருளினை யாயின்,
இனியென கொள்ளலை மன்னே; கொன்ஒன்று
கூறுவன் வாழி தோழி! முன்னுற
நார்உடை நெஞ்சத்து ஈரம் பொத்தி
ஆன்றோர் சென்னெறி வாழாச்
சான்றோன் ஆதல் நற்கு அறிந்தனை தெரிமே."1

**தேர்ந்து தெளிக; தெளிந்த பின் ஐயுறற்க:**

பாம்போடு பழகினும் பிரிவரிது என்பது ஓர் உலகியல் உண்மை; ஒருவரோடு பழகிய பின்னர், அவர் தொடர்பை அறுத்துக்கொள்வது அவ்வளவு எளிதில் இயலாது. அதனால் ஒருவரோடு தொடர்புகொண்டு பழகத்

---

1. நற்றிணை: 233. அஞ்சிலாந்தையார்.

கொன்ஒன்று-பயன் தாராத ஒன்றை. நார்-அன்பு. ஈரம்-அருள். பொத்தி-நிறைந்து. சென்னெறி-சென்ற நல்வழி. வாழாச் சான்றோன்-ஈண்டுச் சான்றோன் என்றது இகழ்ச்சிக் குறிப்பு. நற்கு-நன்கு. தெரிமே-தெளிவாயாக.

தொடங்குவதற்கு முன்பே, அவர் பழகுதற்குரிய பண்புடையவர்தாமா என்பதை ஆராய்ந்து அறிந்து கொள்ளுதல் வேண்டும்; ஒருவரின் தகுதி, தகுதியின்மைகள், அவர் தொடர்புகொண்டிருக்கும் நண்பர்களின் தகுதி, தகுதியின்மைகளுக்கேற்பவே அமையும் ஆதலாலும், ஒருவர் இயல்பினை, அந்நண்பர்களின் இயல்பினைக் கொண்டே, உலகோர் மதிப்பிடுவர் ஆதலாலும், நண்பர்களைத் தேடிக்கொள்வார், பெரிதும் விழிப்பாயிருந்து, அந்நண்பர்களின் இயல்புகளை நன்கு அறிந்து கொள்ளுதல் நலமாம். அவ்வாறின்றி, ஒருவரோடு தொடர்புகொண்டு, நெருங்கிப் பழகிவிட்டுப் பின்னர், அவர் தகுதி, தகுதியின்மைகளை ஆராய்தல் அறிவுடைமையாகாது; அவ்வாறு ஆராய்ந்து பார்த்தவிடத்து, அவர் தகுதியற்றவராதல் அறியப்பெறின், "இவர் இயல்பறியாது, இவரோடு நட்புக்கொண்டு விட்டேனே!" என வருந்த நேரிடும். அந்நிலையில் அவ்வாறு வருந்துவதல்லது, அவர் தொடர்பை அறுத்துக்கொள்வது இயலாது; அவர்தரும் தொல்லைகளை, உள்ளம் நொந்தாயினும் தாங்கிக்கொள்ள நேருமேயன்றி, அவற்றினின்றும் தப்பித்துக்கொள்ளுதல் இயலாது. ஆகவே, அறிவுடையார், ஒருவரை நண்பராக மேற்கொள்வதன் முன்னரே, அவர்தம் இயல்புகளை ஆராயத் தொடங்கிவிடுவர்; ஆராய்ந்து, அவர் நல்லவர் என்பது அறிந்தபின்னரே, அவரை நண்பராகக் கொள்வர். கொண்டுவிட்டு, அதன் பின்னர் அவர் இயல்புகளை ஆராய எண்ணார்.

இந்த உண்மை உணர்ந்தவள் தோழி; தான் உணர்ந்த உண்மையைத் தக்க இடத்தில், தன்பால் ஒப்படைக்கப்பட்ட பெண்ணிற்கு உணர்த்தும் உயர்ந்த உள்ளமும் கொண்டிருந்தாள். ஒரு பெண், மலைநாட்டிற்குரியோனாய ஓர் ஆண்மகனைக்கண்டு காதல்கொண்டாள்;

அவனும் அவளைக் காதலித்தான். அவர்கள் காதல் வளர்ந்தது; ஊர்அறிய மணந்து வாழ விரும்பினாள் அப் பெண்; ஆனால், அவனோ, மணவினை சிலநாள் கழித்து நிகழ்வதையே விரும்பினான்; அதனால் அவள் அவன்மீது சினம்கொண்டாள்; அவனைக் காணவும் வெறுத்தாள்; அவளைத் தேடிப் பலநாள் வந்தும், அவளைக் காண மாட்டாது வறிதே மீண்டான் அவன்; இதைக் கண்டாள் தோழி; காதல் கொண்டவனை, இனிக் கைவிடுதல் இயலாது; ஆகவே அவன் விருப்பத்திற்கேற்ப நடந்து கொள்வதே நலமாம்; அதற்கு மாறாக, அவனை வெறுத்தல் நலம் தாராது என உணர்ந்தாள்; உணர்ந் ததை அப்பெண்ணிற்கு எடுத்துரைத்தாள்; ஆனால், அப்பெண் அதை ஏற்றுக்கொள்ளவில்லை. தோழிக்குச் சிறிதே சினம் பிறந்தது: " பெண்ணே! காதலன் வருந்துகிறான்; அவனை வருந்தவிடுவது கூடாது என நான் கூறுகிறேன்; அதை நீ ஏற்றுக்கொண்டிலை; பெரி யோர், ஒருவர் இயல்பை ஆராய்ந்து, அவர் நல்லவராதல் அறிந்து நட்புக்கொள்வதல்லது, ஒருவர் இயல்பை அறியாதே, அவரை நண்பராக ஏற்றுக்கொண்டு, அதன் பின்னர் அவர் இயல்பை ஆராய்ந்து நோக்க எண்ணார்; பண்பாட்டிற் சிறந்த பெருந்தகையாய நீயும், இவனைக் காதலிப்பதன் முன்னர், இவன் குணங்களை, நீயே நன்கு ஆராய்ந்து அறிந்திருத்தல்வேண்டும்; அல்லது, உன் உடன் ஆடும் தோழியருள், உன் உள்ளம் விரும்பும் சிலரோடு கலந்து, இவன் நல்லவனா அல்லது கெட்டவனா என்பதை ஆராய்ந்திருத்தல்வேண்டும்; ஆனால், நீ அவ்வாறு ஆராயத் தவறிவிட்டாய்; இவனைப் பற்றிய எதையும் நீ அறிந்துகொள்ளவில்லை; கண்டவுடனே காதல் கொண்டு விட்டனை; இப்போது, இவன் செயல் கண்டு வருந்துகின்றனை; இவனைக் காணவும் மறுக்

இன்றாய்; உன் செயல்கண்டு அறிவுடையோர் பழிப்பர்; ஆகவே, அவன் இயல்புகளை இப்போது எண்ணிப் பார்ப்பதை விடுத்து, அவனை ஏற்றுக்கொள்வாயாக; அதுவே அறிவுடைமைக்கு அழகாம்" என இடித்துக் கூறித் திருத்தினாள்.

"அம்மலை கிழவோன் நம்நயந்து என்றும்
வருந்தினன் என்பதோர் வாய்ச்சொல் தேறாய்;
நீயும் கண்டு, நுமரொடும் எண்ணி,
அறிவறிந்து அளவல் வேண்டும்; மறுதரற்கு
அரிய; வாழி தோழி! பெரியோர்
நாடி நட்பினல்லது
நட்டு நாடார் தம்ஒட்டியோர் திறத்தே."1

**சொல்லின் செல்வி :**

கூடி வாழவேண்டிய கட்டாயம் பொருந்திய இவ்வுலகில், ஒருவர் கருத்தை யொருவர் உணர்ந்து ஏற்றுக் கொள்வது மிகமிக இன்றியமையாதது. உண்மையானது, உறுபயன் தரத்தக்கது, எனத் தம் உள்ளம் உணர்ந்த ஒரு கருத்தைத், தம்மைச் சூழ்ந்து வாழும் பிறரும் ஏற்றுக் கொள்ளுமாறு எடுத்துரைக்கவல்ல ஆற்றல் ஒவ்வொருவருக்கும் வேண்டும்; அச்சொல்லாற்றல் உடையவரே, மக்களை ஒன்றுபடுத்தி வாழச்செய்யும் வகையறிந்தவராவர். எத்தகைய பொருளையும், எத்தகைய நிலையில் உள்ளவரும் ஏற்றுக்கொள்ளும் வண்ணம் எடுத்துரைக்க

---

1. நற்றிணை : 32. கபிலர்.

அம்மலை-அழகிய மலை. கிழவோன்-உரிமை உடையோன். நம்நயந்து-நம்மை விரும்பி. வாய்ச்சொல்-உண்மை உரை. தேறாய்-உண்மை என ஏற்றுக்கொள்ளாய். கண்டு-ஆராய்ந்து. நுமர்-உன்னோடு ஆடும் தோழியர். எண்ணி-ஆராய்ந்து. அறிவறிந்து-அறியவேண்டுவனவற்றை அறிந்து. அளவல்-காதலித்தல். மறுதரற்கு-மறுத்தற்கு. நாடி-ஆராய்ந்து. நட்டு-நட்புக் கொண்டு. ஒட்டியோர்-நட்புக் கொண்டோர்.

வல்ல ஆற்றல் உடையார் ஆணைக்கு, அனைவரும் அடங்கி நடப்பர் ; இன்று உலகை ஆள்பவர் வில்வீரரல்லர் ; சொல்வீரரே ; சொல்வன்மையுடையார், சொல்லும் பொருள், பொருந்தாப் பொருளேயாயினும், அவர் அதை எடுத்துக் கூறும் வகையால், உலகம், அவர் சொல்வதே உண்மையாம், உயர்ந்ததாம் எனக் கொண்டு அவர் காட்டும் வழியில் செல்லும் ; அவர் ஆட்டியபடியெல்லாம் ஆடும் ; சொல்லாற்றல் வாய்க்கப் பெறுத ஒருவர், உண்மைப் பொருளையே, உயர்ந்த பொருளையே சொல்லினும், அதை எடுத்துக் கூறவல்ல ஆற்றல் இல்லாக் குறையால், அவர் கூறுவனவற்றை உலகம் ஏற்றுக் கொள்வதில்லை. அவர் காட்டும் நல்வழி, நடப்பாரற்றுப் பாழாம் ; அதனுல் ஒவ்வொருவரும் சொல்லாற்றல் உடையராய் வாழ்தல் வேண்டும் ; அதிலும், கற்றும், கேட்டும், கண்டும் அறிந்த அறவழிகளைப் பிறர்க்கும் எடுத்துரைத்து வழிகாட்டிகளாய் விளங்க விரும்பும் பெரியோர்கள்பால், அச்சொல்லாற்றல் அமையவேண்டுவது நனிமிக இன்றியமையாதது. அறிவே உருவாய் வந்து, அறமே வழங்கும் உள்ளம் கொண்டு விளங்கும் தோழிபால், அத்தகைய சொல்லாற்றல் அளவின்றி அமைந்திருந்தது.

**தினையே ! காலம் கடந்து கதிர் முற்றுக !**

குறவர் குடியில் பிறந்த பெண்ணொருத்தி தங்கள் தினைப்புனத்தில் காவல் புரிந்துகொண்டிருந்தாள்; தினைக் கதிரைக், கிளி குருவி முதலாய பறவைகள் கவர்ந்து போகாவாறு காத்து வந்தாள். ஒருநாள் அத்தினைப் புனம் வழியாக வந்த ஓர் இளைஞன் அவளைக் கண்டு, அவள்பால் காதல் கொண்டான். அவன் அழகைக் கண்டும், ஆற்றலை அறிந்தும் அவளும் அவனைக் காதலித்தாள். அன்று

முதல் நாள்தோறும், அவன் அங்குவந்து, அவளைக் கண்டு அளவளாவிச் செல்லத் தொடங்கினான். ஆனால், இவ்வுறவை அப்பெண்ணின் பெற்றோர் அறியாராதலின், அவர் அறியாவாறு மறைந்து மறைந்து வாழவேண்டிய தாயிற்று. சிலநாட்களில் ஒருவரையொருவர் காண்பதும் இயலாது போகும்; அந்நிலை உண்டாகும்போது, அம் பெண் மிகவும் வருந்துவாள்; மேலும் தினைக்கதிர்கள் முற்றத் தொடங்கின; அவை முற்றிவிட்டால், பெற்றோர் அவளை வீட்டிற்குக் கொண்டுசென்றுவிடுவர்; அப் பொழுது அவனைக் காண்பது அறவே இயலாதுபோம்; அந்நிலை உண்டாயின் அவள் துயர் பெருகும்; அத்துயர் அவள் உடல் நலத்தைக் கெடுக்கும்; மகள் உடல் நலக் கேட்டினைக் காணும் தாய், அது தெய்வக் குறைவால் வந்தது எனக் கொண்டு, வெறியாடி வழிபடத் தொடங்கு வாள். அதனால் அவள் காதல் உறவு வெளிப்பட்டுவிடும்; ஊரார் அலர்தூற்றிப் பழிப்பர்; பெண்ணின் காதல் உறவை அறியாத பெற்றோர், அவளைத் தாம் விரும்பும் ஒருவனுக்கு மணம் செய்துதர முயல்வர்; அவள் காதல் பாழாம்; கற்பு கெடும்; அந்நிலை உண்டாயின் அவள் உயிர் வாழாள்; இந்நிலை உண்டாகாவாறு தடுத்தற்குரிய ஒரே வழி, அவன் அவளைப், பலர் அறிய மணந்து கொள்வது ஒன்றே; ஆனால் அவனோ அதை மனதாலும் எண்ணிப் பார்த்திலன்; அதனால், அவன் போக்கால் உண்டாம் கேட்டினை எடுத்துக் காட்டி, மணத்திற்காம் முயற்சி மேற்கொள்ளுமாறு கூறவேண்டும் என விரும்பி னாள் தோழி. ஆனால், அவள் பண்பாடறிந்தவள்; சொல்லும் வகை அறிந்தவள்; அதனால், தான் கூறக் கருதிய அவ்வளவையும், அவனுக்கு அவ்வாறே எடுத்துக் கூறுதல், "என் தோழியை மணந்துகொண்டு செல்க" எனத் தானே வலியச் சென்று உரைத்தல் பண்பா

டன்று ; அதை அவனே உணர்ந்து கோடல் வேண்டும் ; அதற்கு ஏற்றவாறு உரைத்தல் வேண்டும் எனக் கருதினாள்.

ஒருநாள், அவன் வழக்கம்போலத் தினைப்புனம் போந்து, தன் காதலியின் வருகைக்காக ஓரிடத்தே காத்திருந்தான். இதைப் பார்த்துவிட்டாள் தோழி. உடனே, அவனைப் பார்க்காதவள்போல், ஆனால் அவன் காதில் விழுமாறு, தினைப்புனத்தை நோக்கி, "தினைப் புனமே! உன் இனிய கதிர்களைக் கிளிகள் கொய்து போகாவாறு காத்து வருகிறோம் ; நாங்கள், மலைநாட்டா னாகிய எங்கள் காதலன்பால்கொண்ட காதல் மிகுதியிலும் உன்னைக் காக்கும் கடமையில் தவறவில்லை. அக்காவலை மறவாது மேற்கொண்டமைக்கு அவன் அன்பும் ஒரு காரணமாம் ; அவன் எங்கள்பால்கொண்ட அன்பின் மிகுதியால், எங்களை மறவாது, நாள்தோறும் இங்கு வந்து செல்வதால், நாங்களும் மகிழ்ந்து வாழ்கிறோம் ; மனம் மகிழ வாழும் வாழ்வுடைமையால் எங்கள் நலனில் குறை நேர்ந்திலது ; அதனால், தாயும் எங்களை ஐயுறாது இங்கேயே விட்டுவைத்துள்ளாள் ; அதனால், நாங்களும் உன்னைக் காத்துவருகிறோம் ; அந் நல்வாழ்வு, உனக்கும் எனக்கும், மேலும் நீடிக்க வேண்டுமாயின், இனி அதற்கு உன் துணையே வேண்டும் ; உன் கதிர்கள் முற்றிவிடுமாறு விரைந்து வளர்ந்து விடுவையாயின் எங்களுக்கு இங்கு வேலையில்லாதுபோம் ; தாய் எங்களை வீட்டிற்குக் கொண்டுபோய் விடுவாள் ; அங்குச் சென்றுவிடின், எம் காதலனைக் காண இயலாது ; அதனால் காதல் நோய் மிகும் ; நோய்மிகுதியால் உடல்நிலை தளரும் ; தளர்ச்சி காணும் தாய், வெறியாடத் தொடங்குவள் ; அதனால், எம் காதல் அலர் கூறிப் பழிக்கப்பெறும்; அந்நிலை கண்டு எம்மால் வாழ்தல் இயலாது. கிளிகள் அழித்துவிடாவாறு

உன்னைக் காத்த நாங்கள் அழிவதற்கும் நீயே காரணமாவாய்; அவ்வாறு எம்மை அழியவிடாது காப்பது உன்பால் உளது. நீ உன் கதிர்கள் விரைவில் முற்றிவிடுமாறு விரைந்து விளையாது, காலங் கழித்து மெல்ல மெல்ல விளைவையாயின், எம்மை அவ் அழிவினின்றும் காத்த பெருமை உனக்கு உண்டாம்; ஆகவே, புனமே! உன்னை அழியவிடாது காத்த நாங்கள் அழிவுறுவண்ணம், நீ இன்னும் சிலநாள் கழித்துக் கதிர்விட்டு விளைவாயாக!" என்று கூறி வேண்டிக்கொண்டாள்.

தோழி கூறியன இவ்வளவேயாயினும், அவள் கூறியன கேட்ட அவ்விளைஞன், தினைமுற்றிக் கொய்யும் பருவம் பெற்றுவிட்டது; இனி இவள் காவல் இங்கு இராது; இற்செறிக்கப் படுவள்; அதனால் அவள் துயர் மிகும் என்பதை அறிந்து, தன் களவொழுக்க விருப்பத்தால், காதலிக்கு நேரவிருக்கும் கொடிய துயர் நிலையை உணர்ந்து, தன் களவொழுக்கத்தைக் கைவிட்டு, அவள் பெற்றோர் அறிய மணந்து கொள்வதற்கு வேண்டிய முயற்சிகளை விரைந்து மேற்கொள்ளும் எண்ணம் உடையனாய் மீண்டான்.

இவ்வாறு களவொழுக்க இன்பத்தால், காதலியின் துயர்நிலையைக் கருதாாலும், தன் கடமையை மறந்தும் இருந்த அவனுக்குக் கடமையில் தவறுவதால் உண்டாம் கேட்டினைக் காட்டிக், கடமையை நினைவூட்டி, அவனையும் கற்பு நெறியில் நிற்கப் பண்ணி, அவன் காதலியையும் வாழ்வித்தது, தோழியின் சொல்லாற்றலன்றோ? வாழ்க அவள் சொல்லாற்றல்!

"நன்மலை நாடனை நயவா யாம், அவன்
அளிபேர் அன்பின் இன்குரல் ஓப்பி
நின் புறங்காத்தலும் காண்போய்! நீ என்
தளிர் ஏர் மேனித் தொல்கவின் அழியப்

பலிபெறு கடவுள் பேணக், கலிசிறந்து
தொடங்கு நிலைப் பறவை உடங்குகுரல் கவரும் ;
தோடு இடம் கோடாய் ; கிளர்ந்து
நீடினை விளைமோ வாழிய தினையே !'' 1

**ஒழிக உன் வாய்மை :**

களவு வாழ்க்கை நீட்டிப்பதால், தன் காதலி கொடிய துன்பத்திற்குள்ளாவாள் என்பதறிந்தமையால், இளைஞன், விரைவில் வரைந்துகொள்வதாக வாக்குறுதி அளித்தானாயினும், களவு வாழ்க்கை அளிக்கும் பேரின்பத்தில் ஆழ்ந்துபோன அவன் மனம், திருமண ஏற்பாட்டிற்கு இசைந்திலது ; அதனால் திருமண முயற்சியெதையும் மேற்கொள்ளாது, மீண்டும் மீண்டும், களவு வாழ்க்கையையே விரும்பினான்.

இளைஞன் செயல்கண்டு தோழி கலங்கினாள் ; நம் துயர்நிலையை அவன் அறியுமாறு செய்தும், அவன் மனம் திருந்தவில்லையே என எண்ணி வருந்தினாள் ; நம் துயர் நிலையை, அவன் நேர் நின்று உரைக்காது, இவ்வாறு, மறைபொருளாகக் கூறி அறிவிப்பதால் பயன் இல்லை. நம் குறையை நாமே உரைப்பது பண்பாடன்று எனக் கருதுவோமாயின், நம் கண்ணீர் தீர வழிகாண இயலாது; இனி, நம் துயர் நிலையை, அவன் அறியுமாறு அவன் முன்னின்று உரைத்தலே முறையாம் எனத் துணிந்தாள்;

---

1. நற்றிணை : 251. மதுரைப் பெருமருதன் இளநாகனார்.

நயவா-விரும்பி. அளி-அருள் ; அருளாலும், அன்பாலும். குரல்-கதிர். ஓப்பி-கிளிகளை ஓட்டிக் காத்து. நின்-உன்னை. புறங்காத்தல்-பாதுகாத்தல். தளிர்ஏர்-மாவின் இளந்தளிர்போன்ற. அழிய-அழிவதால். கலிசிறந்து-அலர் எடுத்து ; கலி சிறந்து பேண என மாற்றுக. தொடங்குநிலை-கூட்டமாகக் கூடிவரும். உடங்கு-ஒருசேர வந்து. தோடு-இதழ். கோடாய்-முற்றி வளையாது. கிளர்ந்து-நிமிர்ந்து நின்றவாறே. நீடினை-காலம் நீட்டித்து. விளைமோ-விளைவாயாக. மோ-அசை.

அவ்வாறு துணிந்த அவள் மனம், மேலும் ஒருபடி சென்றது ; நம் துயர்நிலையை உள்ளது உள்ளவாறே எடுத்துரைப்பினும், அவன் மனம் திருந்தாது; களவின்பத்தில், அது அவ்வளவு ஆழமாக ஆழ்ந்துகிடக்கிறது ; அதை, அக்களவின்பக் கடலினின்றும் கரை ஏற்றி, மண முயற்சி மேற்கொள்ளுமாறு செய்யவேண்டுமாயின், அதற்கு, நம் துயர்நிலையைச் சிறிது மிகுதிப்படுத்திக் கூறுதலும்வேண்டும் ; ஒரு பெரிய நன்மையை உண்டாக்குதற் பொருட்டு ஒரு பொய் கூறுவதால் பிழை இல்லை. "பொய்மையும் வாய்மை இடத்த புரைதீர்த்த நன்மை பயக்கும் எனின்" என்பர் பெரியோர்களும். இவ்வாறு எண்ணிப் பொய்கூறவும் துணிந்தது அத்தோழியின் தூயஉள்ளம்.

அந் நிலையில் அவனும் வந்தான் ; வந்தவன், "மண முயற்சியோடு வருதல் இன்றும் இயலாது போயிற்று ; நாளை உறுதியாக அம்முயற்சியோடு வருவேன்" என வாக்களித்தான் ; அவன் வாக்குறுதிகளைக் கேட்டுக் கேட்டு வெறுத்துப்போன அவள், "அன்ப ! உன் உறுதிமொழி இனி வேண்டாம் ; அது எக்கேடேனும் கெட்டொழிக ; நாங்கள் சாகத் துணிந்துவிட்டோம் ; எங்கள் மானம் மண்ணுகி மடிந்துவிட்டது ; இனியும் உன் உறுதிமொழியை நம்பி உயிர்வாழ்ந்திருக்கும் அந்நிலை கடந்துவிட்டது ; நேற்று நடந்த ஒரு நிகழ்ச்சியைக் கூறுகிறேன்; கேட்டு, இனியும் உயிர்கொண்டு வாழ்தல் எங்களால் இயலுமா என்பதை நீயே கூறுவாயாக ; அன்ப ! நேற்று இரவு வந்து இவளைக் கண்டு அளவளாவி மகிழ்ந்துசென்ற நீ, அப்போது இவளை ஆரத் தழுவிக்கொண்டாயன்றோ ? அப்படித் தழுவிக் கொண்டபோது, உன் மார்பிற் பூசிய சந்தனமும், நீ அணிந்துவந்த மாலையில் படிந்துகிடந்த தேனும் மகரந்தமும் இவள் தோளிலும் படிந்துவிட்டன ;

அம் மணம் அறிந்த வண்டுகள் கூட்டமாய் வந்து இவள் தோளை மொய்க்கத் தொடங்கிவிட்டன; அதைக் கண்டு விட்டாள் தாய்; தன் மகள்பால்கண்ட இப்புதுமையால், தன் மகள் யாரோ ஒருவனைக் காதலித்து, அவனோடு கலந்து வாழத் தொடங்கிவிட்டாள் என எண்ணினாள்; அதனால் கடுஞ்சினம் கொண்டாள்; உடனே, இவளைக் கண்சிவக்க நோக்கிவிட்டு, 'மகளே! உன் களவு வாழ்க்கை வெளிப்பட்டுவிட்டது; நீ உன் ஒழுக்க நிலையினின்றும் கெட்டுவிட்டாய்' என இடித்துக் கூற விரும்புவாள், அதை அவ்வாறே கூறாது, "ஏடி பெண்ணே! உன் தோள்கள் இவ்வாறு வண்டுகள் மொய்க்க மணம் நாறுவது முன்னும் உண்டோ?" எனக் கேட்டு வெகுண்டாள்.

"பிறந்த நாள்தொட்டு ஒருநாளும், தன்னைக் கடிந்து நோக்காத தாயின் கோபம் ஒருபால் வருத்த, தன் காதல் வாழ்வு வெளிப்பட்டுவிட்டதே என்ற நினைப்பால் நிகழ்ந்த நாண் கேடு ஒருபால் வருத்தச், சிறிது நேரம் செய விழந்து போனமையால், தாயின் கேள்விக்கு விடையளிக்க மாட்டாது வருந்தி நின்றவள், பின்னர், ஒருவாறு தேறி என்னை நோக்கினாள்; அவள் நிலைகண்டு முதலில் நானும் நடுங்கினேனாயினும், ஆபத்திற்குப் பாவம் இல்லை யாதலின், துணிந்து ஒரு பொய் கூறினேன்; நாங்கள் இருந்த இடத்திற்கு முன்னே எரிந்து கொண்டிருந்த அடுப்பினின்றும், ஒரு சந்தனவிறகை எடுத்துக் காட்டி, அம்மா! இவ்விறகு தரும் மணமே, இவ்வண்டுகளை இவண்கொண்டு வந்தது இவள் இயல்பில் எவ்வித மாற்றமும் இல்லை" எனக் கூறித் தாயின் ஐயத்தை ஒருவாறு போக்கினேன்.

"அன்ப! எப்பொழுதும் உன்னையே நினைந்திருக்கும் இயல்பால் எம்மை மறந்திருக்கிறோம் நாங்கள்; தன்

மகளின் நல்வாழ்வில் நாட்டம் உடையளாய், அம்மகள் மேனியில் உண்டாம் சிறுமாற்றங்களுக்கும் காரணம் காணத்துடித்துக்கொண்டிருக்கிருள் தாய். இந்நிலையில் எங்கள் களவு வாழ்க்கை அம்பலமாகாதிருத்தல் அரிதினும் அரிதாம்; இன்று இல்லையாயினும், நாளை அல்லது மறுநாள், அது வெளிப்பட்டுவிடுதல் உறுதி; அதன் பின்னர், நாங்கள் உயிர்தாங்கியிருப்போம் என்பது இயலாத செயலாம்; ஆகவே, உன்வாக்குறுதி, இனி எம்மை வாழவைக்காது; அது எக்கேடேனும் கெட்டொழிக!" எனக் கூறினுள். தலைவியின் துயர் போக்கத் துணிந்து பொய்கூறிய தோழியின் அன்பு பாராட்டற்குரிய தன்றே?

" ஓங்குமலைநாட! ஒழிக நின்வாய்மை!
காம்பு தலைமணந்த கல்லதர்ச் சிறுநெறி
உறுபகை பேணது இரவில் வந்து, இவள்
பொறிகிளர் ஆகம்புல்லத், தோள்சேர்பு
அறுகால் பறவை அளவில மொய்த்தலின்,
கண்கோளாக நோக்கிப், பண்டும்
இனையையோ? என வினவினள் யாயே;
அதன்எதிர் சொல்லாளாகி, அல்லாந்து
என்முகம் நோக்கியோளே; அன்னய்!
யாங்குஉணர்ந்து உய்குவள்கொல் என மடுத்த
சாந்த ஞெகிழி காட்டி,
ஈங்குஆயினவால் என்றிசின் யானே." 1

---

1. நற்றிணை: 55. பெருவழுதி.

காம்பு-மூங்கில். தலைமணந்த-நெருங்க வளர்ந்த. கல்அதர்-மலை இடை வழி. பகை-புலி முதலியவற்றின் பகை. பொறி-தேமல் புள்ளிகள். ஆகம்-மார்பு. புல்ல-தழுவ. சேர்பு-சேர்ந்து. அறுகால்பறவை-வண்டு. கண்கோளாக-கண்ணுல் கொல்பவள்போல். இனையையோ-இப்படியே இருந்தாயோ. அல்லாந்து-வருந்தி. மடுத்த-அடுப்பில் இட்ட. சாந்த ஞெகிழி-சந்தன விறகு. ஈங்கு-இதனுல். என்றிசின்-என்றேன். அன்னய் என்பதைக் காட்டி என்பதன் பின்னர்க் கூட்டுக.

**அவள் காட்டும் அன்பு :**

தன்பால் ஒப்படைக்கப்பட்டாரைக் காப்பது தன் கடனாகும் எனக் கடமையுணர்வு ஒன்றே உடையவர்பால் ஒப்படைக்கப்பெறுவார், உயர்ந்த ஒழுக்கத்தினராதல் இயலாது ; அவரைக் காக்க முன்வருவார் உள்ளத்தில் கடமையுணர்ச்சியோடு, அவர்பால் அன்பும் உண்டாதல் வேண்டும் ; அத்தகையார் அவரை அன்புகாட்டி வளர்ப்பர் ; அறநெறி பிறழாது காப்பர் ; அத்தகையார் வளர்க்க வளர்ந்தவரே ஒழுக்கத்தில் உயர்ந்தோராய் விளங்குவர். இந்த உண்மையை உணர்ந்திருந்ததனால், பழந்தமிழர், தம் மகளிரைக் காக்கும் பொறுப்பினை, அம்மகளிரின் உயிரொத்த துணைவியாய் வாழ்ந்து, அம்மகளிரை வளர்த்த வளர்ப்புத்தாயாம் செவிலியின் மகளாய் வந்தவள்பால் ஒப்படைத்தனர் ; இருவருக்கு மிடையே உள்ள அவ்வுறவு நெருக்கத்தால், தோழி, அப்பெண்ணைத் தன் உடன் பிறந்தவளாகவே கொண்டு, அவள்மீது அன்பைச் சொரிந்து காத்துநின்றாள்.

**என்பொருட்டாயினும் அவள்பால் அன்புகொள் :**

அத்தகைய அன்புமிக்க தோழிபால் ஒப்படைக்கப் பட்ட பெண்ணைக் காதலித்த இளைஞன், யாது காரணத் தாலோ, இடையே சிலநாள் வரத்தவறிவிட்டான் ; அதனால் பெண் பெருந்துயர் கொண்டாள். அவள் துயரைக்கண்டு வாழ்தல் தோழிக்கு இயலாதுபோயிற்று; “ அழகிலும், அறிவிலும் சிறந்த இவளை மணந்து, இமைப் பொழுதும் பிரியாது வாழக்கருதும் மனம் அவனுக்கு வாய்க்கவில்லையே ; இன்ப உருவாய் விளங்கும் இவள், அவன் காதலை ஏற்றுக்கொள்ள யான் எப்பாடுபட் டிருப்பேன் ? அவள்பால்பெறும் இன்பத்தை மறக்கினும், நான் செய்த அந்நன்றியை எவ்வாறு மறப்பன் ?

அவளையேயன்றி என்னையுமன்றோ வருத்துகிறான்" என எண்ணி வருந்தினாள்; பின்னர் வருந்திவாளாயிருப்பதால் பயனில்லையென உணர்ந்து, சென்று அவனைக் கண்டாள். "அன்ப! நனிமிகச் சிறந்தவன் நீ; நண்பனாக ஏற்றுக் கொள்ளத்தக்க நல்லவன் நீ என நம்பி, உன்னோடு தொடர்புகொண்டேன்; என்துணையால், நீ பெற்ற உன் காதலிக்கு, இப்போது நீயல்லது வேறு துணையில்லை. அவளுக்குப் பெற்றோரும் உற்றோரும் நீயே; அத்தகையாளை மறந்து வாழ்தல் அறமாகாது. அஃது அறமாகாது என்பது ஒருபுறம் இருக்க, அது நாகரிகமிக்க நல்லோர், தம்நண்பரிடம் நடந்துகொள்ளும் முறையுமாகாது; நாகரிக நெறி அறிந்தோர், நண்பர்சிலர் நஞ்சை தரினும், அது நஞ்சு என்பதை அறிந்தும் அவர் அளித்ததை அன்போடு வாங்கி உண்பர்; உண்டபின்னர், நஞ்சுதந்த நயமற்றவராயிற்றே என அவரை வெறுக்காது, பண்டு தாம்காட்டிய அவ்வன்பில் ஒருசிறிதும் குறையாதே, அவரோடு கலந்து பழகுவர். அப்பண்பாட்டு நெறிநிற்கும் பெரியோர்களையே, உலகம், நாகரிகர் எனும் பெயரிட்டுப் பாராட்டும். நண்பர்களின் இயல்பு அதுவாதல் வேண்டும்; சிறந்த நண்பர்கட்கு அதுவே அழகு. அந்தப் பண்பு உன்பால் இல்லை; உன்னோடு நட்புடையேனாகிய நான், உனக்கு நஞ்சு அளிக்கவில்லை; அதற்குமாறாய அமிழ்தமே அளித்துள்ளேன்; அழகின் திருவுருவாம் என் தோழியின் தோளில் கிடந்து உறங்குவதால்பெறும் பேரின்பத்திற்கு, இவ்வுலகில் வேறு எவ்வின்பமும் இணையாகாது; அத்தகைய பேரின்பப் பொருளை நீ பெறத் துணைபுரிந்த என்பால் அன்புகாட்டவேண்டும் என்பதை மறந்து விட்டனையே; நண்பரொடு பழகும் நாகரிகம் அறிந்தவன் நீ என எண்ணுகிறேன்; ஆகவே அன்ப! அவள் தோளில் கிடந்து உறங்குவதில் இன்பம் கண்டிலை

என்றாலும், தீமையே புரிந்த நண்பனுக்கும் நல்லது செய்தல் வேண்டும் எனும் நாகரிக உணர்வுகொண்டு, நான் தந்த அவள், இப்போது வேம்புபோல் கசப்பவளாயினும், உன்பால் நட்புடையேனாகிய நான் வருந்தாது வாழ்தல் வேண்டும் என்பதை எண்ணியாவது, அவளை ஏற்றுக்கொள்வாயாக ; அவள் வாழ்வு என்வாழ்வு ; அவள்வருத்தம் என்வருத்தம் ; ஆகவே அவளை ஏற்று, அவள் வாட்டத்தைப் போக்குவதன்மூலம், என்வாட்டத்தைப் போக்குவாயாக ” என வேண்டிக்கொண்டாள்.

“ நாட ! முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின்,
நஞ்சும் உண்பர் நனி நாகரிகர் ;
அஞ்சில்ஓதி என் தோழி தோள்துயில்
நெஞ்சின் இன்புறாய் ஆயினும், அதுநீ
என்கண் ஓடி அளிமதி ;
நின்கணல்லது பிறிது யாதும் இலளே.”

## கிழவி ஆயினும் கைவிடாதே :

காதலனும் காதலியும் களவுவாழ்க்கை மேற்கொண்டு வாழ்கின்றனர் ; அவர் காதலைக், காதலியின் பெற்றோர் ஏற்றுக் கொள்ளவில்லை. அவளை அவனுக்கு மணம் செய்துதர மறுத்துவிட்டனர் ; இதை அறிந்த அப்பெண், தன் கற்பு வாழவேண்டுமாயின், பெற்றோரையும் பிறந்த ஊரையும் மறந்து, காதலன்பின் சென்றுவிட வேண்டும் எனத் துணிந்தாள் ; தோழியும அதற்குத் துணை புரிந்தாள்.

---

1. நற்றிணை : 355.

முந்தை-முன்னே. நனி-மிக்க. அம்சில்ஓதி-அழகிய சிலவாகிய கூந்தல். தோள்துயில்-தோளின்கண் கிடந்து கொள்ளும் உறக்கம். என்கண் ஓடி-என்பால் அருள்கொண்டு. கண்-அருள். அளிமதி-அன்பு காட்டிக் காப்பாற்றுவாயாக. மதி-அசை. நின்கண் அல்லது-உன்னையல்லது.

ஒரு நாள் விடியற்காலை, ஊரில் உறக்கம் ஒழிந்து ஒருவரும் எழாத நேரத்தில் அப்பெண்ணை அழைத்து வந்தாள் தோழி ; ஊர்க்கோடியில், அவள் வரவை எதிர் நோக்கிக் காத்துக் கிடந்த காதலன்பால் ஒப்படைத்தாள்; காதலனும் காதலியும் ஊர் எல்லையைக் கடந்துவிட்டனர் ; அக்காட்சியைப் பின்னின்று கண்டாள் தோழி ; அவள் கண்கள் கடலாயின ; " அப்பெண், இன்று இளமைச் செவ்வி குறையாது பேரழகுடையளாய் விளங்குகிருள் ; அவளை அழைத்துச் செல்லும் அவன், அவள்பால் காண லாம் இப்புற அழகைக் கண்டு காதலித்தவனுயின், நாளை அவள் இளமைகழிந்து, அழகு இழந்துபோகும் அப்போது அவளைக் கைவிட்டுவிடுவனே ? அவ்வாறு கைவிட்டு விடுவனுயின், 'பிரியேன் ; பிரியேன் உயிர்வாழேன்' என இன்று உரைத்த அவன் வாய்மை ஒன்றையே உறு துணையாய் நம்பி, உற்றுரையும், பெற்றுரையும் மறந்து போகும் அவள் நிலை என்னும் ?" என எண்ணினுள் ; அவள் கலக்கம் கரைகடந்து பெருகிற்று ; உடனே விரைந்து ஓடினுள் ; தன் தோழியின் இரு கைகளையும் பிடித்து, இளைஞன் கைகளோடு இறுகப் பிணைத்துவிட்டு அவனை நோக்கி, " அன்ப ! இவள், இன்று பெற்றிருக்கும் இளமை கழிந்து போய், முதுமை உற்றபோதும், இன்று தளராது நிமிர்ந்து நிற்கும் இவள் கொங்கைகள் தளர்ந்து தாழினும், பொன்னின்மேல்பதித்த நீலமணிபோல், பொன்னிற மேனியில் தாழ்ந்துகிடக்கும் இவள் கருநிறக் கூந்தல் நரைத்து வெண்ணிறம் பெறினும், நீ இவளைக் கைவிடுதல் கூடாது ; இதுவே என் வேண்டுகோள் " எனக் கண்கள் நீர்வழியக் கைகூப்பி வேண்டி விடை கொடுத்தாள் ; என்னே அவள் அன்பு !

" அண்ணுந்து ஏந்திய வனமுலை தளரினும்,
பொன்னேர் மேனி மணியின் தாழ்ந்த

நல்நெடும் கூந்தல் நரையொடு முடிப்பினும்,
நீத்தல் ஓம்புமதி ; பூக்கேழ் ஊர !
நின், பிழையா நன்மொழி தேறிய இவட்கே.'' 1

**அவள் கடமை உணர்ச்சி :**

கடமையின் சிறப்புணர்ந்தவள் தோழி. தான் உண்டு, தன்மனை உண்டு எனக்கருதும் குறுகிய மனம் கொள்ளாது, தன்னைச் சுற்றி வாழும் தன் உறவினர், தான்வாழும் தன் ஊர்மக்கள் எல்லோரும் வாழவேண்டும் எனக் கருதும் பரந்த மனம்கொண்டு, அதற்கேற்பப் பெரும்பொருள் ஈட்டியும், நாட்டிற்கும் நண்பர்க்கும் துணை புரிந்தும், புகழ்பெற்று வாழ்தல் ஆண் மகன் கடன் ; அவன் அப்புகழாசைகொண்டு வெளிநாடுசென்று வாழுங் காலத்தில், அப்பிரிவுத்துயர் தாங்கி மனைக்கண் இருத் தலும், அவன் தரும் பொருள் துணைகொண்டு விருந் தோம்பி வாழ்வதும் மனைவியின் கடனும் என்பதை அறிந்து, அவர் அக்கடமைகளில் வழுவாது வாழத் துணை புரிந்து வாழ்ந்திருந்தாள் தோழி.

**வினை மேற்செல்க ! விரைந்து மீள்க !**

அவர்கள் புது மணமக்கள் ; அவன் ஆண்மை நெறி அறிந்தவன் ; மனைவியின் மாண்புணர்ந்தவன் ; " மனைவி, தன்பால் பேரன்பு கொண்டவள் : தன்னைப் பிரிந்து வாழ்தல் அவளால் இயலாது ; ஆகவே அவளைப் பிரியாமை வேண்டும் " என்று எண்ணும் அவன் காதல் உள்ளம். " பிறர்க்குப் பயன்பட வாழும் வாழ்வே பெரு வாழ்வு ; அது பொருள் தேடிப் போகவும், போர் நாடிப் போகவும் அஞ்சா ஆண்மை உடையார்க்கே இயலும் ;

1. நற்றிணை : 10.

அண்ணாந்து-நிமிர்ந்து. ஏந்திய-உயர்ந்த. பொன்னேர்-பொன்னை ஒத்த. மணியின்-நீலமணிபோல். நீத்தல் ஓம்புமதி-கைவிடாமையைக் கடைப்பிடிப்பாயாக. பூக்கேழ்-மலர்கள் மிக்க. தேறிய-உறுதியென நம்பிய.

என்றும் மனையாளையே விரும்பும் மனம் உடையனாய் மனைக்கண் மடிந்திருப்பானுக்கு, அவ்வாழ்வு வாய்க்காது ; ஆகவே பொருளையும், புகழையும் தேடி வெளிநாடு செல்ல வேண்டும்" என விரும்பும் அவன் கடமை உணர்வு. ஆனால், தன் முடிவைத் தன் காதலிக்கு உரைக்கவோ, உரைத்து, உடனே பிரிந்துபோகவோ அவனால் முடிய வில்லை. அதனால் தன் கருத்தை மெல்லத் தோழிபால் தெரிவித்துப் போக விரைந்தான். தோழி அவன் காதலியின் உள்ளம் உணர்ந்தவள் ; அவன் போய்விடின், அப்பிரிவுத்துயர் பொருது, அவள் உயிர், அவளை விட்டுப் பிரியின் என்செய்வது என அஞ்சினாள் ஒருபக்கம் ; இவள் துயர் கருதி, அவனைப் போகாவாறு தடுத்துவிடலாம் என்றால், வினைமேற் செல்லாது, வீட்டினுள் அடங்கி வாழ்வதால் அவனையும், அவனைத் தடுத்து நிறுத்து வதால் தன்னையும் ஊரார் பழிப்பரே ; அவர் பழிச்சொல் கேட்டு உயிர் வாழ்வதினும், அவனைப் போகவிடுத்து உயிரிழந்து போதலே நன்று ; அத்துணைக் கொடிது பழிச்சொல் ; ஊரார் உரைக்கும் அப்பழிச் சொல், உள்ளத்தைத் துளைக்கும் ; வெந்த புண்ணில் வேல் பாய்ச்சியது போல் உறுதுயர் தரும் எனப் பழிச் சொல்லுக்கு அஞ்சினாள் மற்றொருபக்கம். இறுதியில், அவன் பிரிவால் உண்டாம் உயிர்க்கேட்டினும், அவனைப் போகவிடாமையால் வரும் புகழ்க் கேடு பெரிதாம் என உணர்ந்து, போகவிரும்பும் அவனுக்கு விடைதரத் துணிந்தாள். துணிந்து, விடைவேண்டி நின்றானிடம், தன் மனப்போராட்டத்தை எடுத்துக்காட்டி "ஆகவே அன்ப ! செல்க, ஆனால் சென்ற இடத்தில் நெடுநாள் நிற்க நினையாதே ; மேற்கொண்டு சென்ற வினையை விரைவில் முடித்து இவண் விரைந்து வந்தடைக !" எனக் கூறி விடையளித்தாள்.

" சேறும் சேறும் என்றலின், பலபுலந்து
சென்மின் என்றல் யான் அஞ்சுவலே ;
செல்லாதீம் எனச் செப்பின் பல்லோர்
நிறுத்து எறி புன்சொலின் திறத்து அஞ்சுவலே ;
அதனால், சென்மின் ; சென்று வினை முடிமின் ;
சென்று ஆங்கு
அவண் நீடாதல் ஓம்புமின்." 1

**மதியிழந்த மனை கண்டு மருளாதே :**

கணவன் பொருள் தேடிப் போய்விட்டான் ; போகும் பொழுது கார்காலத் தொடக்கத்தில் வந்துவிடுவேன் என்று வாக்களித்துச் சென்றான் ; மனைவி, அவன் வாக்குறுதியை நம்பி, வருத்தம் ஒழிந்து வாழ்ந்திருந்தாள். சில நாட்கள் சென்றன ; கார்காலம் பிறந்துவிட்டது ; கார்காலத்தில் மலரும் இயல்புடையன பிடவும், கொன்றையும், காந்தளும் மலந்துவிட்டன. அவைமலர்ந்து விட்டமை கண்ட காதலி, " கார்காலம் வந்துவிட்டது ; அவர்வந்திலர் " என வருந்தினாள் ; இந்நிலையில் அவளைத் தேற்ற வழியறியாத தோழி, அப்பெண்ணை நோக்கி, " பெண்ணே ! நம காதலர் சொல் பொய்யாகாது என்பதை நீ அறிவாய் ; ஆகவே, அவர் கூறிச் சென்ற வாறே கார்காலத் தொடக்கத்தில் வருதல் உறுதி ; ஆனால், கார்காலம் இதோ வந்துவிட்டதே ; அவர் வந்திலரே என வருந்துகின்றனை ; உண்மையில் இது கார்காலமன்று ; அவ்வாறாயின் கார்காலத்தே மலரும்

---

1. நற்றிணை : 229.

சேறும்-செல்வோம். புலந்து-வருந்தி. சென்மின்-செல்லுங்கள். அஞ்சுவல்-அஞ்சுவேன். செல்லாதிம்-செல்லாதீர்கள். செப்பின்-சொன்னால். பல்லோர்-உலகோர். நிறுத்து-மார்பில், எறி-வீசுகின்ற. புன்சொல்-பழிச்சொல். திறத்து-அதற்காக. நீடு ஆதல்-காலம் நீட்டிப்பதை. ஓம்புமின்-கைவிடுங்கள்.

இயல்புடைய மலர்கள் மலர்ந்துவிட்டனவே என்று கேட்டல் கூடும் ; இம்மலர்கள், காலமல்லாக் காலத்தில் மலர்ந்துள்ளன ; மழைபெய்வது கார்காலத்தில் என்ற கருத்துடைய அம்மலர்கள், மழை பெய்தது கண்டு மலர்ந்துவிட்டன ; ஆனல். இது கார்காலத்து மழையோ என்றால் இல்லை. அறிவில்லாமையால் இது எந்தக்காலம் என்பதை மறந்துவிட்ட மேகம், இக்காலத்தைக் கார்காலம் எனத் தவருகக் கருதிவிட்டது ; அதனல் கடல் நீரைக் குடித்துவிட்டது ; பின்னர் இது கார்காலம் அன்று என்பதை உணர்ந்துகொண்டதாயினும், உண்ட நீரை உரியகாலம்வரைத் தாங்கி நிற்க மாட்டாமையால் பெய்து விட்டது ; அதனல் உண்டாய மாறுதல் இது ; உண்மையில் இது கார்காலமன்று ; ஆகவே காதலர் வாராமை கண்டு கலங்காதே'' என்று கூறித் தேற்றினள்.

"தாம் வரத் தெளித்த பருவம் காண்வர
இதுவோ என்றிசின் மடந்தை ! மதியின்று,
மறந்து கடல் முகந்த கமம்சூல் மாமழை
பொறுத்தல் செல்லாது இறுத்த வண்பெயல்
கார் என்று அயர்ந்த உள்ளமொடு தேர்வில
பிடவும், கொன்றையும், கோடலும்
மடவ ஆகலின் மலர்ந்தன பலவே.'' 1

**அவன் சென்றது ஆக்கந்தேட அல்லவோ ?**

காதலன் குறித்துச் சென்ற காலமும் கடந்து விட்டது ; ஆனல் அவன் வந்திலன் ; காதலியின் துயர்

1. நற்றிணை : 99. இளந்திரையனர்.

தெளித்த-வாக்குறுதி அளித்த. காண்வர-அழகு பொருந்த. என்றிசின்-என்று கேட்கின்றனை. மதிஇன்று-அறிவில்லாமல். கடல்முகந்த-கடல் நீரைக் குடித்த. கமம்சூல் மாமழை-நிறைந்த நீர் குடித்துக் கருத்த கார் மேகம். பொறுத்தல் செல்லாது-தாங்கமாட்டாமல். இறுத்த-பெய்த. வண் பெயல்-பெருமழை. கார்-கார்காலம். அயர்ந்த-மறந்து மயங்கிய. தேர்வில-ஆராயாது. கோடல்-காந்தள். மடவ-அறிவற்றன.

மிகுந்தது ; துயர் மிகுதியால் உயிர் விடவும் துணிந்து விட்டாள்; விம்மி விம்மி அழுதாள் ; வருத்த மிகுதியால் அவள் உடல் தளர்ந்தது; வளைமுதலாம் அணிகள் தாமே கழன்றோடின. அவள் துயர் நிலை கண்டாள் தோழி; அவளுக்கு எதைக் கூறி ஆறுதல் கூறலாம் என எண்ணிப் பார்த்தாள் ; அவள் சிந்தனையில் ஒரு தெளிவு பிறந்தது; காதலன் பொருள் தேடிப் போயுள்ளான் ; பொருள் தேடி வந்தாலன்றி இல்லறம் இனிது நடவாது; உற்றார் உறவினர்களையும், உயிர் போலும் நண்பர்களையும், நல் வாழ்வில் இருத்தவும், நாமும் பிறர் போற்றவும் பெருவாழ்வு வாழவும் வேண்டியே இல்லறம் மேற்கொள் கிறோம்; அவ்வாழ்விற்குப் பொருள் மிகமிகத் தேவை ; இவ்வுண்மையை மறந்தமையினாலேயே, காதலி கலங்கு கிறாள்; கடமை மறந்த அவள் உள்ளத்தில் காதல் ஆட்சி புரிகிறது ; அக் கடமையை நினைவூட்டின் கலங்குவது ஒழிவள் என்று கருதினாள்; உடனே அவள்பால் சென்று, “ பெண்ணே ! நண்பர்கள் நல்வாழ்வு வாழவும், நீ அணி பல அணிந்து சிறக்கவும் துணைபுரியும் பொருளைத் தேடிப் பெறுவதற்கன்றோ, கணவர் பிரிந்து போயுள்ளார் ? இல்லறம் நல்லறமாதல் வேண்டும் என விரும்பி, அவ்விருப்பத்தின் மிகுதியால், நாடு கடந்து சென்று வாழும் அவர், தம் கடமையில் கருத்துடைய நல்லியல்பு கண்டு, அவர் வரும் வரை ஆற்றியிருத்தலன்றோ நின் கற்பிற்கு அழகு ? அதை மறந்து, நல்லறம் கருதி நாடு கடந்து போயிருக்கும் அவர் வந்திலரே என வருந்துவது உன் கற்புநிலைக்கு அழகாகாது ” எனக் கூறித் தேற்றினாள் ;

“ சென்றோர் மன்ற; செலீஇயர் என் உயிர்; எனப்
புனை இழை நெகிழ விம்மி, நொந்து நொந்து
இனைதல் ஆன்றிசின்; ஆயிழை ! நினையின்

நட்டோர் ஆக்கம் வேண்டியும், ஒட்டிய
நின்தோள் அணிபெற வரற்கும்
அன்றோ, தோழி! அவர் சென்ற திறமே?'' 1

**அவள் அருள் உள்ளம் :**

உலக வளத்திற்கும் வறுமைக்கும் காரணம் பல இருப்பினும், வானம் வழங்குவதும், அது பொய்த்துப் போவதுமே தலையாய காரணங்களாம். மழை பெய்தால் உலகம் வாழும்; அது பெய்யாது பொய்த்தால் உலகம் வாடும். அதனால் மழையைக் காணாது கலங்கும் உலகம் அதன் வருகையை எதிர்நோக்கி ஏங்கித் துயருறும்; அதுவரக் கண்டு கழிபேரின்பம் கொள்ளும்; உலகெலாம் வாழ வேண்டும் என விரும்பும் உயர்ந்த உள்ளம் உடையவள் தோழி. உலகம் வறுமையுற்று வாடின் அவள் உள்ளமும் வாடும்; அவ்வுலகம் வளம் பெற்று மகிழின் அவள் உள்ளமும் மகிழும். தோழியின் இவ்வுயர் உள்ளம், அவள் எடுத்தாண்ட அழகிய உவமை ஒன்றால் புலனும்.

பொருள் தேடிப் போயிருந்தான் காதலன்; அவன் பிரிவால் வாடினாள் காதலி; அவள் நிலை கண்டு வருந்தினாள் தோழி; அதனால் அவன் வருகைக்காகக் கண்ணீர் சொரியக் கலங்கிக் காத்துக் கிடந்தாள். ஒரு நாள், காதலன் வினை முடித்து வந்து சேர்ந்தான், அவன் வருகை கண்டு மகிழ்ந்தாள் தோழி, மகிழ்ந்த உள்ளம் உந்த, ஓடிச் சென்று காதலிக்கும் உணர்த்தினாள்.

---

1. நற்றிணை : 286. துறைக்குறும்மாவின் பாலங்கொற்றனார்.

மன்ற-உறுதியாக. செலீஇயர்-செல்லக்கடவதாக. புனைஇழை-அணிந்த அணிகள். நெகிழ-கழல. நொந்து நொந்து-மிக வருந்தி. இனைதல்-வருந்துவதை. ஆன்றிசின்-பொறுப்பாயாக. ஆய்இழை-ஆராய்ந்த அணிகளை உடையாய். நினையின்-எண்ணிப் பார்த்தல். ஒட்டிய-மணந்த. திறம்-தன்மை.

உணர்த்தியவள், "பெண்ணே! பல்லாண்டுகாலமாக மழையைக் காணுமையால் உலகம் வறண்டு விட்டது. நீர் நிலைகள் எல்லாம் வற்றின; உலகத்தில் ஈரம் அறவே அற்று விட்டது; அதனுல் கதிரைக் கருவிலே கொண்ட நெற்பயிர்கள் வாடி உலர்ந்தன; நிலத்தின் நிலை கண்டு வருந்திஞன் உழவன்; அந்நிலையில் ஒருநாள் இரவில், பெரு மழை பெய்து ஓய்ந்தது; நெற்பயிர் நன்கு கதிர் ஈன்று நிறையப் பயன் தந்தது; அது காணும் அவ்வுழவன் உள்ளம் மகிழ்ச்சியால் துள்ளிற்று. தோழி! மழை கண்டு மகிழ்ந்த உழவன் உள்ளம் போல், காதலன் வரவு கண்ட என் உள்ளமும் மகிழ்ச்சியால் துள்ளுகிறது. மழைநீர் பெற்ற நெற்பயிர் போல், நீயும் அவன் அளிபெற்று அகம் மகிழ்வாயாக!" எனக் கூறும் அவள் உரையில், அவள் அருள்நிறை உள்ளம் கண்டு, உலகம் அவளைப் பாராட்டுமாக.

"நாடன், வந்தனன்; வாழி தோழி! உலகம்
கயங்கள் அற்ற பைதறு காலைப்
பீளோடு திரங்கிய நெல்லிற்கு
நள்ளென் யாமத்து மழை பொழிந்தாங்கே" 1

1. நற்றிணை: 22.

கயம்-நீர்நிலை. பைதுஅறு-ஈரம் அற்ற. பீள்-கதிரைக் கருவில் கொண்டிருக்கும் நிலை. திரங்கிய-வாடிய. நள்ளென் யாமம்-இரவின் இடையாமம்.

# 9. அன்பின் திருவுருவாம் தாய்

**தா**ய், அன்பின் உருவாய் அமைந்தவள். "தாய் ஒக்கும் அன்பில்" என அன்புடையார்க்கு எடுத்துக் காட்டாகத் தாயையே எடுத்துக் கூறினர் கம்பர். "பால் நினைந்து ஊட்டும் தாய்" எனத் தாயின் பேரன்பைப் பாராட்டினர் மணிவாசகப் பெருந்தகையார். பெற்றோரும் மக்களும், காதலனும் காதலியும், முதலாளியும், தொழிலாளியும், ஆசிரியனும் மாணக்கனும், நண்பரும் நண்பரும் என்ற இவர்கள், ஒருவர் ஒருவர்பால் காட்டும் பற்றனைத்தும், பொதுவாக அன்பென்றே அழைக்கப் பெறும் என்ருலும், தாய், தன் மக்களிடத்தில் காட்டும் பற்று ஒன்றிற்கே, அன்பு எனும் அப்பெயர், உரியதாம்.

தாய்,பொதுவாகத் தன் மக்கள் இருபாலாரிடத்திலும் ஒத்த அன்பே காட்டுவள் எனினும், அவள் அன்பு, ஆண் மக்களினும், பெண் மக்களிடத்திலேயே அதிகமாம். ஆண் மகனை ஈன்று புறந்தருதலோடு அவள் கடமை முடிந்து விடுகிறது. அவனைச் சான்ருேணக்கும் பணியைத் தந்தை மேற்கொண்டு விடுவன். அதனல், அவன் நல்வாழ்வு

குறித்துத் தாய் கவலை கொள்வதில்லை. ஆனால், மகளை, மனையற நெறியறிந்த மாண்புடையளாய், காதல் நெறி சென்று கற்புநெறிபுகும் அறிவுடையளாய், பிறந்த குடியின் பெருமை காக்கும் ஒழுக்க நெறி உணர்ந்த உயர்வுடையளாய் வளர்க்கும் பொறுப்பினை, உலகம் தாயிடத்தில் ஒப்படைத்துள்ளது. மகளை அழகும் அறிவும் உடையளாய் வளர்த்து அகமகிழ்வாள். அவள் மணங்கொண்டு கணவன் மனைபுகும் வரை, அவள் கற்பு நெறிக்கு இழுக்கு நேராவாறு விழிப்பாயிருந்து காப்பள். மகள் காதலுணர்வு கொண்டனள் என்பதை அறிந்த தாய், காதலன் எத்தகையனோ? அவன் நல்லனாதல் வேண்டுமே எனப் பெரிதும் கவலை கொள்வள்; மகள் தகுதியுடையானையே காதலித்தாளாயினும், அதைப் பெற்றோர் அறிந்து, அவளை அவனுக்கு மணம் தரும் வரை காத்திராது, காதலனுடன் போய்விடுவளாயின் பெரிதும், வருந்துவள். மணந்து கணவன் மனைபுகுந்த மகள், ஆண்டுச் செய்யும் மனையற மாட்சி கண்டு மகிழ்வள். அதன் பின்னரே, அவள் மனம் அமைதி கொள்ளும். அத்துணைப் பேரன்புடையவள் பெற்ற தாய்.

### பெருமூச்செறிந்தாள் :

மகள் உள்ளத்தில் காதல் விதை விழுந்து விட்டது. ஓர் ஆண்மகனைக் கண்டு காதல் கொண்டாள். இருவரும் தனிமையில் கண்டு அளவளாவத் தொடங்கினர்; அக்காதல் உறவால், அவள் நிலையில் மாறுதல் கண்டது. அவள் கூந்தல் புது மணம் வீசிற்று; தாயின் காவல் கடுமையால், காதலனை விரும்பும்போதெல்லாம் காண முடியவில்லையே என்ற கவலையால், நெற்றியில் சிறிதே பசலை படர்ந்தது. மகள் மேனியில் நிகழ்ந்த இம்மாற்றங்களைத் தாய் கண்டாள், மகள் காதல் வலையுள் வீழ்ந்து

விட்டாள் என்பதை, அவை காட்டின. அதனால் நோபம் கொண்டாள். கண்ணினும் அருமையாக வளர்த்த தன் மகளைப் பற்றிய இக்காதல் வெறி, அவளை எந்நிலைக்குக் கொண்டு செல்லுமோ எனும் கவலை தோன்றப், பெருமூச்செறிந்தாள். மகள் மேனியில் மாறுதல் நிகழக் கண்டமையால், அவள் காதல் கொண்டாள் என அறிந்தாளேனும், அவள் காதல் உறவைக் கண்ணெதிர் காணவில்லை. அதனால், அவளைக் குற்றம் கூறிக் கண்டிக்க முடியவில்லை. ஆனால், மகளின் மாறுதலைக் கண்ட பின்னர், கண்டிக்காதிருக்கவும் முடியவில்லை. அதனால், யாரோ தவறு செய்தார்போலவும், அவர்களைக் கண்டிப்பாள்போலவும், மகள் எதிரில், அவள் உள்ளத்தில் படுமாறு பேசத் தொடங்கினாள். தாயின் சுடுசொல் கேட்டு மகளும் அம்மகளுக்குத் துணைபுரியும் தோழியும் அஞ்சலாயினர்; மகளின் காதல் ஒழுக்கத்தை அறிந்தும் அவளைக் கண்ணெதிர் நிறுத்திக் கண்டிக்க மாட்டாது கலங்கும் தாயின் பெருமூச்சொன்றே, அத்தாய் அன்பைப் புலப்படுத்தப் போதியதாதல் அறிக.

"நெறிபடு கூழைக் கார் முதிர்பு இருந்த
வெறி கமழ் கொண்ட நாற்றமும், சிறிய
பசலை பாய்தரு நுதலும் நோக்கி
வறிது உகு நெஞ்சினள், பிறிதுஒன்று சுட்டி
வெய்ய உயிர்த்தனள் யாயே;
ஐய! அஞ்சினம்; அளியம் யாமே; 1

1. நற்றிணை: 368. கபிலர்.

நெறிபடு கூழை-அடர்ந்த கூந்தல். கார் முதிர்பு-கருநிறம் பெற்று. வெறிகமழ்-நறுமணம் வீசும். வறிது-பயனின்றி. உகு-கலங்கும். நெஞ்சினள்--உள்ளம் உடையவள். வெய்ய உயிர்த்தனள்-பெருமூச்செறிந்தாள். யாய்-தாய். அளியம்-இரங்கத் தக்கேம்.

**நோய் நீங்க நீராடச் செல்க என்றாள் :**

மகள் போக்கில் மாறுதல் பெருகிற்று; உடல் தளர்ந்தது; நெற்றி ஒளிகுன்றிப் பசலை படர்ந்தது. அது கண்ட தாய், இனியும் வறிதே பெருமூச்செறிந்து வாய் மூடிக் கிடப்பின் கேடாம் எனக் கருதினாள். மகள் நோய், காதல் நோயே எனக் கண்டாள்; தினைப்புனம் காத்திருந்தபோது, காதலனோடு புனலாடி மகிழ்ந்த வாறு, தினைப் புனக் காவல் ஒழிந்து போக, இப்போது ஈங்கு வந்து அடைபட்டுக் கிடப்பதால், ஆடியும் பாடியும் மகிழ முடியாமையால் வந்த வாட்டமே இவள் நோய்க்குக் காரணமாம் என அறிந்தாள்; அதுவே காரணம் என்பதைத் தான் அறிந்து கொண்டதைத் தன் மகளுக்கு அறிவித்து அடக்க வேண்டும் எனக் கருதினாள்; உடனே மகளின் தோழியை அழைத்தாள் "மகளே! நேற்றிரவு நம் மலைச் சாரலில் பெருமழை பெய்தது; அதனால் காட்டாற்றில் புது வெள்ளம் பெருக்கெடுத் தோடுகிறது; காய்ந்து உதிர்ந்த இலைச் சருகுகளையும், மலர்ந்து மணம் நாறும் மலர்க் கொத்துக்களையும் அடித் தோடி வரும் அப்புதுப் புனல் இவள் நோய் நீக்கும் நல்ல மருந்தாம் என எண்ணு கிறேன். அந்நீரை உண்டால், ஓடும் அதன் அழகைக் கண்டால், அதில் புகுந்து ஆசைதீர ஆடினால் இவள் நோய் அகலும்; ஆகவே இவளை அழைத்துச் சென்று ஆடி வருக" எனக் கூறினாள்.

மகளுக்கு நோய் என்றால், அதுதீர மருந்தளிக்கும் மருத்துவன்பால் அனுப்பாது, புதுப்புனல்ஆட ஆனுப் புதல், உண்மையில், அவளை ஆடஅனுப்பும் கருத்தா லன்று; காதலனோடு அவள் புனலாடி மகிழ்ந்ததையும் அம்மகிழ்ச்சி இப்போது இல்லாது போயிற்றே என்ற ஏக்கமே அவள் நோய்க்குக் காரணமாம் என்பதைத்

தான் அறிந்துகொண்டதையும் அவளுக்கு அறிவித்து அடக்கவே ஆகும்; அவள் எதிர்பார்த்தவாறே மகளும் அஞ்சினாள்; தாய், "செல்" எனச் சொல்லியவுடனே அவள் செல்லவில்லை. "தாயின் கருத்து யாதோ அன்பால் அனுப்புகின்றனளோ? அல்லது, நாம் மறைக்கவும் மறைந்துபோகாது, வெளிப்பட்ட நம்காதல் ஒழுக்கத்தை அறிந்துகொண்டு சினந்து கூறுகின்றனளோ? அவள் உரைத்தன கேட்டு, என் உள்ளம் நடுங்குகிறது" எனக்கூறி ஆடச் செல்லாது அஞ்சி அடங்கினாள்.

"யான்அஃது அஞ்சினேன்; கரப்பவும் தான்அஃது
அறிந்தனள் கொல்லோ? அருளினள் கொல்லோ?
எவன்கொல், தோழி! அன்னை கண்ணியது?
வானுற நிவந்த பெருமலைக் கவாஅன்
ஆர்கலி வானம் தலைஇ, நடுநாள்
கனைபெயல் பொழிந்தெனக், கானக் கல்யாற்று
முளிஇலை கழித்தன, முகிழ்இணரொடு வரும்
விருந்துஇன் தீம்நீர் மருந்தும் ஆகும்;
தண்ணென உண்டு, கண்ணின் நோக்கி,
முனியாது ஆடப் பெறின், இவள்
பனியும் தீர்குவள்; செல்க என்றோளே." 1

**தவறு என்னுடையதே :**

தன் களவொழுக்கம் அறிந்து, தாய் கோபம் கொள்வது கண்ட அப்பெண், அங்கிருந்தால் தன்

1. நற்றிணை : 53. நல்வேட்டனார்.

கரப்பவும்-மறைக்கவும். எவன்கொல்-யாது. கண்ணியது-கருதியது. நிவந்த-உயர்ந்த. கவாஅன்-மலைச்சாரல். ஆர்கலி-இடி இடிக்கும். தலைஇ-சேர்ந்து. நடுநாள்-நள்ளிரவில். கனைபெயல்-பெருமழை. பொழிந்தென-பெய்ததாக. கானக் கல்யாறு-காட்டிலும் மலையிலும் நுழைந்தோடும் ஆறு. முளிஇலை-உலர்ந்த சருகு. முகிழ்இணர்-மலர்ந்த மலர்க்கொத்து. விருந்து-புதிய. முனியாது-வெறுக்காது. பனியும்-நோயும்.

கற்பிற்குக் கேடுண்டாம் என அஞ்சினள்; அதனால், அவ் வாண்மகனோடு அவனூர்க்குச் சென்றுவிட்டாள். பெண்ணின் தாய் "உற்றோர்க்கு உரியர் பொற்றொடி மகளிர்" என்ற உலகியலை உணர்ந்தவளாதலின், தன் மகள் தகுதியுடையான் ஒருவனுடன் சென்றது தக்கதே என்று கருதினளாயினும், தன் அன்பைக் கவர்ந்த அவள் பிரிவு அவளை மிகவும் வருத்திற்று. மணல் பரந்து அழகாகத் தோன்றும் தன் மாளிகை முற்றத்தில், தன் மகளோடு ஆடி மகிழும் மகளிரையும், அவர் கூடிஆடும் நொச்சி வேலி அமைந்த ஆடிடத்தையும், அவள் வளர்த்த கிளி, அவளைப் பலமுறை அழைக்கவும் அவள் வாராமையால் வருந்திவாடுவதையும் காணுந்தோறும், கண்கள் நீர் சொரியக்கலங்கினாள்; ஆனால் அந்நிலையில், தன்னைவிட்டுப் பிரிந்த மகள்மாட்டுச் சினம் கொண்டிலள்; மகள் செயல் அவளுக்குப் பிழையுடையதாகத் தோன்றவில்லை; அவள் பிரிவிற்குத் தானே காரணமாம் எனக்கருதினாள். தன் துயர் காணப் பொறாது, தனக்கு ஆறுதல் கூறுவர்பால், "இவ்வாறு நான் வருந்தப் பிரிந்துபோன என்மகள் குற்றம் உடையவளல்லள்; அவள்கொண்ட காதல், அருமையும் பெருமையும் உடையது; அதை நான் அறியாதுபோனேன். 'உன்மகள் அயலான் ஒருவன்பால் அன்புகொண்டுள்ளாள்' என்று ஊர்ப்பெண்டிர் பலர் ஒன்றுகூடிவந்து ஓயாது உரைத்தனர்; தக்க பருவத்தில், தகுதியுடையான் ஒருவனைத் தேர்ந்து, அவன்பால் அன்பு கொண்டு வாழ்வதே அறநெறியாம்; அதை என்மகள் அடைந்துவிட்டாள் என்பதை அவர் உரை அறிவித்தலான் இன்பம் தருவதாகத் தோன்றினும், அவர் ஓயாது உரைப்பதும், அவர் அதைக் கூறும் முறையும் துயர்தருவவாயின. அவ்வாறு இருந்தும், அவர் கூறக் கேட்ட பின்னரும், சிலநாள்வரை, அவள் களவொழுக்

கத்தை அறியாதேன்போல் வாளா இருந்தேன்; மீண்டும் அலர் எழுந்தது; அதனால், அவள் களவொழுக்கத்தை நான் அறிந்துகொண்டேன் என்பதைக்காட்டி அச் சுறுத்தும் கருத்தோடு, அவளை அழைத்து, 'மகளே! நின்நெற்றி பண்டுபோலாது புதுமணம் கமழ்கிறதே; காரணம் என்ன?' என்று ஒருமுறை கேட்டேன்; அதனால், தன் களவொழுக்கத்தை யான் அறிந்து கொண்டேன் என்பதைக் கண்டுகொண்டாள்; அதனால் பிறந்த நாணமே, அவளைப் பிரிந்துபோகத் தூண்டிற்று; ஆகவே, தவறு என்னுடையதே; அவள் தவறுடைய ளல்லள்" என்று கூறி வருந்தினாள்; என்னே அத் தாயின் தனியன்பு!

" ஐதே காமம்; யானே ஒய்யெனத்,
தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றத்து
ஓரை ஆயமும், நொச்சியும் காண்டொறும்
நீர்வார் கண்ணேன் கலுழும் என்னினும்,
கிள்ளையும் கிளைஎனக் கூஉம்; இளையோள்
வழுவிலள் அம்ம! தானே குழீஇ
அம்பல் மூதூர் அலர்வாய்ப் பெண்டிர்
இன்னா இன்னுரை கேட்ட சின்னாள்,
அறியேன் போல உயிரேன்;
நறிய நாறும் நின் கதுப்பு என்றேனே." 1

## பொய்யனை நம்பிப் போய்விட்டனளே!

மகள், தான் விரும்பும் காதலனைக் கைப்பிடித்துச் சென்று வாழத் தொடங்குவது வழுவாகாது; அஃது

1. நற்றிணை: 143. கண்ணகாரன் கொற்றனார்.

ஐது–நுண்ணிது. ஒய்யென–விரைவாக. தருமணல்–கொண்டுவந்த புது மணல். ஞெமிரிய–பரப்பிய. ஓரை ஆயம்–விளையாட்டுத் தோழியர். கலுழும்–வருந்தும். என்னினும்–என்னைக் காட்டிலும். கிள்ளை–கிளி. கிளை–உறவு. அம்பல்–அலர். சின்னாள்–சில நாள். உயிரேன்–மூச்சுவிட்டே னல்லன்; அதாவது வாய்திறந்து எதையும் கேட்டிலேன். நறிய–நறுமணம். கதுப்பு–கூந்தல்.

இயற்கையே என்பதை நன்கு அறிந்திருந்தும் தாயின் மனம் அமைதி பெறவில்லை. தன் காதலொழுக்கத்தைப் பேரன்பு காட்டி வளர்க்கும் என்னிடத்தும் கூறவில்லையே; என்னையும் ஏங்கவிட்டுப் போய்விட்டனளே என்ற நினைவில், அவள் போக்கறிந்து வருந்தாதிருக்கவும் இயலவில்லை. மகளின் இளமைக் கோலமே தன் கண்முன் நிற்கத், தனக்கு ஆறுதல் கூறுவாரிடத்தெல்லாம், "வீட்டின் முன்புறத்தே நாள்தோறும் நீரூற்றி அவள் வளர்த்த வயலைக்கொடி வளம்பெற்று விளங்குகிறது; அவள், நேற்று, பந்தும் பாவையும் வைத்துக்கொண்டு, அக்கொடியின் கீழிருந்து ஆடிக்கொண்டிருந்தாள்; அப்பொழுது, அவளறியாவாறு ஆங்கு வந்த ஒரு தாய்ப்பசு, அவ்வயலைக் கொடியைச் சிறிதே தின்றுவிட்டது. அதைப் பார்த்துவிட்டாள் அவள்; உடனே பந்தையும் பாவையையும் அங்கேயே எறிந்துவிட்டு, என்பால் ஓடிவந்து, வயிற்றில் அடித்துக்கொண்டு விம்மிவிம்மி அழுதாள். நானும் செவிலியும் அவளை அருகில் அழைத்து அணைத்துக்கொண்டு ஆறுதல் உரைத்து, தேன் கலந்த பாலைத் தந்து உண்ண வேண்டினோம். ஆனால், அவள் அதை வெறுத்துத் தள்ளிவிட்டு விம்மிவிம்மி அழத் தொடங்கினாள். நேற்று அவ்வாறு அழுத அவள், இன்று, யாரோ ஓர் இளைஞன் கூறிய சொல்லை நம்பி, அவன் பின் சென்று, கடத்தற்கு அரிய காட்டுவழியில் துன்புறுகின்றனளே; என் செய்வேன்!" எனக் கூறிக், கொடிய வழியில் இளம் பெண் அஞ்சுவளே! செய்வதறியாது திகைப்பளே! வருத்தம் அறியாது வளர்ந்தவள், வழியில் அல்லல் அடைவளே! என ஆங்கு அவள்படும் துன்பத்திற்காகத் துயர் உறுதல் அல்லது, அவள் போனது கண்டு புலம்பாத் தாயின் தனியன்பைப் பாராட்டுவோமாக.

" இல்எழு வயலை ஈற்று தின்றெனப்,
பந்து நிலத்துஎறிந்து, பாவை நீக்கி
அவ்வயிறு அலைத்த என் செய்வினைக் குறுமகள்,
மான்அமர்ப்பன்ன மையல் நோக்கமொடு
யானும் தாயும் மடுப்பத், தேனொடு
தீம்பால் உண்ணாள் ; வீங்குவனள் விம்மி,
நெருநலும் அனையள் மன்னே ; இன்றே
மை அணல் காளை பொய்புகலாக,
அருஞ்சுரம் இறந்தனள் என்ப ; தன்
முருந்து ஏர் வெண்பல் முகிழ்நகை திறந்தே."

## அவனைத் துன்புறுத்துவளே !

மகளைக் காணாது கலங்கியிருந்த தாயின்முன், தோழி சென்று நின்றாள் ; அவளைக் காணவே, அவள் துயர் மிகுந்தது ; அவளை அணைத்துக்கொண்டு, " மகளே ! உன் தோழி ஆடிய பந்து, ஆடப்பெறாது வறிதே கிடப்பதையும், அவள் வளர்த்த வயலைக்கொடி, நீரிடுவார் இன்றி வாடிக்கிடப்பதையும், அவள் இல்லாமையால் அழகிழந்துபோன ஆடிடம், மனை, மலர்ச்சோலை முதலியவற்றைக் காணுந்தொறும் காணுந்தொறும் கலங்குகிறது என் உள்ளம்" எனக் கூறிக் கலங்கினாள்.

மகளைக் காணாது கலங்கும் அவள் உள்ளத்தில் மற்றொரு கலக்கமும் குடிபுகுந்தது; மகள் போய்விட்டாளே

---

1. நற்றிணை : 179.

இல்-வீடு. எழு-வளர்ந்த. ஈற்று-கன்று ஈன்ற பசு. தின்றென-தின்றதாக. அவ்வயிறு-அழகிய வயிறு. அலைத்த-அடித்துக்கொண்ட. செய்வினை-கடமையில்வல்ல. குறுமகள்-இளைய மகள். மான் அமர்ப்பன்ன மையல் நோக்கம்-மான்போலும் மருண்ட பார்வை. மடுப்ப-ஊட்ட. வீங்குவனள்-அழுபவள். நெருநல்-நேற்று. அனையள்-அத்தகையவள். மைஅணல்-கறுத்த தாடி. புகல்-பற்றுக்கோடு. இறந்தனள்-சென்றனள். முருந்துஏர்-மயிலிறகின் அடிபோன்ற.

என வருந்தியவள், அவளைக் கொண்டுபோன அவள் காதலன், அவளை நன்னிலையில் வைத்துக்காக்கும் நல்லவன் என அறிந்து மகிழ்ந்தாள்; அதுகாறும் அவள் மகளையே சுற்றிச் சுற்றிவந்த அவள் அன்பு, அவனையும் பற்றிப் படரத் தொடங்கிற்று. அதனால் அவன் நல் வாழ்விலும் அவள் நாட்டம் சென்றது. அவனுக்கு எவ்விதத் துன்பமும் வருதல் கூடாதே என எண்ணி ஏங்கிற்று அவள் உள்ளம்; அந்நிலையில் அவ்விருவரும் கடந்துசெல்லும் வழிக்கொடுமை அவள் நினைவிற்கு வந்தது; ஞாயிறு தன் கொடுமையைக் காட்டிச் சிறிது ஆறியிருக்கும் காலம்; அவன் வெப்பத்தால் இலைகள் உதிர்ந்துபோக வறிதே நிற்கும் மரங்களே நிறைந்த வழி; மரக்கிளையொன்றில் தனியே இருந்து, தன்னைவிட்டுப் பிரிந்த பேட்டினைக் கூவிக்கூவி ஓயாதழைக்கும் புறுவின் குரல் அல்லது வேறு ஒலிகேளா அமைதி நிலை; இந் நிலையில், வெயிலின் வெப்பம வருத்தும் நண்பகற் காலத்தில் நடந்து செல்கின்றனர்; அந்நினைவு வரவே, "தோழி! இந்நிலை கண்டு அவன் அஞ்சான்; அக் கொடுமையைத் தாங்கிக்கொள்ளும் உள்ளம் அவனுக் குண்டு; ஆனால், அக்கொடுமையினை அவள் தாங்கிக் கொள்ளாள்; மிகவும் தளர்ந்துவிடுவள்; ஆனால் அவள் தளர்ச்சி கண்டு நான் கலங்கவில்லை; அதைப் போக்க அவன் கடமைப்பட்டுளான்; அவன் அதைப் போக்கி விடுவன்; ஆனால், அவள் தளர்ச்சி கண்டு அவன் கலங்குவன்; 'இவ்வளவு மென்மைத் தன்மையுடையாளை இக்கொடிய வழியில் கொண்டுவந்தனனே' என எண்ணி அவன் உள்ளம் வருந்தும்; அவன் வருத்தத்தைத் தணிப்பவர் எவரும் இல்லை; அதனால், உடன்கொண்டு சென்றால், இன்புற்று வாழலாம் என எண்ணி அழைத்துச் சென்ற அவனை, இவள் வருத்திவிடுவள் என்று

எண்ணியே என் உள்ளம் ஏங்குகிறது ; என்ன செய்வேன் தோழி !" என்று கூறி வருந்தினாள்.

மகள் நல்வாழ்வு பெறவேண்டும் என விரும்பும் தாய், அம்மகளை மணக்கும் அவனும் துயரறியாப் பெருவாழ்வு வாழவேண்டும் என எண்ணுகிறாள் ; தாயின் அன்புத் தளையின் ஆற்றல்தான் என்னே !

"வரியணி பந்தும், வாடிய வயலையும்,
மயிலடி அன்ன மாக்குரல் நொச்சியும்,
கடியுடை வியன்நகர் காண்வரத் தோன்றத்,
தமியேகண்ட தண்டலையும், தெறுவர
நோய் ஆகின்றே, மகளை ! நின் தோழி,
எரிசினம் தணிந்த இலைஇல் அம்சினை
வரிப்புறப் புறவின் புலம்புகொள் தெள்விளி,
அருப்பு அவிர் அமையத்து அமர்ப்பனள் நோக்கி
இலங்கிலை வென்வேல் விடலையை
விலங்கு மாலையரிடை நலியுங்கொல் ? எனவே." 1

**மகள் மணக்கோலம் காணும் மாண்பிலேன் நான் :**

மகளின் மணக்கோலம் கண்டு மகிழ்வதில் பேரின்பம் காண்பவள் தாய். அம்மகிழ்ச்சிக்கு இணையாய மகிழ்ச்சியை அவள் வேறு எதிலும் காணாள். அதனால் மகளின் மண

1. நற்றிணை : 305. கயமனார்.

வரிஅணிபந்து - வரிந்து கட்டிய அழகிய பந்து. மாக்குரல் - கரிய கொத்து. நொச்சி-நொச்சி மரம் சூழ்ந்த இடம். கடி-காவல். வியன்நகர்-அகன்ற மனை. தண்டலை-சோலை. தெறுவர-வருத்த. எரி-ஞாயிறு. அம் சினை-அழகிய கிளை. வரிப்புறப்புறவு-வரி பொருந்திய முதுகினை உடைய புறா. புலம்புகொள்-அச்சம் மிகுமாறு. தெள்விளி-தெளிவாக எழும் குரல். உருப்புஅவிர்-வெப்பம் பொருந்திய. அமர்த்தனள்-மருண்டு. இலங்குஇலை-விளங்குகின்ற இலைபோன்ற. விடலை-இளைஞன். விலங்கும்-குறுக்கே தோன்றும். ஆர்இடை - அரிய வழியில். நலியுங்கொல் - வருத்துவள் கொல்லோ.

விழாவை எதிர்நோக்கி நிற்கும் அத்தாய்,
காணும் வாய்ப்பினை இழந்து போவாளாயின்,
துயர் அளவிறந்து பெருகும். அந்நிலையில்,
ளிர்க்கு மணங்கண்டு மகிழ்வார் வேறு சிலரைக்
நேரினும், அவரைக் காரணமின்றியே வெறுக்கும்
தாயுள்ளம். வேறு சிலர் அவர் வயிற்றில் பிறந்த
ரிர்க்கு மணம் செய்து மகிழ்வதைக் காண, இவள் ம
வம்பும் என்றால், தன் மகள் மணத்தைத் தான் கண்
விழாவாறு தடை செய்துவிட்டு, அவளுக்குத் தாடே
ணம் செய்து மகிழ்வாரைக் காணின், அவள் உள்ளப
துயைத் தாங்குமோ? ஒரு தாய்க்கு அத்தகைய துயர்நிலை
ந்து வாய்க்கின், அந்நிலையில், அத்துயர் மிகுதியால்
கள் தன் காவலைக் கடந்து களவொழுக்கத்தில் புகுந்த
ால் தோன்றும் துயரமோ, அன்பு சொரிந்து வளர்த்த
ன்னை மறந்து அவள், மறைந்தமையால் தோன்றும்
யரமோ பெரிதாகத் தோன்ற; மகள் மணவினை
ணமையால் உண்டாம் கலக்கமே முன்னிற்கும்.

ஒரு பெண் தாயை மறந்து தன் காதலன்பின்
ன்றுவிட்டாள். அவர்கள் இருவருக்கும், அக்காதலன்
னயில் மணம் நிகழத் தொடங்கிவிட்டது; மணநாளுக்கு
நாள் நிகழும் சிலம்புகழி நோன்பு எனும் விழாவை,
வன் தாய் முன்னின்று நிகழ்த்தினள்; மகள் மணப்
வம் பெற்றுவிட்டாள் என்பதை, ஆடும் பருவத்தை
ள் கடந்துவிட்டாள் என்பதை அறிவிக்கும் அறிகுறி
இளமைப் பருவம் முதலா, அவள் காலில் கிடந்து
தந்த சிலம்பை அகற்றும் அந்நிகழ்ச்சியே, மண
நிகழ்ச்சிகளில் தலையாய சிறப்புடைத்து. அதைக்
ாத் தாய் உள்ளம் துடித்துக் கிடக்கும்; அந்த நிகழ்ச்
அவள் காணக் கொடுத்துவைக்கவில்லை. அதனல்
ினள் அத்தாய்; "அவள் காலில் சிலம்பணிந்து

ந நான், அச்சிலம்பை அகற்றும் அவ்வரிய
மையக் காணுவாறு காதலன்பின் ஓடிவிட்ட
மையால் போலும், அவள் அடி, கொடிய பாலை
தில் சென்று துயர் உற்றது'' என எண்ணு
ம் செய்துவிட்டது. அவ்விழாவைக் காண
த்துக், காணப்பெருமையால் கலங்கியது ஒ
யுள்ளம்; என்னே அத்தாய் அன்பு!

"அதர் உழந்து அசையின கொல்லோ, ததரல்வாய்ச்
சிலம்பு கழீஇய செல்வம்
பிறர் உணக் கழிந்த என் ஆய்இழை அடியே" 1.

---

1. நற்றிணை : 279. கயமனார்.

அதர்-வழி. உழந்து - வருந்தி. அசையின - தளர்ந்தன. கழீஇய செல்வம்-சிலம்பு அகற்றும் விழாச் சிறப்பை. உண-கண்டு கழிந்த-பிரிந்த. ஆய்இழை-ஆராய்ந்த அணிகளை அணிந்த என் மகள்